


புத்துணர்வு, சுறுசுறுப்பு, உடல்நலன்.. ஆஹாஹா,
எல்லாம் லைப்பாய் ஸ்நானத்தின் பலன்! கிருமிகள்
தொற்றுவதைத் தடுக்க யாரால் இயலும்; ஆனால்
அழுக்குடன் கிருமிகளைக் களைந்து அகற்றுவது லைப்பாய்.
நம் குடும்ப முழுமைக்கும் நல்வாழ்வு நல்குவது லைப்பாய்
நல்லுறவு...எல்லாம் இன்பமயம்!

**லைப்பாய் இருக்குமிடம் அதுவே ஆரோக்கியம் இருக்குமிடம்**

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

L.29-X52 TM




# எழிலை எடுத்துக் காட்டும் ...

உங்கள் சரும நிறத்தோடு நேர்த்தியாக இணைந்து, சருமத்தின் இயற்கை எழிலைப் பளிச்சிடச் செய்கிறது பரிபூரணமான லக்மே முகப் பவுடர். அதன்மூலம் மேனி எழில் பெறும் மாசற்ற மெருகினை நீங்கள் விரும்புவீர்கள். 3 சைஸ்கள் ... மேனி நிறத்துக்குப் பொருத்தமான நேசுரல், ராகேல், கோல்டன்பீச், ரோஸ்கோரல், ஸன் டான், க்ளோயிங் அம்பர் என்னும் 6 வித நிறங்களில் கிடைக்கிறது.

# லக்மே

முகப் பவுடர்

1-27-5

சுபகிருது, வைகாசி 14

# கல்கி

மே, 27, 1962

## பொருளடக்கம்



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.




சிகரெட் உற்பத்திக்கான ஆள்பலம், நிதி, பொருள் நிறைவு ஆகிய எவ்வளவோ வசதிகள் நம் நாட்டுக்கு உள்ளன. எனினும் பாரதத்திலே, சிகரெட்டுத் தொழில் தனக்குரிய உயர்நிலையை இன்னும் எய்த முடியவில்லையென்றால், அது இந்திய மூலதனம் சுணங்கிப்போயிருக்கிறது என்பதனாலோ, அல்லது தேர்ச்சிவாய்ந்த தொழிலினம் இல்லாமையாலோ அல்ல. ஆனால் இந்தியாவில் வாணிபக் கூட்டுறவு அமைத்த அந்நியர்களின் ஏகபோக உரிமையாட்சியினால்தான்.

## புகையிலையின் வரலாறு... 9

Panama

20

CIGARETTES




# பனாமா

**ஒரு நல்ல சிகரெட்—**
**இறுதிவரை இன்பமூட்டுவது**

பம்பாய்—57.

பாரதத்தில் இத்தகைய தேசீய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

GT 709 TM

Greens' Advtg.



மலர் 21 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 43

# கடைத் தேங்காய்

கடைத் தேங்காயை எடுத்து வழிப்பிள்ளையாருக்கு உடைப்பது என்று ஒரு வழக்கு உண்டு. ஆஜாத்–காஷ்மீர் பகுதிக்கும் சீனாவுக்குமிடையே எல்லைப்புறத்தை நிர்ணயிப்பது பற்றிய பாகிஸ்தான் — சீனா நட்பு முறை இதைத்தான் நினைவூட்டுகிறது.

பாகிஸ்தான், சீனா ஆகிய இரண்டு நாடுகளும் இந்தியாவுக்கு எதிராகச் செயல்பட்டு வருகின்றன. இந்திய மண்ணில் இரண்டு நாடுகளும் ஆக்கிரமிப்பு செய்திருக்கின்றன. ஆகவே இரு நாடுகளும் குற்றவாளி நாடுகளே.

குற்றம் சம்பந்தப்பட்டவரையில் இரண்டு நாட்டுக்கும் அதிக வித்தியாசம் இல்லை. காஷ்மீரத்தின் ஒரு பகுதியைப் பாகிஸ்தான் தன் வசம் வைத்துக்கொண்டு விட்டது. வடமேற்கு — வடகிழக்கு எல்லைகளில் பெரும் பகுதியைச் சீனா தனது ஆதிக்கத்துக்கு உட்படுத்திக் கொண்டுவிட்டது.

ஆனால் அரசியல் அமைப்பில் இரண்டு நாட்டுக்கும் பெரும் வித்தியாசம் உண்டு. ஒன்று கம்யூனிஸ நாடு. மற்றொன்று யதேச்சாதிகார நாடு. ஒன்று ஐ. நா.வில் அங்கம் வகிக்கும் நாடு. மற்றொன்று ஐ. நா. சபையில் அனுமதிக்கப் பெறாமல் பகிஷ்கரிக்கப்பட்ட நாடு. ஒன்று மேற்கு வல்லரசுகளின் கூட்டத்துடன் சார்பு கொண்டு, 'ஸீஸன்டோ' 'நேட்டோ' 'ஸீட்டோ' போன்ற ராணுவ ஒப்பந்த ஏற்பாடுகளில் பங்கு கொண்டுள்ள நாடு. மற்றொன்று கம்யூனிஸத் தத்துவம், கோட்பாடு முதலியன குறித்த கருத்து ஒற்றுமை மூலம் ருஷ்ய வல்லரசுடன் சார்பு கொண்டு இயங்குவது. பாகிஸ்தான் பகிரங்கமாகத் தன்னை விரோதி என்று ராஜதந்திர பரிபாஷையில் சொல்லிக் கொள்ளாவிட்டாலும், விரோதியின் நடவடிக்கைகளைச் செய்து கொண்டிருக்கிறது. சீனாவோ பஞ்சசீலம், நல்லுறவு, நட்பு, பண்பாடு, நாகரிகம் என்றெல்லாம் காதுக்கினிய வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டே, தனது துராகிரகமான செயல்களை மேற்கொண்டுள்ளது. ஒன்று பகிரங்க எதிரி; மற்றொன்று நயவஞ்சக எதிரி.

இவ்வளவு வித்தியாசங்கள் தங்களுக்குள்ளே இருக்கும்போது, ஆக்கிரமிப்புக்கு உட்பட்ட காஷ்மீர் பகுதிக்கும் சீனாவுக்குமிடையே எல்லைக் கோட்டை நிர்ணயிக்க அவை நடத்தும் பேச்சு வார்த்தைகள் இரண்டு திருடர்களுக்குள்ளே கொள்ளைச் சொத்தைப் பங்கு போட்டுக் கொள்வதற்காக நடக்கும் பேரத்தைப் போன்றதே தவிர வேறு இல்லை.

இந்த நிலையில் இந்தியா செய்ய வேண்டியது என்ன? நடந்து கொள்ள வேண்டிய விதம் எப்படி?

நமது அரசாங்கம் சமீபகாலம் வரையில் சீனாவிடம் பரிவு காட்டியே நடந்துவந்துள்ளது. அதன் விளைவே இப்போது ஏற்பட்டுள்ள நிலை. ருஷ்யாவிடம் நட்பினையேகாட்டி, அதனால் அந் நாட்டிடமிருந்து யுத்த தளவாடங்களைப் பெற்றிருக்கிறது இந்தியா. மேலும் சக்திவாய்ந்த யுத்த தளவாடங்களை, முக்கியமாக அதிக உயரத்தில் மலை உச்சிகள்மீது பறந்து செல்லக்கூடிய விமானங்களை வாங்க ஏற்பாடுகள் செய்திருக்கிறது. இப்படிச் செய்வதற்குப் பல காரணங்கள் சொல்லப்படுகின்றன. காரணங்கள் சொல்லுவது கஷ்டமல்ல. எந்தக் காரியத்தையும், ஏதாவது ஒரு காரணத்தைக் கூறி, சரியென்று நிலை நாட்டி விடலாம். ஆனால், ருஷ்யாவிடமிருந்து பெறும் ராணுவ உதவிகளால் நமக்கு எந்தக் காலத்திலும் அபாயம்தான் ஏற்படுமே தவிர நன்மை ஏற்படும் என்று நம்புவதற்கில்லை. ஏனெனில், ருஷ்யா கடைப்பிடிக்கும் கொள்கை, சந்தர்ப்பங்களையும், சூழ்நிலைகளையும்

அனுசரித்து மாறக்கூடிய தன்மை வாய்ந்தது. நடைமுறை, செயல் முறைகளிலும் நிச்சயமான, ஸ்திரமான போக்குகள் காணப்படா. இப்படி இருப்பது ருஷ்யாவின் குற்றமல்ல. ருஷ்யா கடைப்பிடிக்கும் கம்யூனிஸத் தத்துவத்தின் முறையே அப்படி.

பகிரங்க எதிரியைக் காட்டிலும் நயவஞ்சக நண்பன் எப்போதும் ஆபத்தானவன். சீனாவின் நடத்தை இந்த விஷயத்தில் நமக்கு நிதர்சனமான எடுத்துக் காட்டு. 'சீனாவும் ருஷ்யாவும் நெருங்கிய நண்பர்கள் அல்ல, இவ்விரு நாடுகளுக்குள்ளே வேற்றுமை வேண்டிய அளவு உண்டு. ஆகவே சீனாவின் நடவடிக்கைகளை ருஷ்யா ஆதரிக்காது' என்று சுட்டிக்காட்டி ஒப்புக்கு வேண்டுமானால் சமாதானப் படுத்திக் கொள்ளலாம். ஆனால் இது உண்மை சமாதானமாகாது. இதுவரையில் இந்த விஷயத்தில் நம்பிக்கை ஏற்படும் வகையில் ஒன்றும் நிகழ்ந்து விடவில்லை.

சீனாவைப் பற்றிக் கண்டிப்புத் தொனிக்கும் தோரணையில் பேசுவது மட்டும் போதாது. நடைமுறையில் அதைச் செயல்படுத்த வேண்டுமானால், மேற்கு வல்லரசுகளை அதிகமாகச் சார்ந்தே செயல்பட வேண்டும். தனித்து நிற்கும் கூட்டுசேராக் கொள்கையைத் தளர்த்திக் கொடுக்க வேண்டியது அவசியமாகும்.

சில காலத்துக்கு முன்பு சீனாவுக்கு எதிராகப் பாகிஸ்தானுடனும், இதர நடுநிலைமை நாடுகளுடனும் ஒரு பாதுகாப்பு உடன்படிக்கை செய்து கொள்ளும் வாய்ப்பு இருந்தது. அந்தச் சந்தர்ப்பத்தை நாம் பயன்படுத்திக் கொள்ளவில்லை. சீனாவின் விஸ்தரிப்பு வேகத்தினால் தாக்குண்டு தவிக்கும் நாடுகள் பல இருக்கின்றன. இவையெல்லாம் சிறு நாடுகள். தனித்துச் செயல்பட இயலாத நாடுகள். அந்நாடுகளுடன் ஓர் உடன்படிக்கை செய்து கொண்டு பாதுகாப்பைப் பலப்படுத்தலாம். இந்தப் பாதுகாப்பு அமைப்பும், மேற்கு வல்லரசுகளின் பாதுகாப்பு அரணை அநுசரித்துச் செயல்படுமானால் மேலும் நன்மை பயக்கும்.

மேற்கு நாடுகள் நிலையான நிச்சயமான அஸ்திவாரத்தின் மீது செயலாற்றுபவை. ஜனநாயகம், சுதந்திரம் முதலிய கொள்கைகளில் ஆழ்ந்த பற்றுள்ளவை. இதை இந்தியா நிதர்சனமாகப் பலவிதத்திலும் கண்டிருக்கிறது. எனவே நமது நாட்டின் எல்லைப்புறக் கொள்கை விஷயத்திலும் நம்பக் கூடிய இந்த வல்லரசுகளைச் சார்ந்து செயல்படுவது தான் வழி.

தற்போது கடைப்பிடிக்கப்பட்டுவரும் கொள்கைக்கு மாறுபட்ட கருத்தைக் கேட்கவே ஆட்சியாளருக்குக் கசப்பாகத் தான் இருக்கும். கசப்பாக இருந்தாலும், நாட்டின் நலனுக்கு இவ்வாறு செயல்படுவதுதான் உகந்தது என்றால், நடைமுறையில் அவ்விதம் செய்யத் தயக்கம் காட்டக் கூடாது.

## உலக அரங்கில் சத்தியாக்கிரகம்

சென்ற வாரம் வெளியான ராஜாஜி-நேருஜி கடிதப் போக்குவரத்தைப் படித்தவர்கள், அதிலும் காந்தி யுக சத்தியாக்கிரக நாட்களை நினைவில் வைத்திருப்பவர்கள் மிகவும் வருந்துவார்கள்.

அக்கடிதங்களிலிருந்து இரண்டு விஷயங்கள் நேருஜியின் மனத்தை உறுத்துகின்றன என்பது தெரிகிறது. அமெரிக்கா விஷகுண்டுகளைச் சோதனை நடத்தும் தீவுக்கு இந்திய சர்க்கார் ஒரு சத்தியாக்கிரகக் கப்பல் அனுப்பினால், அது 'அமெரிக்க நாட்டுக்கு விரோதமாக எடுத்த நடவடிக்கையாகும்' என்கிறார். அது மட்டுமின்றி இந்த நடவடிக்கையினால் 'மிக விபரீத விளைவுகள் ஏற்படக் கூடும்' என்றும் அஞ்சுகிறார்.

அமெரிக்கா நடத்தும் விஷ குண்டு சோதனைகளின் விபரீத விளைவுகளைப் பற்றி நேருஜிக்குச் சந்தேகமில்லை.

இதைத் தடுத்து நிறுத்துவதற்கு உலகில் ஓர் உபாயம் உண்டென்றால், அது சத்தியாக்கிரக முறையைத் தவிர வேறில்லை. 'இது அமெரிக்க அரசாங்கத்துக்கு விரோதமாகத் தோன்றும்; விபரீத விளைவுகள் ஏற்படும்' என்று சொல்லும் போதுதான் வியப்பாக இருக்கிறது. இவ்வளவு சீக்கிரத்தில் சத்தியாக்கிரக நாட்களை மறந்து விட்டோமே என்று வருத்தமாக இருக்கிறது.

அணுகுண்டு யுத்தம் மூண்டால் உடனடியாக உலகம் அழிந்து விடும். எந்த வல்லரசும் எந்த நாடும் பிழைக்கப் போவதில்லை. ஆனால் தங்கள் பலத்தைக் காட்டிக் கொள்ளுவதற்காகப் போட்டி போட்டுக் கொண்டு இரண்டு வல்லரசுகளும் நடத்தும் அணுகுண்டு சோதனைகளினால் ஏற்படக் கூடிய தீங்குகள் சொல்லி முடியாதவை. கூனாகவும், குருடாகவும், சொல்லத் தெரியாத

காலி நாற்காலி !

காங்கிரஸ் அக்கிராசன பீடம்

இந்த நாற்காலிக்கு ஆள் தேவை.

- மின்சார நாற்காலியல்ல
- மூட்டைப் பூச்சி, கரப்பான் இல்லை.
- நிம்மதியாகத் தூங்கலாம்.
- நாற்காலி சாயாது

— என்னுடைய நாற்காலியைப் போலில்லை.

— நேரு.

PK

விலைவாசி உயர்வு

சர்க்கார் வர்த்தகமும் கூட்டுறவுக் கடைகளும்

"கவலை வேண்டாம், இந்த யானை அதைத் துரத்திவிடும்!"

நோய்கள் கொண்ட மக்களாகவும் மனித குலத்தை மாற்றி வாழ்வையே நரக மாக்கும் இந்தச் சோதனை வெடிகளினால் பரவும் விஷ வாயு. இதை எல்லா விஞ் ஞானிகளுமே சொல்லுகின்றனர்.

சென்ற ஆண்டு திடீரென்று ருஷ்யா குண்டுகளை வெடித்துச்சோதனை நடத்திய போது, ருஷ்யாவை உலகம் பகிஷ்காரம் செய்து, அந்தச் சர்க்காருடன் யாதொரு தொடர்பும் வைத்துக் கொள்ள மறுக்க வேண்டும் என்று ராஜாஜி வெகு தீவிர மாகச் சொன்னார். அதைப் பொருட் படுத்தாமல் இருந்ததால் தான் இந்த விபரீத விளைவு.

அமெரிக்காவிடம் பொருளாதார உதவி பெற்றுக் கொண்டிருக்கும்போதே ருஷ்யாவிடம் ராணுவ விமானம் வாங்கு வது அமெரிக்காவுக்கு விரோதமாகப் படாது என்று நேருஜி கருதுகிறாரா?

உலக க்ஷேமத்தைக் கருதிப் பல விஞ்ஞானிகளின் கருத்துக்கு இயைந்த வாறு காந்தியப் பண்புக்கு ஒத்த வகை யில் எடுக்கும் நடவடிக்கையை 'விரோ தச் செயல்' என்றும் அதனால் விபரீத விளைவுகள் ஏற்படும் என்றும் சொல்லு வது விந்தையாக இருக்கிறது!

சத்தியாக்கிரகம் அமெரிக்க மக்களை யாவது சர்க்காரையாவது எதிர்த்தல்ல. ருஷ்யா தொடங்க விருக்கும் அணு குண்டு சோதனைகளைத் தடுக்கவும், மொத் தத்தில் இரண்டு வல்லரசுகளும் விஷ வாயுவைப் பரப்பும் செயலை எதிர்த்தும் தான் என்று ராஜாஜி விளக்கியிருக்கிறார்.

நமது சத்தியாக்கிரக வரலாற்றைச் சற்று நினைவுபடுத்திக் கொள்வோம். பிரிட்டிஷ் அரசாங்கத்தோடு கடுமை யான சத்தியாக்கிரகப் போர் நடத்தி னோம். விரோதியான பிரிட்டனும் இந்தியாவும் விடுதலை பெற்ற அதே நிமிஷத்தில் சிநேகம் கொண்டாடியதை உலகம் கண்டு வியந்தது. இதுதான் சத்தியாக்கிரகத்தின் தனிச் சிறப்பு. சத்தியாக்கிரகிக்கு விரோதி என்பவனே கிடையாது. அப்படி யிருக்க நேருஜி விரோதச் செயலாகப் படும், விபரீத விளைவுகள் ஏற்படும் என்றெல்லாம் சொல்வது சரியாக இல்லை. என்ன விளைவு ஏற்பட்டாலும் நல்ல விளைவா கத்தான் இருக்கும்.

பிரதமர் நேருஜி, முப்பது கோடி பாரத நாட்டு மக்களின் எதிர்ப்புக்குர லாகக் கப்பலும், கப்பலில் ராஜாஜியை யும் அனுப்பினால் அமெரிக்க அரசாங்கத் தின் மனச்சாட்சி ஊர்ந்து அறிவில் சிறிது ஒளி ஏற்படும்! பாரத அரசாங்கத் தின் இந்த நடவடிக்கையைக் கண்டு உலகிலுள்ள மற்ற நடுநிலைமை வகிக்கும் நாடுகளும் ஒன்றன் பின் ஒன்றாகச் சோதனைகளை எதிர்க்க முன்வரும்.

காந்திஜி சத்தியாக்கிரகம் எனும் புது ஆயுதத்தை இந்திய மக்களுக்கு அளித்து வீறு கொண்டு எழச் செய்து விடுதலை பெறச் செய்தார். அந்த அரிய ஆயு தத்தை உலக அரங்கில் கையாண்டு மனித குலத்துக்கு மறக்கவொண்ணாச் சேவை செய்யக் கூடிய வாய்ப்புக் கிட்டி யிருப்பதைத் தவற விடுவது பரிதாபம்.

# என்ன சேதி ?

### "லாபகரமாக இல்லை"

சமுதாய நல அபிவிருத்தி, கூட்டுறவு இவ்விரண்டு இலாகாக்களுக்கான மானிய கோரிக்கை மீது லோக சபையில் நடந்த விவாதத்தின் போது, பல இடங்களில் கூட்டுறவுப் பண்ணைகள் லாபகரமாக நடைபெற வில்லை என்று உத்தரப் பிர தேசத்து அங்கத்தினர்கள் புகார் செய் தனர். ''கிராமப் புறங்களில் உள்ள கூட்டுறவுச் சங்கங்களில் செல்வாக்கு படைத்த சுயநலமிகள் ஆதிக்கம் செலுத்துகின்றனர்'' என்றும், ''பல இடங்களில் சர்க்கார் அதிகாரிகள் ஆதிக் கம் செலுத்துகின்றனர்'' என்றும், ''இவற்றினால் ஏராளமான ஊழல் களுக்கு இடம் உண்டாகிறது. கிராம வாசிகளுக்கு எவ்வித அனுகூலமும் கிடைப்பதில்லை'' என்றும் அவர்கள் எடுத்துச் சொன்னார்கள். கூட்டுறவுப் பண்ணைகள் லாபகரமாக நடக்காததால் விவசாய அங்கத்தினர்கள் கஷ்டப்படு கிறார்கள் என்றும் அவர்கள் சொன் னார்கள். உத்தரப் பிரதேசத்தில் தாங்கள் கண்ட அனுபவத்தைக் கொண்டே அவர்கள் பேசியிருந்தாலும், மற்ற ராஜ் யங்களிலும் நிலைமை ஏறக்குறைய இதே மாதிரிதான் இருக்கிறது. மேன்மேலும் கூட்டுறவுப் பண்ணைகள் நிறுவுமுன்னர் ஏற்கனவே நாட்டில் இயங்கிக் கொண் டிருக்கும் பண்ணைகள் எவ்வாறு செயல் பட்டு வருகின்றன என்பதைக் குறித்து விசாரணை நடத்துவது மிகவும் அவசியமாகும். ஒவ்வொரு ராஜ்ய அர சாங்கமும், சட்டசபை அங்கத்தினர் களில் விவசாய அனுபவம் உள்ளவர் களைக் கொண்டு ஓர் உப கமிட்டி அமைத்துப் பரிசீலனை செய்தால் கூட் டுறவுப் பண்ணைகள் பற்றிப் பல ருசி கரமான தகவல்கள் கிடைப்பதுடன்,







டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன் அவர்கள் ஜனாதிபதியான பின் முதன் முறையாக இப்போது சென்னைக்கு விஜயம் செய்கிறார்கள். இந்த மகிழ்ச்சிகரமான சமயத்தில் அவர் சென்ற ஆண்டுக் கடைசியில் 'கல்கி' காரியாலயத்துக்கு வருகை தந்து சிறப்பித்ததன் பெருமித நினைவுகளை வாசகர்களுடன் பகிர்ந்து கொள்கிறோம்.

1. ஸ்ரீ சதாசிவம்—ஸ்ரீமதி எம். எஸ். தம்பதி விருந்தினரை வரவேற்கின்றனர். 2. பத்திராதிபருடன் ஜனாதிபதி. 3. அன்பாலும், அறிவாலும் இணைந்த மாமேதைகள். 4. 'கல்கி' அதிபர் குடும்பத்தினருடன் இன்றைய குடியரசுத் தலைவர். 5. 'கல்கி' அச்சகத்தைப் பார்வை யிடுகிறார் ஸ்ரீ ராதாகிருஷ்ணன்.





சமீபத்தில் புதுதில்லி தேசீய கலாசார ஸ்தாபனத்தினர் ஸ்ரீ தியாகராஜ சுவாமி களின் 203-வது ஜயந்தி நன்னாளைக் கொண்டாடிய போது டாக்டர் ராஜேந்திரப் பிரஸாத் அவர்கள் நாத யோகியின் திருஉருவப்படத்துக்கு மாலை அணிவித்து மரியாதை செய்தார்.

---

இவற்றின் மூலம் ஏதேனும் நன்மை கிடைத்திருக்கிறதா, உற்பத்தி சிறிதேனும் பெருகியிருக்கிறதா என்பதும் இதனால் எவ்வளவு கஷ்டங்கள் ஏற்பட்டிருக்கின்றன என்பதும் தெரிய வரும்.

## விலையே, இறங்கு கீழே!

விலை உயர்வைக் கட்டுப்படுத்தக் கூட்டுறவு முறையில் நியாய விலைக்கடைகளை நாடெங்கிலும் ஏற்படுத்தி, விநியோகத்தில் ஒழுங்கு முறையை உண்டாக்கச் சர்க்கார் திட்டமிட்டுள்ளார்கள். சென்னையில் இம்மாதிரி 'ஸ்டோர்கள்' ஆரம்பிக்கப்பட்டு விட்டன. இவற்றின் மூலம் எவ்வளவுதூரம் விலைகளைக் கட்டுப்படுத்தக் கூடும் என்பது விவாதிக்க வேண்டிய விஷயம். ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம். பொதுமக்களிடமிருந்து வசூலிக்கப்படும் வரிப் பணம் திட்டச் செலவுகளுக்கும், நிர்வாகச் செலவுகளுக்கும் விரயமாவதுடன் இனிமேல் கூட்டுறவுக் கடைகளில் கொள்முதல் செய்யவும் உபயோகமாகும். வரிகளின் காரணமாக, ஏற்பட்டிருக்கும் விலை உயர்வை, வரிப் பணத்தைக் கொண்டே கட்டுப்படுத்த முயற்சி செய்கிறது நமது அரசாங்கம். ஒரு தவற்றைத் திருத்த மற்றொரு தவறு என்ற முறையில் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுகின்றன.

## பொன்னான கருத்துக்கள்

வெளி நாடுகளின் ராஜதந்திரப் பிரதிநிதிகள் அளித்த விருந்து உபசாரத்தில் பேசுகையில் ஜனாதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணன் கூறிய நல்லுரைகள் பொன்னான கருத்துக்கள் கொண்டவை.

> ''விஷயங்களை மிகைப்படுத்திக் கூறலாகாது; ஒருவருக் கொருவர் முரணாக வேலை செய்து கொண்டிருப்பதால் உலகத்துக்குப் பிரயோசனமில்லை. மனிதர்கள் நிம்மதியாக வாழ்வதற்கு ஏற்ற இடமாக உலகம் இருக்கவேண்டும். இந்த லட்சியத்தை நிறைவேற்றி வைக்க நாம் எல்லோரும் ஒத்துழைக்க வேண்டும். இதில் நாம் கூட்டாளிகளே ஒழியப் போட்டிக்காரர்களல்ல''

என்று அவர் உருக்கமாகச் சொன்னார். உலகம் தற்போதுள்ள அமைதியற்ற நிலையில் ராஜதந்திரிகளுக்கு முற்றிலும் அவசியமான உபதேசம் இது. உலக அறிஞர்களும், விஞ்ஞானிகளும் மனித வாழ்வில் அக்கறையுள்ள பெரியோர்களும் ஒருமுகமாகக் கண்டனம் செய்தும், அணு ஆயுத சோதனைகளைத் தொடர்ந்து நடத்திக் கொண்டு நாம் சுவாசிக்கும் காற்றை விஷ மயமாக அமெரிக்கா ஆக்கிக் கொண்டு வருகிறது. வல்லரசுகளுக்குள் ஏற்பட்டுள்ள பலப் போட்டியின் விளைவாகத் தோன்றியுள்ள இந்த அபாயம் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே போகிறது. ஒரு நாட்டைப் பின்பற்றி மற்றொரு நாடு என்று சோதனைகளும் விரிவடைந்து வருகின்றன. அணு ஆயுத சோதனைகளினால் ஏற்படும் அபாயம் போதாது என்று யுத்தமே நெருங்கிக் கொண்டு வரும் அபாயமும் அதிகரித்து வருகிறது. லாவோஸில் கம்யூனிஸ்டு படைகளின் முன்னேற்றத்தைத் தடுத்து நிறுத்த முன்னெச்சரிக்கையாக அமெரிக்கப் படை போர்க்களத்துக்கு அனுப்பப்பட்டிருக்கிறது. தாய்லாந்திலும் அமெரிக்கத் துருப்புக்கள் போருக்குத் தயாராக நிறுத்தப் பட்டிருக்கின்றன. இம்மாதிரி அமைதியற்ற நிலைமையில் யுத்த பீதியை அகற்றவும், சுமுகமான சூழ்நிலைகளை ஏற்படுத்தவும், ராஜதந்திரிகளால் பெருமளவுக்கு முடியும். மனிதத் தன்மையுடன் அவர்கள் செயல்படுவதன்மூலம் உலகத்தில் அமைதியை நிலைநாட்ட உதவி செய்யலாம். ஆனால் அவர்கள் எப்படிச் செயல் படுவார்கள் என்பதைப் பற்றி நிச்சயமாக எதுவும் சொல்ல முடியாது. சொல்ல முடிந்தால் அவர்கள் ராஜதந்திரிகள் ஆவார்களா?

# ஜய ஜய சங்கர

சின்னக் குழந்தைகள் போல் விளையாடிச்
சிரித்துக் களித்திடுவான் — பாரதியார்

## 3. பிள்ளைப் பிராயத்திலே....

தேவர்களின் பிரார்த்தனையால் மகாதேவன் உற்ற சிந்தையைத் தீர்த்தது சிவகுரு தம்பதியரின் பிரார்த்தனை. அவர்களுக்கே புத்திரனாய்ப் பிறப்பதெனத் திரு உள்ளம் கொண்டான் ஐயன். வேண்டியதற்கு மேலும் வழங்கும் வரதாயகன்தான் அவன். எனினும் வரம் பெற்றவர்கள் செருக்கடையாமல் இருக்க வேண்டும் என்பதாலும் சுகத்துடன் சோகமும் சேர்ந்ததே வாழ்க்கை என்பதாலும் 'சொற்ப காலத்துக்கே குழந்தை உலகில் வாழும்' என்று கூறினான். வைசாக சுக்கில பஞ்சமி ஒன்றில் அவதரித்து உலக வாழ்வைத் தொடங்கவும் செய்தான்.

உண்மையில் அவதாரம்தானா அது? 'அவதாரம்' என்றால் 'இறங்கி வருவது' என்று பொருள். 'மேல், கீழ், நடு, பக்கம் என நண்ணுதலற்ற' பூரணப் பொருளை எங்கிருந்து எங்கு இறங்கி வந்ததாகச் சொல்லுவது? எப்படியோ, மனித குலத்திடம் இரங்கி மூல வஸ்துவும் மனித உரு எடுத்தது. என்றும் உள்ள கதிரவன் உதயமானதாகத் தோன்றுவது போல, மெய்ப் பொருளும் உதயமானதாக ஒரு பாவனை புரிந்தது. அந்த உதயமே, வேத நெறிக்குப் புறம்பான பர மதங்களின் அஸ்தமனத்துக்கு வித்து என்பதற்குச் சூசனையாகவே சங்கரரின் ஜனனத்தின் போது பர மதத்தினரின் நெஞ்சத்தில் கணநேரம் இருள் சூழ்ந்தது. அவர்களுடைய சமய நூல்களும் கைநழுவிக் கீழே விழுந்தன.

சங்கரன் பிறந்த பின் சிவகுருவின் இல்லம் முன் எப்போதும் கண்டிராத குதூகலத்தைக் கண்டது; முன் எப்போதுமில்லாத துயரம் அந்தக் குதூகலத்தினூடே இழையோடுவதையும் கண்டது. இந்தச் செல்வத்தை அருமை செய்யும் பேற்றை என்று இழக்க நேரிடுமோ என்று சிவகுருவும் ஆரியாம்பிகையும் மனம் கலங்கியபடியேதான் இருந்தார்கள்.

குழந்தை பிறந்த குதூகலத்துடன் "நீ நூறாண்டு வாழ்ந்திருப்பாய்"



ரா. கணபதி





என்று ஜாத கர்மம் செய்யும் போதே சிவகுருவின் நெஞ்சு நைந்து போயிற்று. பூமியைத் தொட்டு ''என் புத்திரனுக்காக நான் அழாதபடி அருள்வாய்'' என்று வேண்டும்போது அவர் நாத் தழுதழுத்தது.

உற்றமும் சுற்றமும் கொண்டாடக் குழந்தை சங்கரன் வளர்ந்து வருகிறான். வேத நெறி கூறும் சடங்குகளால் பொலிவு பெற்றுப் படிப்படியாக வளர்கிறான். தமிழகக் கவி மரபு ரசித்து மகிழும் பிள்ளைப் பருவ விளையாட்டுக்களுடன் மலர்ந்து வருகிறான். உலகைக் காக்க வந்த பரமனைத் தோஷங்கள் தீண்டாதபடி காப்பிடுகிறார்கள். அதன் பின் மழலை கூறும் மதலையாகச் செங்கீரைப் பருவத்தைக் கடக்கிறான் மௌன குருவாக இருந்த சங்கரன். ஒலியமுதை உண்டாக்குவதோடு பருகவும் பழகி, அன்னை தாலாட்டும் போது கண் வளர்கிறான். அல்லது கண் வளர்வதுபோல் பாசாங்கு புரிகிறான். பாடி முடித்து அவள் எழுந்து செல்லும்போது மொச்சுமொச்சென்று விழித்துக் கொண்டு எழுந்தமர்ந்து சப்பாணி கொட்டுகிறான். அப்போதும் அவள் அலுப்படையாமல் ஆர்வத்துடன் முத்தமளிக்க நெருங்க, முத்துப்பல் காட்டி நகைக்கிறான் முத்தியருளும் அத்தன். பல் முளைத்ததும் ஆறும் மாதமே குழந்தைக்கு விதிப்படி அன்னம் ஊட்டி மகிழ்கின்றனர் பெற்றோர். குழந்தையின் முன் சாஸ்திரம் கூறுவது போலவே பொம்மைகளையும், ஆயுதங்களையும், சுவடிகளையும் வைக்கின்றனர். அவற்றில் ஞான நூல்களை மட்டுமே பொறுக்கி எடுத்துக் கொள்கிறான் பாலகன். அதன் பின் நடை பழகக் கற்கிறான் சங்கரன். 'வா வா' என்று கை நீட்டி அழைக்கும் ஊராரிடமெல்லாம் தளர் நடை இட்டுச் செல்கிறான்; அல்லது அவர்களிடமிருந்து விலகிப் பாய்ச்சுக் காட்டி ஓடுகிறான். ஊர் உலகமெல்லாம் பார்ப்பதுடன் வானத்தையும் பார்த்து அம்புலியை அழைக்கத் தெரிந்து கொள்கிறான் பிறைசூடி. விண்ணைக் கண்டவர் இந்த மண்ணைப் பொருளாக நினைக்க மாட்டார்கள் என்பதைக் காட்டுவதேபோலச் சிறு பெண்கள் கட்டும் மணல் வீடுகளைத் துவைத்துத் துவம்சம் செய்கிறான் சங்கரமூர்த்தியாக வந்துள்ள சம்ஹாரமூர்த்தி. எல்லையற்ற ஞான வாழ்வுக்கு அழைப்பது போல் சிறு பறைகளைக் கொட்டிக் கெக்கலிக்கிறான்.

பால சங்கரன் படு விஷமக்காரனாக இருந்தான். முன்பெல்லாம் வைத்தது வைத்தபடி இருந்த பூஜா திரவியங்களைக் கொட்டி மகிழ்ந்தான் அவன். அதனைக் கண்டு அம்மையப்பனின் அம்மையும் அப்பனும் மகிழத்தான் செய்தனர். அவனைக் களிக்கச் செய்வதற்கு மேல் ஒரு பூஜையும் உண்டா என்றே அவர்கள் எண்ணினர். 'குழந்தையும் தெய்வமும் கொண்டாடும் இடத்தில்' என்பார்கள். இங்கேயோ தெய்வமே அல்லவா குழந்தையாகவும் வந்திருந்தது?

குழந்தையின் அழகைக் காட்டிலும் அதன் அறிவு பெரிதாக இருந்ததென்றால் அந்த அறிவையும் விட விசாலமாக இருந்தது அதனுடைய அன்பு செய்யும் ஆற்றல். விஷமத்தால் படுத்திய பாட்டை அன்பினால் மறக்கச் செய்தான் சங்கரன். முன்பு சிவகுரு விரும்பினாரே, அவ்விதமே அவரது இந்தப் பூஜாபலன் ஊரிலுள்ள குழந்தைகளுக்கெல்லாம் பூஜைப் பழங்களை அளித்து மகிழ்ந்தது; மகிழ்வித்தது.

மூன்று வயதுக்குள் அமுதத் தமிழ் மொழியிலுள்ள அத்தனை வார்த்தைகளையும் 'வெடுக்' 'வெடுக்'கென்று பேசினான் சங்கரன். கலைவாணியின் நூபுரங்களும், மேகலையும், கங்கணங்களும் கலகலப்பது போன்ற மணிக் குரலில் பொரிந்து தள்ளினான். ஆனால் தமிழகம் தந்த இந்தத் தவக்குழந்தை பாரத நாடெங்குமே நல்லறம் பரப்ப அல்லவா பிறந்திருந்தது? எனவே அன்று இந்த நாடு முழுவதற்கும் பொது மொழியாக இருந்த வட மொழியில் அல்லவா அவன் சிறக்க வேண்டியிருந்தது? அந்த வடமொழி வளமையையும், கவிதைப் புலமையையும் அவன் பெற்றதும் ஒரு கதை.

பால சங்கரனுக்கு அன்று ஒரே யோசனை. 'அப்பா ஏதோ காரியமாக வெளியூர் போய் விட்டார். சுவாமிக்கு நிவேதனம் செய்ய முடியா



மல் அம்மாவுக்கும் அசௌகரியம். ஆனால் அப்பா சொல்லியிருக்கிறாரே, 'நமக்கெல்லாம் உணவு படைக்கும் அன்னபூரணிக்குக் காட்டாமல் நாம் உண்ணக்கூடாது' என்று! இன்று என்ன செய்வது? சுவாமிக்கு நைவேத்தியம் செய்யா விட்டால் தனக்கு ஒன்றுமே வேண்டியிராது போலிருக்கிறதே. இந்தத் தாதியானால் கிண்ணம் நிறையப் பாலைக் கொண்டு வந்து கொடுத்து விட்டுப் போகிறாளே!

பிரச்னைக்கு ஒரு தீர்வு கண்டான் சங்கரன். பால் கிண்ணத்தை எடுத்துக் கொண்டு பூஜா கிருகத்தை அடைந்தான். தேவியைப் பார்த்தான். அப்பா செய்வது போலவே, 'க்ஷீரம் நிவேதயாமி' என்று கூறிவிட்டுக் கண்களை மூடிக் கொண்டான்.

அன்னபூரணி நகைத்துக் கொண்டாள். இந்தச் சங்கரனின் உயிரில் உறைந்திருந்தாலும் தனித்தும் இருப்பவள் அவள். பூரணத்திலிருந்து பூரணத்தை எடுத்த பின்னும் மிஞ்சும் பூரணம் என்று மறைமுடி பாடுவது அந்த அன்னபூரணியையே அல்லவா? அவள் மென்னகையுடன் ஒரு வேடிக்கை செய்தாள். அதன் விளைவு...

கண்ணைத் திறந்து பார்த்த சங்கரன் கண் கலங்கி விட்டான். ஆம். பால் கிண்ணம் காலி! எல்லோருக்கும் உணவளிக்கும் அம்மா அவனுக்கு மட்டும் உணவில்லாமல் செய்து விட்டாள்! ஏமாந்து போன இளம் நெஞ்சு பதறியது. சின்னஞ்சிறு உதடு துடித்தது; கண்ணில் நீர் துளித்தது.

குழந்தை அழுத அந்தக் காலமே குவலயத்தை எல்லாம் குதூகலிக்கச் செய்யும் கவித்துவத்துக்கு வித்தூன்ற வேண்டிய காலமுமாயிற்று.

**கண்மலர்கள் நீர் ததும்பக்**
**கைம்மலர்களாற் பிசைந்து**
**வண்ணமலர் செங்கனிவாய்**
**மணிஅதரம் புடைதுடிப்ப**
**எண்ணில் மறைஒலி பெருக**
**எவ்வுயிரும் குதுகலிப்பப்**
**புண்ணியக் கன்றனையவர்தாம்**
**பொருமி அழுதருளினார்**

என்று, ஆளுடைப்பிள்ளைகள் பாலுக்காக அழுததைச் சேக்கிழார் பெருமான் பாடினார் அல்லவா? அதே போல வேதம் தழைக்கவும், வையம் செழிக்கவும் சங்கரன் மொழிப் புலமை பெறத் தருணம் வந்துவிட்டது. அவனும் 'அழுது அருளினான்!' அழுத கண்களுடன் கிண்ணத்தைப் பார்க்கும் போது முன்பு பால் இருந்த அந்தக் கிண்ணம் நிறையவும் நீரே துளும்பி நிற்பது போல இருந்தது. தன் நீண்ட பெரிய இமைகளைக் கொட்டிக் கண்ணீரை வடித்த பின் குழந்தை மீண்டும் கிண்ணத்தைப் பார்த்தான்.





விந்தை! வழிய வழியப் பால் இருக்கிறது அதில்! சாமானியமான பசும் பாலா அது? அல்ல; சைதன்ய ரஸமே அது. அண்டங்களுக்கெல்லாம் உணவளிக்கும் அன்னை அன்று தனக்கே—தன்னையே—உணவு அளித்துக் கொண்டு விட்டாள்.

பாலுக்காக ஏங்கிய ஒரு குழந்தை, பராசக்தி அளித்த ஞானச் சாற்றைப் பருகி முத்தமிழ் விரகராகித் தேவாரம் இசைத்தது. இந்தக் குழந்தையோ வடமொழியில் பொழிந்து தள்ளும் வித்வத் திலகமாயிற்று. என்றாலும், தான் தமிழ்க் குழந்தை என்பதை ஒரு போதும் மறக்கவில்லை சங்கரன். பிற்காலத்தில் ஜகத்குரு சங்கர பகவத் பாதாசாரியர்களாக விளங்கும் போது, தேவி ஞானப் பால் அளித்த இந்தச் சம்பவத்தை மறக்காமல் தமது சௌந்தரிய லஹரியில் போற்றிய அவர், 'தமிழ்க் குழந்தைக்கு (த்ரவிட சிசு) அதை அளித்தாயே' என்றும் குறிப்பிட்டுப் பாடினவரல்லவா?

ஆண்டவன் குடி கொண்டுள்ள இல்லமாகிய சரீரத்துக்குச் சிகையே கூரை என்று நம்பிய காலம் ஆயிற்றே! மூன்றுவது வயதில் சங்கரனுக்குச் சிகை வைத்து, தீக்கொழுந்தின் மீது காணும் புகை போல், அதனைச் சேர நாட்டு வழக்கப்படித் தூக்கி முடிந்தார் சிவகுரு. சடங்கின் போது 'நூற்றுப் பதினாறுண்டு ஜீவித்திரு' என்று மந்திரம் கூறுகையில் அவருக்கு என்னென்னவோ செய்தது. குழந்தையைத் தாம் முந்திக் கொண்டு விட்டாலே போதும் என்பதே அதன்பின் அவரது பிரார்த்தனை ஆயிற்று. அப்படி அவர் பிரார்த்தித்ததும் அந்தக் குழந்தையிடமேதான். ஏனெனில் அந்தக் குழந்தை தான் யார் என்பதையும் அவருக்கு ஒரு நாள் உணர்த்தி விட்டது.

சின்னஞ் சிறு சங்கரன் சிறு தேர் செலுத்தி மகிழ்ந்து கொண்டிருந்தான். அதைக் கண்ட தந்தையின் நாவு தானாகவே 'தேரோட்டியாக உள்ள பரமேசுவரனுக்கு நமஸ்காரம்' என்ற வேத வாக்கியத்தை முணுமுணுத்தது. அதிலிருந்து தொடங்கி நமகத்தை அவர் கூறுகையில் 'தேரில் வீற்றிருக்கும் பரமேசுவரனுக்கு நமஸ்காரம்' என்ற இடம் வரும் போது,—

உண்மையாகவே உள்ளூர்க் கோவில் தேர் தெருவில் வந்துவிட்டது. அன்று ரதோற்சவம் என்பது சிவகுருவுக்கு நினைவு வந்தது. சங்கரனையும் தூக்கிக் கொண்டு சுவாமி தரிசனத்துக்கு விரைந்தார். தேர் அசைந்து அசைந்து அருகிலே வந்து விட்டது. சிவபெருமான், உமையம்மை மூர்த்தங்கள் கண்ணுக்குப் புலனாயின. குழந்தைக்கும் சுவாமி தரிசனம் செய்து வைக்க வேண்டும் என்று எண்ணிய சிவகுரு 'சங்கரா, அதோ உம்மாச்சி பாரு' என்று கூறியபடியே குழந்தையின் பக்கம் திரும்பினார்.

அடுத்தகணம், திடுமென ஒரு பேரலை எழும்பி அதன் உச்சியில் தாம் மிதப்பது போன்ற உணர்ச்சி அவருக்கு உண்டாயிற்று. ஆம்! தேரில் ஆரோகணித்திருந்த அந்த ஈசுவர மூர்த்தியே அவர் கையில் அமர்ந்திருக்கிறது! மயிர்க் கூச்செடுத்தது சிவகுருவுக்கு. மல்கிய கண்களைத் துடைத்துக்கொண்டு மீண்டும் கையைப் பார்த்த போது ஈசுவரனைக் கண்ட அதே குழந்தை தேவிபிம்பமாகக் காட்சியளித்தது. ஒருவாறு பிரமிப்பு நீங்கிய சிவகுரு கையில் பழையபடி தம் அருமைப் பிள்ளையையே கண்டார். தேன்பிலிற்றும் மாதுளை மொட்டுப்போல் செவ்விதழ்களைத் திறந்து தேன்மொழி பேசினான் அவன். ''என்னப்பா! எனக்குத்தான் நன்னாப் பேச வந்துடுத்தே. 'உம்மாச்சி'ன்னு ஏம்பா சொல்றே? உமா-மகேசன்னு சொல்லு'' என்றான். அந்தப் பேச்சில் தொனித்த அழுத்தமும், குறும்பும் சிவகுருவின் இதயத்தைக் கிளுகிளுக்கச் செய்தன. 'உமா-மகேசா, இந்தக் குழந்தையை நீதான் ரட்சிக்க வேண்டும். இல்லை... இந்தக் குழந்தைதான் என்னை ரட்சிக்க வேண்டும்' என்று மனத்தால் கூறிய சிவகுரு ரதத்தில் மூர்த்தங்கள் ஆரோகணித்திருந்த இடத்தில் பார்வையைச் செலுத்தினார்.

பேராச்சரியம்! சங்கரன் பயலல்லவா அங்கே அமர்ந்திருக்கிறன்! கண நேரம் பேச்சு மூச்சற்றுப் போனுர் சிவகுரு. சுய நிலைக்குத் திரும்பிய போது, அவர் கண்டறியாதனவற்றை—அந்நாள் வரை எவ்வளவோ முறைகள் கண்டும், கேட்டும், ஸ்பரிசித்தும் கூட அறிந்திராதனவற்றை — அறிந்தார். எதை எதையோ இழக்கும் பல துர்ப்பாக்கிய சாலிகள் உண்டு; ஆனுல் கடவுளையே இழக்கும் மகா துர்ப்பாக்கியசாலியாகத் தாம் ஆகக் கூடாது என்று உறுதி கொண்டார். எனவே, பகவத் பாதர் எனப் பிரசித்தி பெற விருந்த சங்கரனிடமே தம்மைப் பகவானின் பாதங்களில் சேர்க்குமாறு பிரார்த்தித்துக் கொண்டார்.

உத்தமரின் விருப்பம் ஈடேறிற்று. அப்போது சங்கரனுக்கு வயசு நாலு.

எல்லையில்லாத சோகக் கடலிலிருந்து ஒருவாறு கரையேறிய ஆரியாம்பிகைக்குத் தன் மீதே எரிச்சல் உண்டாயிற்று. தன் துரதிருஷ்டம் சங்கரனையும் தொட்டு விடுமோ என்று நடுங்கினுள். அவனுக்கு உபநயனம் செய்து கண் மறைவாகக் குருகுலத்துக்கு அனுப்பிவிட முடிவு செய்தாள். ஐந்தாவது வயதிலேயே சங்கரனுக்குப் பிரம்மோபதேசமாயிற்று. பிரம்மம் என்ற காயத்ரியைச் சங்கரனுக்கு உபதேசித்து, சிவகுரு என்ற பெயர் உண்மையிலேயே தமக்குப் பொருந்தும் பேற்றை அந்த வேதியர் பெறவில்லை. பெற்றவர் செய்ய வேண்டிய சம்ஸ்காரத்தை உற்றுர் செய்விக்க, அநாதை போல் அன்னையை வணங்க வந்தான் சங்கரன். பரம்பொருள் ஏன் இத்தனை சிறுமைக்கு ஆளாக வேண்டும்? வாழ்க்கை யென்றுல் அதில் துயரம் தவிர்க்க முடியாதது என்று காட்டுவதற்காகவா?

பிரம்மச்சாரியின் ஒழுக்கப்படி மறைகளைக் கற்பதற்காகத் தாயைப் பிரிந்து குருகுல வாசம் தொடங்கினுன் சங்கரன். ஆதி மறைகள் தேடிய பாதனல்லவா? இவன் அத்தியயனம் தொடங்கியவுடன் பூரித்தெழுந்த வேதமாதா தன்னுலேயே இவன் நாவில் நடனமாடத் தொடங்கினுள். ஏழு பிராயத்துக் குள்ளேயே வேதம், வேதாந்தம், வேதாங்கங்கள், ஸ்மிருதிகள், புராணங்கள், சாஸ்திரங்கள் காவியங்கள் யாவற்றையும் சங்கரன் கசடறக் கற்றுத் தேர்ந்து விட்டான்.

குருமார்களிடமிருந்து சங்கரன் பொருள் தெரிந்து கொள்கிறுனு, அல்லது அவர்களுக்கே புதுப் புதுப்பொருள்களை அறிவுறுத்துகிறுனு என்று அந்தக் குரவர்களுக்கே புரியவில்லை. தத்-த்வமஸி—'நீ பரம் பொருளே'—என்பது போன்ற ஜீவாத்ம — பரமாத்ம ஐக்கியத்தை உணர்ந்தும் வாசகங்களை அவன் அநுபவித்துக் கூறும் போது ஆசாரியர்களாகிய தமக்கே அந்தச் சிஷ்யன் உபதேசித்தது போலத்தான் உணர்ந்தார்கள், ஆதிகுருவுக்குப் பாடம் புகட்டும் பேறு பெற்ற அந்த வேதியர்கள்.

இவ்வளவிலும் சங்கரன் உள்ளம் மீண்டும் மீண்டும் உருப்போட்டது ஒரே ஒரு கருத்தைத்தான். அதற்காகவே தான் தட்சிணுமூர்த்தி இப்படி மானுடனுக உருவெடுத்துக் கொண்டதும். 'தியாகம் செய்து அநுபவிப்பாய்' என்று தொடங்கி உபநிஷதம் முழுவதிலும் விரவி நிற்கும் துறவு உணர்வு ஒன்றே சங்கரனின் உள்ளத்தில் ஆழப் பதிந்தது.

'பிரம்மமாகிய எந்தப் பரம்பொருளை நாடிப் பிரம்மசரியம் அநுஷ்டிக்கிறுர்களோ' என்ற உபநிஷத வாக்குக்கு, ஆதரிசமாக விளங்கினுன் சங்கரன். ஆசிரம நியமங்களை வழுவாது காத்து வந்தான். மாட மாளிகையை நீத்து, அருமை அன்னையையும் நீத்து ஆசிரியர்களுடனேயே இருந்து பணிவிடை செய்து வந்தான். வீடு வீடாகச் சென்று பிச்சை எடுத்து வந்தான். அதனையே குரு பத்தினி தரும் பிரசாதமாகப் பெற்று உண்டு வந்தான்.



அன்று துவாதசி. முதல் நாள் ஏகாதசி விரதம் இருந்தவர்கள் விடிய விடியவே உண வருந்தும் தினம்.

அயாசகன் என்ற அந்த மறையோன் வீட்டில் மட்டும் துவாதசி பாரணை கிடையாது. ஏனென்றுல் அங்கே ஏகாதசி விரதமே கிடையாது; அதாவது ஏகாதசியன்று மட்டும் உண்ணுவிரதம் என்று



இல்லாமல் என் றைக்குமே 'ஏகாதசி'யாகவுள்ள பரம ஏழையுடைய வீடு அது. அவன் தான் யாரையுமே, எதையுமே யாசிக்காத அயாசகனாயிற்றே!

''பவதி! பிக்ஷாம் தேஹி!'' என்ற வெள்ளி மணி நாதம் அயாசகனுடைய மனைவியின் காதில் பாய்ந்தது. அந்த வார்த்தைகளின் பொருளில்கூட அவள் மனம் செல்லவில்லை. இவ்வளவு இனிக்க இனிக்கக் கூவுவது யார் என்று பார்க்கும் ஆர்வத்துடன் தெருப்புறம் சென்றாள்.

வாசலில் .....

ஆகா! நீல வண்ண வாமனனே நிலா வண்ணனாக வந்திருக்கிறானா? ஆறுமுகனே ஒரு முகனாக வந்திருக்கிறானா?

மின்னல் பிழம்பு போல ஒரு பாலன் தெருவில் நிற்கிறான். அந்த மின்னலாலும் இருள் குன்றாத கருங் கொண்டல் போல் அந்த ஒளிக் கொழுந்தின் தலையில் தூக்கி முடிந்துள்ள கட்டுக் குடுமி. முண்டனம் செய்த முன் மண்டை பச்சப் பச்சென்று திகழ்கிறது. மூன்று வேதங்களையுமே வெண்ணீறாக அணிந்திருப்பது போன்ற விஸ்தாரமான நெற்றி. கனகனையான நயனங்கள். விகஸித்த சம்பகம் போன்ற நாசி. பவழத்துக்குள் முத்தைப் பதித்தாற் போல் சின்னஞ்சிறிய வாயில் அரும்புப் பற்கள். அந்த வாய் ''பவதி! பிக்ஷாம் தேஹி!'' என்று அமுதம் பொழிகிறது.

குழந்தையின் மெல்லிய காதுகள் வழியாகக் காலைக் கதிரவனின் கதிர்பாய்ந்து வரும்போது, செவ்விய அச் செவிகளிலுள்ள நரம்புகள் கூடத் தெரிந்தன. அந்தச் செம்மையே இறுகிப் போனது போன்ற ரத்தினக் கடுக்கன்கள் முக சந்திரனைச் சுற்றிப் பிரபையைப் பரப்பின.

சங்கம் போன்ற கழுத்து. இந்தச் சங்குதான் அந்த இனிய கோஷத்தை எழுப்பியிருக்கிறது. அதி சொகுசான சின்னஞ்சிறு உடல் நிறையத் திருநீறு. மார்பில் துலங்குகிறது பூணூல்.

ஆடையின்மீது சுற்றியுள்ள மான் தோலும், முஞ்சிப் புல் அரைஞாணும் அந்தக் கோமள தேகத்தை எவ்வளவு வருத்துகின்றனவோ? போதாததற்கு அரைஞாணிலேயே பலாச தண்டம் ஒன்றை வேறு செருகியிருக்கிறான். யானைத் துதிக்கை போல் துவளும் இந்தத் தொடைகளும், மெத்து மெத்தென்ற பாதங்களும் நோக இவன் தன்னை எதற்குத் தேடி வந்திருக்கிறான்? வந்து இடையறாமல் தரிசனம் அளிக்கிறான்?

''பவதி! பிக்ஷாம் தேஹி!''

இப்போதுதான் அவளுக்கு அவன் கூறுவதன் பொருளில் மனம் சென்றது. அதோடு அவன் வந்திருப்பதன் காரணமும் புரிந்தது.

ஆம்! இதோ அவனுடைய பஞ்சுக் கரத்திலுள்ள பிஞ்சு விரல்கள் கவ்வியிருக்கும் அந்தக் கப்பரையில் பிச்சை யிடும்படி கேட்கிறான், பிச்சைக்காரியாகிய தன்னை!

தாமரை மலர்கள் போன்ற அவனது கரங்களில் பிட்சா பாத்திரத்தை அழுத்திப் பிடித்துள்ள விரல் நுனிகள்மேலும் சிவந்து, தாமரை மேல் வசிக்கும் செந்திருவை நினைப்பூட்டின. அஷ்டலட்சுமிகளுக்கும் அதிகமாகப் பத்து லட்சுமிகள் வாசம் செய்யும் இக் குழந்தை, அஷ்டதரித்திரையான தன்னிடம் ஏன் யாசகம் கேட்க வேண்டும்?

குமுறிய உள்ளத்தோடு உள்ளே ஓடினாள், அந்த ஸ்திரீ. அக் குழந்தைக்கு எதையேனும் பிட்சை போடாவிட்டால் அவள் இதயம் வெடித்து விடும் போலிருந்தது.

ஆனால் கொடுப்பதற்குத்தான் ஒன்றுமில்லை. மனம் தடுமாறியது; உடலும் தடுமாறியது. ஆதாரத்துக்குச் சுவரைப் பிடித்துக் கொண்டாள்; அவள் கைவைத்த இடம் ஒரு புரை. அதில் ஏதோ தட்டுப்பட்டது. அது ஒரு நெல்லிக் கனி! கொஞ்சம் அழுகிக் கூடப் போயிருந்தது!

இத்தனை ஏழைமையிலும் தன் கணவனின் சாஸ்திர நம்பிக்கை போகவில்லை. சூர்ணா நதியில் குளித்து விட்டு வீடு திரும்பியவுடன் துவாதசி பாரணை செய்வதற்காக இந்த நெல்லிக் கனியைக் கொண்டு வந்து வைத்திருக்கிறார்!

'ஆம், இன்று துவாதசி! அப்படியானால், நேற்று ஏகாதசி! தெருவில் நிற்கும் அந்தத் தெய்வக் குழந்தை நேற்று முழுதும் உபவாசம் இருந்திருக்கும். அக் குழந்தையை இன்னமும் நிறுத்தி வைக்கக் கூடாது. நமக்குள்ளது இந்த நெல்லிதான். இதை அந்தப் பாலனுக்குப்போட்டுவிட வேண்டியதுதான்!'

இன்னமும் அவன் பிட்சைக்காகக் காத்திருப்பானா அல்லது சென்றிருப்பானா என்ற தடுமாற்றத்துடன் வாசலுக்கு ஓடி வந்தாள் அவள். (தொடரும்)





# ஆராயும் வேளையில்

ஆரோக்கிய வாழ்விற்கு ஆகாரம் சம நிலையில் சத்துப் பொருள்கள் கலந்ததாக இருக்க வேண்டும். சூரியன் மார்க் கோதுமைப் பொருள்கள் முழுக் கோதுமையின் நல்ல தன்மைகள் அனைத்தையும்—புரதச் சத்து, கார்போ ஹைட்ரேட்டுகள், A & B வைட்டமின்கள்—கொண்டவை, சுத்தமானவை, சுகாதாரம் மிக்கவை. கையால் தொடப்படாமல், நியூமாடிக் முறையில் அரைக்கப்பட்டு, இயந்திரங்களாலேயே மூடைகளாக்கப்படுகின்றன. பிஸ்கோத்துகள், கேக்குகள், பூரிகள் தயாரிக்க சாலச் சிறந்தவை.




## சூரியன் மார்க்

## மைதா, சூஜி, ஆட்டா

*தயாரிப்பாளர்கள்:*

## செஞ்சுரி பிளவர் மில்ஸ் லிட்.

330, தம்பு செட்டி தெரு, சென்னை-1

போன்: 21043, 21044 & 21045

தந்தி: "MATHOORAN"



EP-CFM-2.TAM.

# கேட்டீர்களா சேதி



செய்தி சேகரன்

"தேனைச் சிறந்த மருந்துப் பொருளாக நம் நாட்டினர் உபயோகித்து வருகின்றனர் அல்லவா? அந்தத் தேனிலிருந்து முதியவர்கள் இளமை முறுக்குடன் இருக்க உதவும் காயகல்ப மருந்து தயாரிக்க முடியும் என்று ஜெர்மன் நிபுணர் ஒருவர் கண்டுபிடித்திருக்கிறாராம்.''

நம் நாட்டுத் தேன் வியாபாரிகள் இந்தத் தேனான செய்தியை அறிந்தால், தங்கள் தொழிலின் எதிர்காலத்தை எண்ணி நாக்கைச் சப்புக் கொட்டிக் கொள்வார்கள் அல்லவா?

ஃ ஃ ஃ

''மாபெரும் ராக்ஷஸ அணுகுண்டை ருஷ்யா வெடித்த செய்தி பரவியதும் உலகம் முழுவதும் பெரும் பீதி ஏற்பட்டது. ஆனால் அந்தப் பீதி ஆண்களுக்குத்தான் அதிகமாம். கதிரியக்க ஆபத்துக்கு உட்படும் தன்மை ஆண்களைக் காட்டிலும் பெண் உடலுக்கு இருபது சத விகிதம் குறைவாகவே உள்ளதென்பதை ஒரு விஞ்ஞானி கண்டுபிடித்திருக்கிறாராம்.''

அதனால்தான் ஆண் வர்க்கமே பெண்களிடம் அடங்கி நடக்க நேரிடுகிறது போலும்!

ஃ ஃ ஃ

''ரங்கூனிலுள்ள ஓர் ஊரில் ஆயிரக்கணக்கான காக்காய்கள் பெரும் கூட்டமாகக் கூடிக் கத்தி, ஜன நடமாட்டத்தை ஸ்தம்பிக்கச் செய்து விட்டனவாம்.''

'காக்காய் பிடித்துக்' காரியங்களைச் சாதித்துக் கொள்ளும் சாமர்த்திய சாலிகள் யாரும் அங்கே இல்லை எனத் தெரிகிறது!

ஃ ஃ ஃ

''ஏழை மக்களின் உணவில் போதுமான புரதச் சத்து இல்லை. இந்தக் குறைபாட்டைப் போக்குவதற்காகச் சத்து உணவு தயாரிப்புத் திட்டங்களை அரசாங்கம் மேற் கொண்டுள்ளது. வேர்க்கடலை மாவிலிருந்து சத்துணவு தயாரிக்க ஏற்பாடாகியிருக்கிறது. இந்த உணவைப் பொதுமக்களிடையே பிரபலப்படுத்தத் திட்டமிடப்பட்டுள்ளது.''

சரிதான். இனிமேல் ஏழை மக்கள் கலபமாக வாங்கித் தின்று வயிற்றுப் பசி தீர்த்து வந்த வேர்க்கடலைக்குக் கூடப் பஞ்சம் வந்துவிடும்.

ஃ ஃ ஃ

''மத்தியப் பிரதேச சட்டசபைக்கு, பஸ்தார் ஜில்லாவிலிருந்து புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் ஏழு சட்டசபை உறுப்பினர்கள் ரயிலையே பார்த்ததில்லையாம். புது சட்டசபை தொடங்கியதும் தில்லிக்கு வரும் சந்தர்ப்பத்தில் தான் அவர்கள் ரயிலை முதன் முதலில் பார்த்ததுமல்லாமல், ரயில் பிரயாணமும் செய்தார்களாம்.''

தங்கள் தொகுதியையே பார்த்தறியாத எம். எல். ஏ.க்கள், மேற்படி தொகுதி வாக்காளர்களைப் பற்றி ஒன்றுமே அறியாத எம். எல். ஏ.க்கள் ஆகியவர்கள் இருக்கும்போது ரயிலைப் பார்க்காத எம்.எல்.ஏ.க்கள் இருப்பதில் அதிசயம் என்ன இருக்கிறது?

ஃ ஃ ஃ

''சமீபத்தில் நடந்த இடைத் தேர்தலில் போட்டியிட்ட ஓர் அபேட்சகர் மீது நடந்த கல் வீச்சில் அவரது மூக்குக் கண்ணாடி உடைந்தது. ஆனால் அவர் வெற்றி பெற்று விட்டார்.''

மூக்குக் கண்ணாடிதானே உடைந்து போயிற்று! பரவாயில்லை. அவர் தோற்றுப் போயிருந்தால் மூக்கு அல்லவா உடைந்து போயிருக்கும்!

ஃ ஃ ஃ

''சமீபத்தில் சென்னையில் நடத்திய பரிசோதனைப்படி கோடை காலத்தில் மாதம் ஒன்றுக்குப் பத்துஅங்குல அளவு வீதம் நீர் ஆவியாகிறது என்னும் உண்மை வெளியாயிற்று. தண்ணீர் ஆவியாகும் அளவைக் குறைக்க வேண்டுமானால், தண்ணீர் மட்டத்தின்மீது ஒரு வகைத் திராவகத்தைப் பரவ விட வேண்டுமென்று ஆராய்ச்சி கூறுகிறது.''

'ஆராய்ச்சி இருக்கட்டும். தண்ணீர் ஆவியாகப் போனால்தானே வானத்தில் மேகங்கள் உண்டாகி மழை பெய்யும்? ஆவியால் ஏற்படும் நஷ்டத்தைத் தவிர்க்கப் போய் மழை இல்லாமையால் ஏற்படும் நஷ்டம் பெரிதாகி விடும் போல் இருக்கிறதே!" என்று இன்னொரு ஆராய்ச்சியாளர் கண்ணீர் விடலாமல்லவா?

''வனங்களை விஸ்தரிப்பது, மரங்கள் வளர்ப்பது இவற்றுக்கான விசேஷ திட்டம் ஒன்றின்படி ஆண்டுதோறும் லட்சம் ஏக்கர் அளவுக்குக் காடுகளின் விஸ்திரணத்தை அதிகரிக்கச் சர்க்கார் திட்டமிட்டிருக்கிறது என்று மத்திய விவசாய மந்திரி லோக சபையில் அறிவித்தார்.''

இப்படிக் காடுகளை விஸ்தரித்துக் கொண்டே போனால், ஒருபுறம் நடக்கும் நகர அபிவிருத்தித் திட்டம் என்ன ஆவது? ஒரு வேளை அதுவும் வன அபிவிருத்தியில் சேர்ந்து விடுமோ?

ஃ ஃ ஃ

''லோக சபையில் ஓர் அங்கத்தினர் ரம்மியமான சங்கீதத்தை இசைக்கத் தொடங்கி விட்டார். இது மற்றவர்களிடையே சிறிது சலசலப்பு ஏற்படுத்தியது. விஷயம் என்னவென்றால் அவர் பேசத் தொடங்குவதற்கு முன்பு இஷ்ட தெய்வத்துக்குப் பிரார்த்தனை செலுத்தினாராம்.''

பாட்டுப் பாடினால் சலசலப்பு ஏற்படுவானேன்? ஓர் அங்கத்தினர் பாட, மற்ற அங்கத்தினர்கள் பக்கவாத்தியம் வாசித்தால் சபையின் நிகழ்ச்சி நிரல் இன்னும் ரம்மியமாக இருக்குமே!

''பாலில் 'கால்சியம்' (சுண்ணாம்புச் சத்து) அதிகமாக இருப்பதால், அதை அருந்துவதன் மூலம் கதிரியக்கஆபத்து உடலைப் பாதிக்காமல் செய்ய முடியும் என்று சமீப காலத்தில் கண்டுபிடிக்கப் பட்டுள்ளது.''

'அது எப்படி? பாலில் அதிகமாக உள்ள பொருள் நீர்தானே? பாலில் பாலைக் காண்பதே அரிதாக இருக்கும் போது அதில் கால்சியத்தை எப்படிக் காண முடியும்?' என்று அதிசயிக்கிறார், சென்னையில் பத்துப் பேர்கள் அடங்கிய குடும்பத்துக்குப் பால் வாங்கி அநுபவப்பட்ட குடும்பராயர்!

ஃ ஃ ஃ

''பம்பாயில் சென்ற மூன்று நாட்களாக மூடப்பட்டிருந்த 9,000 ஹோட்டல்களும் பம்பாய் முதன் மந்திரியின் வேண்டுகோளின்படி திறக்கப்பட்டன. ஹோட்டல் முதலாளிகளுக்கு மூன்று நாட்களிலும் பெரும் நஷ்டம் ஏற்பட்டிருக்குமென்று தெரிகிறது.''

ஆனால் இன்னொரு லாபம் தானாக ஏற்பட்டிருக்கிறதே! அத்தனை ஹோட்டல்களையும் முதன் மந்திரி திறந்து வைத்திருக்கிறாரே!





# நேருஜியின் இலங்கை விஜயம்

இலங்கை, மேமீ 18உ.

இலங்கையில் நிறுவப்பட்டிருக்கும் ஆசியா ஆயுர்வேத ஆராய்ச்சிக் கழகத்தைத் திறந்து வைக்க அடுத்த ஆகஸ்டு மாதம் பாரதப் பிரதம மந்திரி ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு விஜயம் செய்கிறார் என்ற செய்தி வெளியாகியது முதல் இங்குள்ள இந்திய வம்சாவளியினர்களின் பிரஜாவுரிமைப் பிரச்னைக்கு ஓர் இறுதியான முடிவு கட்டுவது பற்றிச் சம்பாஷணைகள் நடைபெறும். என்ற நம்பிக்கை பலரிடையிலும் ஏற்பட்டிருக்கிறது. இதைப் பற்றி டில்லி மக்கள் சபையில் கேட்ட கேள்வியொன்றுக்கு நேருஜி பட்டுக் கொள்ளாமல் பதில் அளித்துள்ள போதிலும் இலங்கை இந்தியர் பிரச்னையைப் பற்றி நிச்சயமாகப் பேச்சுக்கள் நடைபெறும் என்பதை இலங்கை நிதி மந்திரி திரு பீலிக்ஸ் டயஸ் பண்டாரநாயகா இலங்கை பார்லிமெண்டில் திட்டவட்டமாக அறிவித்திருக்கிறார். அதோடு நில்லாமல் இலங்கை அரசாங்க வட்டாரங்கள் இந்தப் பேச்சுக்குத் தேவையான பூர்வாங்க ஏற்பாடுகளைச் செய்வதிலும் இப்பொழுது முனைந்திருக்கிறது. கிட்டத்தட்ட ஏழு லட்சத்துக்கு மேற்பட்ட இந்திய வம்சாவளியினர்கள் இன்று நாடற்றவர்களாக ஆக்கப்பட்டிருக்கிறார்கள். இவர்கள் தங்களுடைய பிரஜைகள் அல்லவென்று இலங்கை, இந்திய அரசாங்கங்கள் இரண்டுமே ஏற்க மறுக்கின்றன. ஒரு காலத்தில் இவர்கள் இந்தியாவிலிருந்து வந்து குடியேறியவர்களாதலால் இவர்கள் எல்லாரும் இந்தியர்கள்தான் என்றும் இவர்களை இந்தியா திருப்பி அழைத்துக் கொள்ள வேண்டுமென்றும் இலங்கை அரசாங்கம் கூறுகிறது. இந்தியாவோ இவர்கள் இலங்கைப் பிரஜைகளாக ஏற்றுக் கொள்ளப்படவில்லை என்ற காரணத்துக்காக இவர்கள் இந்தியப் பிரஜைகளாகிவிட மாட்டார்கள் என்றும் அவர்களுக்கும் தங்களுக்கும் சம்பந்தமே இல்லை என்றும் கூறுகிறது. நாடற்றவர்களோ தாங்கள் இலங்கையைத் தவிர வேறு நாட்டை அறியாதவர்கள் என்றும் ஆகவே சகல விதத்திலும் தாங்கள் இலங்கைப் பிரஜைகளே என்றும் சொல்லுகிறார்கள். இந்த நிலைமையில் அவர்களுடைய வருங்காலப் பிரஜா அந்தஸ்து என்னவென்பதை நிர்ணயிக்கவே அடுத்த ஆண்டு ஆகஸ்டு மாதம் இலங்கை இந்தியப் பிரதம மந்திரிகளுக்கிடையில் பேச்சுவார்த்தைகள் நடைபெற இருக்கின்றன.

## அனாவசிய நுழைவு

நாடற்றவர்கள் எனப்படும் மலை நாட்டுத் தமிழர்களான இந்திய வம்சாவளியினர்கள் சம்பந்தப்பட்ட மட்டில் ஸ்ரீ தொண்டைமான், ஜனாப் அஸீஸ் ஆகியவர்களின் தலைமையில் உள்ள காங்கிரஸ் ஸ்தாபனங்களே பிரதிநிதித்துவ ஸ்தாபனங்கள் என்று எல்லோரும் ஒப்புக்கொண்ட விஷயம். காங்கிரஸ் இருகூறுகளாகப் பிரிந்தது வருந்தக் கூடிய விஷயமென்றும், ஒரே ஸ்தாபனமாக இருக்கையிலும் சரி, இரண்டு ஸ்தாபனங்களாக இருக்கையிலும் சரி, இந்திய வம்சாவளியினர்களின் நலன் கருதி அவை ஆற்றி வரும் பணிகள் அனந்தம். அப்படியிருக்க, வடக்கு, கிழக்கு மாகாணத் தமிழர்களின் பிரதிநிதித்துவ ஸ்தாபனமான தமிழரசுக் கட்சியினர் திராவிடக் கழகத்தின் உதவியோடு தோட்டப் பகுதிகளில் இப்போது செல்வாக்கைத் திரட்ட முயற்சி செய்து வருவது காங்கிரசுக்கும் பொதுவாகத் தமிழ் மக்களுக்கும் மிகுந்த கவலையை விளைவித்திருக்கிறது. தமிழரசுக் கட்சியின் இந்த நடவடிக்கைகளுக்குக் காரணம் எதுவாக இருப்பினும் தோட்டப் பகுதிகளில் அவர்கள் பலம் திரட்ட முற்பட்டிருப்பது காங்கிரஸின் செல்வாக்கையும் பலத்தையும் குறைப்பதுதான் என்ற எண்ணம் காங்கிரஸ்வாதிகளுக்கிடையில் இருந்து வருகிறது. இதன் பயனாகக் கடந்த சில தினங்களுக்கிடையில் தமிழரசுக் கட்சித் தலைவர்களுக்கும் காங்கிரஸ் கட்சித் தலைவர்களுக்குமிடையில் காரசாரமான சர்ச்சைகள் நடந்து வந்திருக்கின்றன. தோட்டப் பகுதிகளில் தமிழரசுக் கட்சி ஊடுருவுவதைத் திரு தொண்டைமான் அழுத்தமாகக் கண்டித்தும் காங்கிரஸ் எந்தக் காலத்திலும் தமிழரசுக் கட்சியையோ அல்லது அதன் சமஷ்டி இலட்சியத்தையோ ஆதரித்தது கிடையாது என்றும் ஓர் அறிக்கை விட்டிருக்கிறார். இம்மாதிரியான சர்ச்சைகள் தமிழ்ச் சமூகத்தை மேலும் கூறு போட்டு அதைப் பலவீனப்படுத்த உதவுமேயல்லாது தமிழர்கள் ஒற்றுமையையும் கூட்டு பலத்தையும் அதிகரிக்க நிச்சயம் உதவாது. தமிழரசுக் கட்சிக்கு எத்தனையோ அதிமுக்கியமான பிரச்னைகள் இருக்கையில் அவர்கள் அநாவசியமாகத் தோட்டப் பகுதிகளில் பிரவேசித்து, இந்திய வம்சாவளியினர்களின் பிரச்னைகளில் தலையிட்டு, தமிழர் ஐக்கியத்தைச் சீர் குலைக்கும் வகையில் நடக்கத் தேவையில்லை. இதனால் அவர்களுக்கும் அவர்களது கட்சிக்கும் பொதுவாகத் தமிழ்ச் சமூகத்துக்கும் நஷ்டமேயன்றி எவ்விதமான நன்மையும் கிடையாது.

இந்திய திராவிட முன்னேற்றக் கழகத்தை இலங்கை அரசாங்கமும் சிங்களவர்களும் எப்போதும் சந்தேகக் கண்களுடனேயே பார்த்து வருகிறார்கள். இலங்கையைத் தமிழ் நாட்டுடன் இணைப்பதுதான் திராவிட முன்னேற்றக் கழகத்தின் இலட்சியம் என்ற கருத்து சிங்களவர்களுக்கு இடையில் பலமாக இருப்பதனால் அந்தக் கட்சியின் உறவு கொண்ட எந்த இலங்கைக் கட்சியும் இந்நாட்டுக்குத் துரோகம் இழைக்கும் கட்சி என்ற உறுதியான அபிப்பிராயம் சிங்களவர்களுக்கு இடையில் இருந்து வருகிறது. அந்த நிலைமையில் தென்னக திராவிட முன்னேற்றக் கட்சியின் சமீபத் தேர்தல் வெற்றிகளைப் பாராட்டித் தமிழரசுத் தலைவர் திரு எஸ். ஜே. வி. செல்வநாயகம் ஒரு வாழ்த்துச் செய்தி அனுப்பியதும் இலங்கைத் தோட்டப் பகுதிகளில் இயங்கும் திராவிட முன்னேற்றக் கட்சியுடன் தமிழரசுக் கட்சி கூட்டு சேர்ந்து கொண்டு இந்திய வம்சாவளியினர்களுக்கிடையில் பிரசாரம் செய்து வருவதும் இந்தியப் பிரச்னை சுமுகமாகத் தீருவதற்கு ஒரு பாதகமான சூழ்நிலையை உருவாக்கி வருகிறது. இலங்கை இந்தியப் பிரதம மந்திரிகள் சந்தித்துப்பேசவிருக்கும் இந்தச் சமயத்தில் இது மாதிரி

விரும்பத் தகாத சூழ்நிலை உருவாகி வருவது மிகவும் துக்கப்படத் தகுந்தது.

## சங்கரஜயந்தி

கொழும்பில் உள்ள பிராமண சமூகத்தின் ஸ்தாபனமாகிய ஸ்ரீ ராமகான சபையார் சென்ற செவ்வாய்க் கிழமை ஸ்ரீ சங்கர ஜயந்தியை மிகச் சிறப்பாகக் கொண்டாடினார்கள். ஏராளமான தாய்மார்களும் பக்தர்களும் கூடியிருந்தனர். அந்தக் கூட்டத்தில் திரு பாபு நடராஜன் தம்பதிகளின் குழந்தைகள் பஜனை கீதங்களை மிக உருக்கமாகப் பாடினர். மூன்று வயதிலிருந்து பத்து வயதுக்கு உட்பட்ட குழந்தைகள் அக்ஷர சுத்தமாக அற்புதமாகப் பாடியது எல்லாரையும் திகைக்கச் செய்வதாக இருந்தது. இக்கூட்டத்தில் திரு கே. வி. எஸ். வாஸ் பேசிய பொழுது ஸ்ரீ ராமகான சபை தனக்கென்று ஒரு கட்டடத்தை அமைத்துக் கொள்ளுவது அவசியம் என்றும் இதற்கான ஏற்பாடுகள் துரிதமாக நடைபெற்று வருவதாகவும் கூறினார். சபைக்கு ஒரு கட்டடம் எழுப்பக் கொழும்பில் உள்ள மிகப் பிரபல வர்த்தகர் திரு எஸ். மகாதேவன் அவர்கள் ஒரு நிலத்தைக் கொடுத்து உதவக் கூடுமென்று தெரிய வருகிறது.

## பல்கலைக் கழகம்

இலங்கைத் தமிழ்ப் பல்கலைக் கழக இயக்கத்தினர் அடுத்த வருடத்துக்குத் திருகோணமலையில் ஒரு விவசாயக் கல்லூரியை ஆரம்பிக்கத் திட்டமிட்டிருப்பதாகப் பேராசிரியர் சின்னத் தம்பி கடந்த வாரம் அறிவித்திருக்கிறார். இந்த இயக்கத்துக்கு நிதி திரட்டுவதற்காகக் கடந்த வாரம் யாழ்ப்பாணம் நகர மண்டபத்தில் குமாரி அம்பிகை நடராஜனின் பரதநாட்டியக் கச்சேரி நடைபெற்றது. ஒரு நல்ல பணிக்கு நிதி உதவி செய்வதாகத் தமிழ் அன்பர்கள் கச்சேரிக்குத் திரளாக வந்திருந்தார்கள். இதுவரை அமோகமாக நிதி வழங்கி ஆதரித்து வந்திருக்கும் தமிழ் அன்பர்கள் மேலும் ஆதரித்துப் பல்கலைக் கழகத்தை விரைவில் உருவாக்க வேண்டுமென்றும் அடுத்த வருடத்துக்குள் திருகோணமலையில் விவசாயக் கல்லூரியைத் திறந்துவிட நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருவதாயும் பேராசிரியர் சின்னத்தம்பி கூறினார்.

## நாயரின் மறைவு

பிரபல தொழிலாளர் யூனியன் தலைவரும் ஜனாப் அஸீஸ் தலைமையிலுள்ள ஜனநாயகத் தொழிலாளர் காங்கிரஸின் கௌரவபொதுக் காரியதரிசியுமான திரு கே. ஜி. எஸ். நாயர் இவ்வாரம் திடீரென்று மாரடைப்பினால் காலமாகி விட்டது இலங்கை இந்தியர்களுக்கும் இந்திய வம்சாவளியினர்களான தோட்டத் தொழிலாளருக்கும் மிகப் பெரிய நஷ்டமாகும். கடந்த சுமார் இருபது ஆண்டுகளாகத் தோட்டத் தொழிலாளர் நலன் கருதி அரும்பாடு பட்டு உழைத்த தலைவர்களில் திரு நாயர் யாருக்கும் இரண்டாம் பட்சமானவரல்ல. அவரை அறியாத தோட்டத் தொழிலாளர் யாருமே இருக்க முடியாது. காங்கிரஸ் ஸ்தாபனம் இரண்டாகப் பிரிவுபடுவதற்கு முன்னர் பல சந்தர்ப்பங்களில் அவர் அதன் காரியதரிசியாக இருந்து வந்திருக்கிறார். நேருஜியுடன் இலங்கை அரசாங்கம் நடத்திய பல பேச்சு வார்த்தைகளிலும் அவர் பங்கு கொண்டிருக்கிறார். காங்கிரஸ், தொண்டமான் காங்கிரஸென்றும் அஸீஸ் காங்கிரஸென்றும் பிளவுபட்ட பின்னர் அவர் அஸீஸ் பக்கத்தில் அவருக்கு வலது கரம் போல இருந்தார். சென்ற சனிக்கிழமை காலையில் திரு நாயர் கொழும்பில் தமது கடமைகளைச்செய்து விட்டுச் சொந்த ஊரான எட்டியாந் தோட்டைக்குச் சென்றார். எட்டியாந்தோட்டையை அடைந்த சில மணி நேரத்துக்குள்ளாக அவர் முற்றிலும் எதிர்பாராத முறையில் மார் அடைப்பு நோய் ஏற்பட்டு இறைவனடி சேர்ந்து விட்டார். அவரது ஈமக்கிரியைகளில் பல்லாயிரக்கணக்கான தொழிலாளர் கலந்து கொண்டு காலஞ் சென்றவருக்குத் தங்கள் கடைசி மரியாதைகளைச் செலுத்தினர்.

## போராட்டம்

தமிழ் அரசுக் கட்சியின் வருங்காலத் திட்டத்தைப் பற்றித் தமிழரசுத் தலைவர் திரு எஸ். ஜே. வி. செல்வநாயகம் இவ்வாரம் ஒரு முக்கியமான அறிக்கை வெளியிட்டிருக்கிறார். தமிழர்களுக்கு அவர்களது நியாயமான உரிமைகள் கிடைக்கும் வரையில் போராட்டம் ஓயாது என்றும் கூடிய சீக்கிரத்தில் மீண்டும் சத்தியாக்கிரகம் போன்ற ஒரு பெரிய போராட்டத்தைத் தமிழரசுக் கட்சி ஆரம்பிக்கலாமென்றும் திரு செல்வநாயகம் தமது அறிக்கையில் சூசகமாகக் கட்டிக் காட்டியிருக்கிறார். தமிழர்கள் தங்களுடைய குழந்தைகளுக்கு ஒரு போதும் சிங்களம் படித்து வைக்க அனுமதிக்கவே கூடாதென்றும் தமிழ் அரசாங்க ஊழியர்கள் அற்பச் சலுகைகளுக்கு ஆசைப்பட்டுச் சிங்களம் படிக்க முன்வரக் கூடாதென்றும் கேட்டுக் கொண்டிருக்கும் திரு செல்வநாயகம் கடுமையான போராட்டத்துக்குத் தமிழ் அரசாங்க ஊழியர்கள் ஆயத்தப்படுத்திக் கொள்ள வேண்டுமென்றும் அறிவித்திருக்கிறார்.

## புதுப்பிக்கப்பட மாட்டாது

இலங்கையில் இந்திய பாஸ்போர்ட்டுடன் இந்தியப் பிரஜைகளாக இருப்பவர்களைப் பற்றி நிதி மந்திரி திரு பீலிக்ஸ் டயஸ் பண்டாரநாயகா ஒரு முக்கியமான அறிக்கையை வெளியிட்டிருக்கிறார். இலங்கையர் செய்ய முடியாமல் இந்தியர்களின் சேவை அவசியமாயிருக்கும் வேலைகளுக்கு மட்டுமே இந்தியப் பிரஜைகள் இலங்கையில் தொடர்ந்து இருக்க வாச பர்மிட்டுகள் வழங்கப்படுமென்றும் மற்றவர்களின் பர்மிட்டுகள் காலாவதியாகும் போது அவை புதுப்பித்துக் கொடுக்கப்பட மாட்டாதென்றும் நிதிமந்திரி கூறியிருக்கிறார். இந்தியர்களாயிருப்பவர்கள் இலங்கை அரசாங்கம் விரும்பி அனுமதிக்கும் வரையில்தான் இலங்கையில் இருக்கலாமே தவிர அவர்களை வெளியேற்றுவதை இந்தியா ஆட்சேபிக்க முடியாது என்று பிரதமர் நேரு லோக சபையில் அறிவித்திருக்கும் அதே சமயத்தில் இலங்கையில் நிதிமந்திரி மேற்கண்டவாறு ஓர் அறிக்கை வெளியிட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. -ரஜனி

# ஆரோக்கியம் பெற ஒரு ஸ்பூன் அளவுடன் இன்றே ஆரம்பியுங்கள்








கள் அன்றாடத் தொல்லைகள், கவலைகளினால் ஜீரண வேலை பாதிக்கப்படுவது
நும் அதனால் சோர்வு ஏற்படுகிறது. அற்ப விஷயங்களிலும் ஆத்திரமுண்டாகி,
மதிப்பிழந்து, பொருமுகிறீர்கள். நீங்கள் பழைய உடல்வாகை மீண்டும் பெற
ணடிப்பது அவசியம். க்ருஷன் ஸால்ட்ஸ் சாப்பிட்டு உடல்வாகக் குறையிலிருந்து
துகாப்பு பெறுங்கள். உடல் உறுப்புகள் சரிவர செயலாற்ற உதவும் முக்கியமான
துப்பொருள்களும், உப்புகளும் வேண்டிய தகுதியான அளவில் கலந்துள்ளது
ருஷன் ஸால்ட்ஸ் ஒன்றே

ட்டுகள், மற்றும் கணுக்களில் வலி, கீல்வாதம், இடுப்பு வாதநோய், தொடையில்
படும் வாதநோய், படை மற்றும் இதர சரும வியாதிகள் ஆகியவற்றுக்கு
ரணம் ரத்தத்திலுள்ள அசுத்தங்கள். அவற்றை அகற்ற உங்கள் தேக நிலைக்குத்
ம்பூட்டுவது க்ருஷன் ஸால்ட்ஸ். காலையில் நீங்கள் அருந்தும் பானத்துடன் ஒரு
பூன் அளவு க்ருஷன் ஸால்ட்ஸைக் கலந்து சாப்பிடுங்கள்






## சிறந்த உடல் நலம் பெறச் சாப்பிடுங்கள்

# க்ருஷன் ஸால்ட்ஸ்

L.G 17 TM ஒரு நிக்கொலஸ் (N) தயாரிப்பு • தரத்திற்கும் தூய்மைக்கும் நீங்கள் பெறும் உத்தரவாதம்



அட்டைப்படக்கதை

# நீலகிரி ரோஜா

"ஊ ய்..... ய்ய் ....." என்று விசிலடித்த வண்ணம் யூகலிப்டஸ் மரத்தினூடே சலசலப்பை உண்டாக்கிக் கொண்டு பேய்க்காற்று வீசிக் கொண் டிருந்தது. இந்த விசிலுக்குக் கர கோஷமோ என ஐயுறும்படி இடி இடித்துக் கொண்டிருந் தது. இதை ஒன்றும் சட்டை பண்ணுமல் ஒரு பெரிய பிளிமத் கார் அந்த நீலகிரி மலை ரோட் டில் வேகமாகப் போய்க் கொண்டிருந்தது: ஏன் பறந்தது என்று கூடச் சொல்லலாம்.

எங்கும் ஒரே அந்தகாரம். இருட்டில் பயந்து கொண்டு ஓடும் ஓர் அழகியைப் போல் பறந் தது அந்தக் கார்.

"கிரீச்.....ச்..." கார் நின்றது.

பின் சீட்டிலிருந்து மில் முதலாளி நீலமேகம் எட்டிப் பார்த்தார். "நான்சென்ஸ் – என்ன ஆச்சு கந்தசாமி?"

"ஒன்னும் இல்லே, சார்! ஒரு நரி குறுக்கே....?"

பயத்தோடு தலையிலிருக்கும் காக்கித் தொப் பியைச் சரிப்படுத்திக் கொண்டான் டிரைவர் கந்தசாமி.

"இடியாடிக்! காலையில் நரி முகத்திலே விழிச்சாலும் அதிருஷ்டம்னு சொல்லுவாங்க. இப்போ, ராத்திரி. என்ன நிறுத்தி அதைப் பார்வை? மேலே ஓட்டிண்டு போ. ராத் திரி பத்தரை மணிக்குள்ளே நான் கோயம்புத் தூரில் இருக்கணும். காலையில் இம்பார்ட் டெண்ட் என்கேஜ்மெண்ட் வேறே இருக்கு.."

கார் பறந்தது.

"இப்போ நாம்ப எங்கே இருக்கிறோம், கந்தசாமி?"

"வெலிங்டனுக்கும் குன்னூருக்கும் நடு விலே சார்."

இருட்டில் தன் ரேடியம் டயல் கடிகாரத் தைப் பார்த்தார் முதலாளி நீலமேகம் அவர்கள். மணி எட்டே முக்கால். குஷனில் சொகுசாகச் சாய்ந்து உட்கார்ந்து கொண் டார். நீலமேகம் அவர்களைத் தெரியாதவர் களே கோயம்புத்தூரில் இல்லை எனலாம். அவர் ஒரு பெரிய பருத்தி ஆலையின் முதலாளி. முதலாளி மட்டுமல்ல; கடும் உழைப்பாளி. அவர் உயிர், மூச்சு எல்லாம் பிஸினஸ்தான். பிறகுதான் வீடு வாசல் எல்லாம். ஷேர் மார்க்கெட்டில் அவருக்கு இருக்கும் அனுபவம் வேறு எவருக்குமே இருக்காது. எல்லோரும் விளையாட்டாக நீலமேகத்தினிடம் ஐம்பது ரூபாய் கொடுத்தால், ஐந்தே நாட்களில் அதை ஷேர் மார்க்கெட்டில் ஐயாயிரம் ரூபா யாக்கி விடுவார்" என்று சொல்வார்கள். அதுவும் ஓரளவுக்கு உண்மையே.

ஆனால் அவருக்குள்ள ஒரு கெட்ட குணம் என்னவென்றால், சின்ன விஷயத்துக்குக்கூடச் சிந்தித்து, கவலைப்பட்டு, உடம்பை உருக்கிக் கொள்வார். அதனால் தானே என்னவோ, ஒரு சின்ன விஷயம் நடக்காவிட்டாலும் கோபம் வந்துவிடும். அவரது பெயருக்கு ஏற்றாற்போல் நிறமும் கறுப்பு. தலையில் அங் கொன்றும், இங்கொன்றுமாக நரைத்த மயிர்; எப்பொழுதும் சிந்தனையிலாழ்ந்திருப்பதன் பயனாக, நெற்றியில் மூன்று சுருக்கங்கள். கண்ணில் தங்க பிரேம் போட்ட மூக்குக் கண்ணாடி: இதுதான் இருவாளர் நீலமேகம் அவர்கள்.

நீலமேகம் அவர்களுக்கு அப்பொழுதிருந்த விசாரம் எல்லாம், அடுத்த நாள் காலை இருக் கும் பிஸினஸ் என்கேஜ்மெண்ட் பற்றித்தான். மெதுவாக ஒரு விலையுயர்ந்த சிகரெட்டை எடுத்து உதட்டில் நைசாக வைத்துக் கொண்டார். பிறகு, சிறிது துளாவி விட்டு அவரது கைப் பையிலிருந்த தங்க சிகரெட்

லைட்டரை எடுத்தார். — அவரது பிள்ளை சேகர் அவர் நாற்பதாவது பிறந்த நாளன்று கொடுத்தது. —அனுபவித்து இரண்டு தடவை சிகரெட் புகையை நாசி வழியாக வெளியில் விட்டு, சிந்தனையில் ஆழ்ந்தார்....

நாளைக் காலையில் அந்த 'ஸ்டிரைக்' விஷயத்தைச் சமாளிக்க வேண்டும். பிறகு ஷேர்மார்க்கெட் நிலவரத்தைப் பார்த்துக் கொண்டு, பாரியதரிசியிடம் போனஸ் விஷயத்தைப் பற்றிப் பேச வேண்டும்....பாவம்! மீனாட்சிக்கு நான் வரும் போது உடம்பு சரியாகவே இல்லே..சட்! மீனாட்சியைப் பற்றிப் பிறகு கவலைப் பட்டுக் கொள்ளலாம். முதலில் அந்தப் போனஸ் விஷயம்.

''கர்ர்.....'' கார் திடீரென்று நின்றது.

''கந்தசாமி, வாட் ஈஸ் தி மேட்டர்? திரும்பியும் தரியா...? சே..சே!''

கந்தசாமி பயபக்தியோடு கீழே இறங்கினான்.

''இல்லே ஸார். சாயங்காலம் புயல் காத்திலேயும், மழையிலேயும், ஒரு பெரிய மரம் ரோட்டுக்குக் குறுக்கே விழுந்திருச்சு. அதான் போக முடியலேங்க.''

பரிதாபமாகத் தலையைச் சொறிந்தான் கந்தசாமி.

''டாம், நியூஸென்ஸ்...!'' என்றார் நீலமேகம். அவருக்கு வந்த எரிச்சலிலும், கோபத்திலும் வேறு எந்த வார்த்தையும் ஞாபகத்துக்கு வரவில்லை திட்டுவதற்கு!

இரண்டு ஆட்களும் சேர்ந்து அந்த மரத்தை அப்புறப்படுத்துவதென்பது இந்த ஜன்மத்தில் ஆகாத காரியம்.

''டாம் இடியட். தலையைச் சொறிந்தால் காரியம் ஆயிடுமா? ஏதாவது பண்ணித் தொலை. முதலில் நாம் எங்கே இருக்கிறோம். அதைச் சொல்லு'' என்று கேட்டார் நீலமேகம் கோபமாக.

''குன்னூரைத் தாண்டி ஒரு எஸ்டேட் பக்கத்திலேங்க.''

''விடிந்தது போ.''

''முதலில் நீங்க இங்கே கையில் பணத்தோடு தனியாக இருப்பது நல்லதில்லேங்க. உங்களைப் பக்கத்தில் அதோ தெரிகிற வீட்டில் கொண்டு போய் விட்டுவிட்டு நான் ஆட்களைக் கூட்டிக்கிட்டு வந்து இந்த மரத்தை நகர்த்திடறேனுங்க.''

நீலமேகம் அவர்களுக்கு அந்த யோசனை உசிதமாகப் பட்டது. ஞாபகமாகக் கைப் பையையும் சிகரெட் டப்பாவையும் எடுத்துக் கொண்டு கிளம்பினார்.

அது ஒரு சிறிய ஓட்டு வீடு. பிரதான சாலைக்குப் பக்கத்திலேயே ஒரு மேட்டில் இருந்தது. வீட்டை நெருங்கியதுமே கம்மென்று பூக்களின் மணம் நாசியைத் துளைத்தது. ரோஜாப்பூச் செடி கொடியாக ஓட்டின்மேல் படர்ந்திருந்தது. சின்ன வராந்தாவிலிருந்த ஒரு மரத் தூணில் ஒரு வெள்ளை நாய் கட்டிப் போடப்பட்டிருந்தது. இவர்களைப்பார்த்ததும்





"என் டாக்டர் ஆரார். மருந்தில்லா மலே நரம்புப் பலஹீனத்தைக் குணப் படுத்தி விட்டார்!"

"எப்படி?"

"என் மனைவியைப் பரிசோதித்து விட்டு அவளிடம் காதோடு ஏதோ சொன்னார்; அவ்வளவுதான்!"

"என்ன சொன்னார்?"

"பலஹீனத்துக்கு அவள் வயது அதிகமாகிக் கொண்டிருப்பதுதான் காரணம் என்றார்"

'லொள்....லொள்...' என்று இரண்டு தடவை சம்பிரதாயத்துக்குக் குரைப்பது போல் குரைத்து விட்டு வாலை ஆட்டியது!

"என்ன ரோஸி, சத்தம் போடறே?" என்று சொல்லிய வண்ணம் கதவைத் திறந்தாள் ஒரு பெண். அவளுக்கு இருபது இருபத்தைந்து வயதிருக்கும். நல்ல வாளிப்பான தேகம். களையான முகம். புடவையைச் சரிப் படுத்திக் கொண்டே, "யாரு நீங்க? என்ன வேணும்?" என்று கேட்டாள் அவள் சந்தேகத்தோடு.

கந்தசாமி அசட்டுச் சிரிப்பு ஒன்றை உதிர்த்து விட்டுத் தலையைச் சொறிந்தான். நீலமேகம் செட்டியார் பொங்கி வரும் எரிச்சலைக் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டு இலேசாகக் கனைத்தார்.

கந்தசாமி குறுக்கிட்டு, "இவரு எங்க எஜமானர். காரில் வந்தோம். ரோட்டிலே ஒரு மரம் விழுந்திருக்கு. இவரைக் கொஞ்ச நேரம் இங்கே இருக்க அனுமதித்தீர்களானால், நான் போய் யாராவது ஆளுகளைக் கூட்டிக் கிட்டு வருவேன். இங்கே வேறு..." என்றான்.

அந்தப் பெண் அவரைப் பார்த்து, "சாமி! நீங்க தாராளமாக இங்கே இருக்கலாமுங்க. ஆனால் இப்ப என் வூட்டுக்காரருகூட இங்கே இல்லீங்க. பக்கத்துக் கிராமத்திலே மார்க் கெட்டுக்குப் போனவரை இன்னும் காண லீங்க" என்று கூறிக் கொண்டே டிரைவர் பக்கமாகத் திரும்பி, "இந்தா டிரைவரு. இப்படி நாலு மைல் போனால் கிராமம் வரும். போய் ஆளுங்களையெல்லாம் கூட்டிக்கிட்டு வரலாம்" என்றாள்.

"நீங்க இங்கேயே ஜாக்கிரதையாக இருங்க. நான் நடந்து போயிட்டு ஓடியாறேன்" என்று சொல்லி விட்டு அங்கிருந்து நடந்தான் டிரைவர் கந்தசாமி.

அந்தப் பெண் பரக்கப் பரக்க உள்ளே ஓடினாள். ஒரு நைலான் நாடா சேரோடு வெளியே வந்தாள். பனியோடு அதை வராந்தாவில் போட்டு விட்டு, "இங்கே உட்காருங்க சாமி. ஏதாவது வேணுமானால் என்னைக் கேளுங்க. என் பெயரு பொன்னி" என்று கூறி உள்ளே மறைந்தாள்.

பின்னை அதில் உட்காரப் போனார். "கர்... கிக்...க்..." என்று பலமாகச் சத்தம் போட்டு அவர் உட்காருவதை எதிர்த்துப் போராடி விட்டுப் பிறகு ஓய்ந்தது சலிசேர். சாய்ந்து உட்கார்ந்து கொண்டார். ஆனால் மனத்துக்கோ அந்த அமைதியான சூழ்நிலை இதமாக இருந்தது. இலேசாகப் பூவின் நறுமணத்தோடு காற்று வீசிற்று. இவ்வளவு நேரம் கருமேகங்களுக்குப் பின்னால் ஒளிந்து கொண்டிருந்த சந்திரன் மெதுவாக வெளியே எட்டிப் பார்த்தான். நிலா வெளிச்சத்தில் அந்தச் சிறு தோட்டத்தில் இருந்த வண்ண மலர்கள் புது எழிலோடு மின்னின.

பின்னை தமது கண்களை மூடிக் கொண்டார். சிந்தனை வயப்பட்டார்.....

'எங்கிருந்து எனக்கு இவ்வளவு ரசனை வந்தது? பெரிய பூந்தோட்டமும், அதை வைத்துக் கொள்ள இரண்டு தோட்டக்காரர் களும் இருக்கிறார்கள். இருந்தும் என்ன பயன்? ஒரு மலரைக் காண்பதில் இவ்வளவு சந்தோஷம் உண்டு என்று இதுவரையில் நான் உணர்ந்ததில்லையே.... ஏன்?

எனக்கு ரசிக்க நேரமில்லையா? அழகை ரசிக்கக்கூட நேரமில்லாமல் பாழாய்ப் போன பிஸினஸ்......

"லொள்...லொள்..." என்று குரைத்த ரோஸி அவரது சிந்தனையைத் தொடர விடாமல் துண்டித்தது.

அவரது கவனத்தைக் கவரக் குரைத்த ரோஸி அவர் பக்கம் திரும்பியதும் குழைந்து வாலை ஆட்டியது. கெட்டியான அவரது மனமும் கரைந்தது. அதற்குத்தான் ஓர் அன்னியனிடம் எவ்வளவு அன்பு!

ஆமாம்! அவருடைய நாய் சீஸரும்தான் இருக்கிறது. உயர்ந்த ஆல்சேஷன் ஜாதி நாய் தான். ஆனாலும் வெறும் இறைச்சியும் பாலும் மட்டுமே சாப்பிடுவதாலோ என்னவோ மனிதனின் சதையையும் பதம் பார்க்கத் தயாராக இருக்கும் ஒரு மூர்க்க குணம்!

உள்ளே குழந்தை அழும் சத்தம் கேட்டது. பிறகு 'டங்' கென்று பாத்திரம் வைக்கும் சத்தம்! சிறிது நேரத்துக்கெல்லாம் பொன்னி அழகாகத் தாலாட்டுப் பாடுவது கேட்டது. உலகமே அந்த வேளையில் அமைதியாகவும் ஆனந்தமாகவும் இருப்பதாகப் பட்டது அவருக்கு. அலுப்போடு பெருமூச்செறிந்த வண்ணம் கண்ணை மூடிக் கொண்டார் அவர்.

"சரக்...சரக்..."

யாரோ செருப்புப் போட்டுக் கொண்டு வருகிறார்கள் போலிருக்கிறது. ரோஸி செல்லமாக, "ஊ..ஊ..." என்று முனகியது. அவர் கண்ணைத் திறந்து பார்த்தார். வாட்ட சாட்டமான ஒரு வாலிபன் வந்து கொண்டிருந்தான். மேற்பார்வையிலேயே, இவன் நேர்மையானவன், நல்லவன் என்று முகம் கூறியது. அவரை முறைத்துப் பார்த்து விட்டு அவன் உள்ளே சென்றான்.

உள்ளே அவன் பொன்னியிடம் ஏதோ பேசுவது கேட்டது. சிறிது நேரத்துக்கெல்லாம் அவன் திரும்பி வெளியே வந்தான். இந்தத் தடவை அவரைப் பார்த்து முறைக்கவில்லை. பயமாக இருந்தது அவன் பார்வை! ஒரு கையில் தட்டு, அதில் பீச்சஸ், ப்ளம்ஸ் போன்ற மலை ஜாதிப் பழங்கள். இன்னொரு கையில் ஒரு டம்ளர் சூடான பால்!

''சாமி! இப்பத்தான் பொன்னி சொல்லித்துங்க. நான்தான் பொன்னியின் புருசன் ஆறுமுகம். கட்டாயம் இதை நீங்க எடுத்துக்கணும். நீங்க இங்கே தங்கினது எனக்கு ரொம்ப சந்தோஷமுங்க'' என்று சொல்லி அந்தப் பழத்தையும் பாலையும் அவர் பக்கத்தில் வைத்து விட்டு உள்ளே சென்றான்.

அவருக்குப் பசிக்கவே இல்லை. இருந்தாலும் கொடுத்தவர்களின் வெள்ளை மனத்திலிருந்து உதித்த அன்பை நினைத்து, இரண்டு பழங்களைச் சாப்பிட்டு விட்டு, அரை டம்ளர் பாலைப் பருகினார். ரோஸி அவர் உண்பதையே ஏக்கத்தோடு பார்த்துக் கொண்டிருந்தது. அதுக்கு ஒரு தினுசு ஏக்கம்; இவருக்கு ஒரு தினுசு ஏக்கம்! இவருக்கு, எத்தனையோ எளிமையான இன்பத்தைக் கூட நாம் அனுபவிக்காமல், நழுவிச் செல்ல விட்டு விட்டோமே, நமக்கு இந்த மாதிரி அமைதியான, இன்பமான வாழ்க்கை கிடைக்காதா என்ற ஏக்கம். ரோஸிக்கு அரை டம்ளர் பால் கிடைக்காதா என்ற ஏக்கம். ரோஸியினுடைய ஏக்கத்தைத் தீர்க்கலாம். செட்டியார் எழுந்து சென்று, ரோஸியினுடைய பீங்கான் கிண்ணத்தில் மிஞ்சியிருந்த பாலை ஊற்றினார். ரோஸி அவரை நன்றியோடு ஒரு தடவை பார்த்து விட்டு, அவசரமாகப் பாலை நக்கிச் சாப்பிட ஆரம்பித்தது. நீலமேகம் ஈஸிசேரில் சாய்ந்துகொண்டு சிகரெட்டைப் பற்ற வைத்தார்.

உள்ளே கலகலவென்று பொன்னி சிரிக்கும் சத்தம் கேட்டது. ஆறுமுகம் ஏதோ பேசிக் கொண்டிருந்தான். அவர்கள் இருவரும் வேறு உலகில் இருந்தனர். வராந்தா என்று ஓர் இடம் இருக்கிறது. அங்கு நீலமேகம் என்று ஒருவர் இருக்கிறார் என்றே அவர்களுக்கு ஞாபகம் இல்லை.

நீலமேகம் வீட்டைச் சுற்றி நோட்டம் விட்டார். பக்கத்தில் நெருப்புப் பெட்டியை அடுக்கி வைத்தாற் போல் மூன்று அறைகள். இரண்டு அறைகளுக்கு வராந்தாவிலிருந்து தான் கதவு. எல்லா அறைகளுக்கும் கண்ணாடி ஜன்னல்கள். கண்ணாடி பலவற்றில் உடைந்திருந்தது. உடைந்த கண்ணாடிக்குப் பதில் கந்தல் துணியைப் போட்டு மூடியிருந்தார்கள். ஓர் அறை சமையலுக்கு இருக்கும். இன்னொன்று தூங்குவதற்கு. இன்னொன்று... சே, சே! எது எப்படி இருந்தால் எனக்கு என்ன?....

மனத்தை அடக்கினார் செட்டியார். ஆனால் அது அப்படியெல்லாம் அடங்குமா? மனக் குரங்கு, சண்டி செய்யும் சிறு குழந்தை போல், அவர் பிடியிலிருந்து திமிறிக்கொண்டு ஓடியது.

பொன்னியின் கணவன் ஆறுமுகம் சாப்பிடுகிறான் போலிருக்கிறது. சமையலறையிலிருந்துதான் சிரிப்புச் சத்தம் வருகிறது. சும்மா எட்டிப் பார்த்தால் என்ன?

'சே, சே! என் பண்புக்கு இழுக்குத் தேடித் தரும் செயல் அல்லவா அது? தூ... இப்படிக் கூட மரியாதைக் குறைவாக நடக்கத் தோன்றுகிறதே. இன்று எனக்கு என்ன வந்து விட்டது?'

பேசாமல் திரும்பிச் சென்று தட்டைக் கீழே வைத்து விட்டு, ஈஸிசேரில் சாய்ந்தார்.

அவர் மனத்தில் ஏதோ இனம் தெரியாத ஏக்கமும் துக்கமும் நிரம்பி வழிந்தன. ஏன்? அவருக்கே புரியவில்லை. ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்தார். அவர் வருத்தமாக இருக்கும் போது, அவர் 'மூடை'ச் சரிப்படுத்துவது அதுதான். அவர் சிந்தனை தொடர்ந்தது.

'இவர்களுக்குத்தான் என்ன ஆனந்தம்! பார்க்கப் போனால் ஒரு சிறு சம்பவம்தான். ஒரு கணவனும் மனைவியும் சேர்ந்து சாப்பிடுவதில்கூட இவ்வளவு இன்பம் இருக்கிறதா? இது எப்படி இதுவரையில் எனக்குத் தெரியாமல் போயிற்று?'

சிகரெட் புகை வளையம், வளையமாக மேல் நோக்கிச் சென்றது. மேலே, போகப் போக உருத் தெரியாமல் கலைந்து விட்டது. ஆம், இன்பமும் அப்படித்தான் அவருக்குப் பாச்சா காட்டி விட்டுப் பிறகு அதன் மகத்துவத்தை அறிந்து கொள்ளும் சமயத்தில், முதுமையைக் கொடுத்து விட்டு மறைந்து விட்டது.

இயந்திரம்... அவர் வெறும் இயந்திரம் தான். இப்பொழுது மட்டுமல்ல. அவருக்குப் பதினெட்டு வயதில் கல்யாணம் ஆச்சு. அப்பொழுதும் இந்தக் காலத்துப் பசங்கள் போல் பிக்னிக், சினிமா என்று அவர் மனைவியோடு சுற்றினதில்லை. காலையிலிருந்து மாலை வரை மில்லில் இருப்பார். சாயந்திரம் கிளப்புக்குப் போவார். மீனாட்சி, லேடீஸ் கிளப்புக்குப் போய் விடுவாள். அவர்கள் சந்தித்துக் கொள்வதே அபூர்வம். பிறகு பேசுவதற்கு நேரம் ஏது! யாராருக்கு எப்பொழுது பசிக்கிறதோ, அப்பொழுது சாப்பிடுவார்கள்.... நேரம், வேளை என்று கிடையாது. இருவரும் சேர்ந்து சாப்பிட உட்கார்ந்தார்களானால், மீனாட்சி அம்மாள் பாட்டுக்கு ஏதாவது சள சள வென்று பேசிக் கொண்டிருப்பாள். அவர் ஏதாவது புத்தகத்தைப் பார்த்துக் கொண்டே சாப்பிட்டுக் கொண்டு நடு நடுவில், ''ஹூம்.... ஹூம்'' மாடு மாதிரி தலையை ஆட்டிக் கொண்டிருப்பார். அவள் சொல்லுவதைக் கேட்பதாகப் பாவனை. இப்படியே கல்யாணம் ஆகி இருபத்தைந்து வருஷங்களை ஓட்டி விட்டார். சேகரும், கீதாவும் அவரது செல்வங்கள். இன்று பெரியவர்களாக அவர்களும் வளர்ந்து விட்டார்கள்.

அவருக்கு அப்பொழுது ஒரு சம்பவம் ஞாபகம் வந்தது. போன மாதம் ஒருநாள் அவர் சாப்பிட உட்கார்ந்த போது, வடை பாயஸத்தோடு சாதம் பரிமாறப்பட்டது. இன்றைக்கு என்ன பண்டிகை என்று அவர் மண்டையைக் குழப்பிக் கொண்டிருந்தபோது மீனாட்சி அம்மாளே உதவிக்கு வந்தாள்.

''இன்னியோட நமக்குக் கல்யாணம் ஆகி இருபத்தைந்து வருஷங்கள் ஆகின்றன. அது தான் பாயஸம்!'' என்றாள்.

உடனே பர்ஸிலிருந்து இருநூறு ரூபாயை எடுத்து அவளிடம் கொடுத்து விட்டு, ''ஏதா

வது வாங்கிக்கோ'' என்றார் ரத்தினச் சுருக்கமாக. சாயந்திரம் அவள் புதுப் புடவை கட்டிக் கொண்டிருப்பதைப் பார்த்துவிட்டு, 'சரி, புடவை வாங்கிக் கொண்டாள் போலிருக்கிறது' என்று நினைத்துக் கொண்டார்; அதைக் கூட அவர் கேட்கவில்லை !

'சரி, அதை யெல்லாம் பற்றி இப்போது ஞாபகப்படுத்திக் கொள்வதில் என்ன பிரயோசனம்?'

அவர் திரும்பினார். உடைந்த சனிசேரில் இருந்த ஓர் ஆணி, 'சுருக்'கென்று குத்திற்று. மெதுவாக எழுந்து வெளியே எட்டிப் பார்த்தார். கண்ணுக்கு எட்டியவரை டிரைவர் கந்தசாமியைக் காணோம். கைக் கடிகாரம் மணி பத்து என்று காண்பித்தது.

மெல்ல வராந்தாவில் உலவ ஆரம்பித்தார். உள்ளே விளக்கு இல்லை. படுக்கும் அறையில் மட்டும் விடிவிளக்கு எரிந்து கொண்டிருந்தது. நாய் ரோஜிகூடத் தூங்கி விட்டது. உள்ளே எட்டிப் பார்த்தார். எல்லோரும் பாயில் உறங்கிக் கொண்டிருந்தனர். பொன்னியும் ஆறுமுகமும் குளிருக்காக ஒரு பெரிய கோணியைப் போர்த்திக் கொண்டிருந்தனர். அதற்கு மேல் ஆயிரம் பொத்தலுடைய கம்பளி ஒன்று. இருவருக்குமாக! ஆறுமுகத்தின் பக்கத்தில் ஒரு சிறு பாலகன்! ஆறுமுகத்தின் மார்பில் தன் பிஞ்சுக் கைகளைப் போட்டுக் கொண்டு உறங்கிக் கொண்டிருந்தான். அவன் மட்டும் பத்திரமாக ஒரு புடவையைப் போர்த்திக் கொண்டு உறங்கிக் கொண்டிருந்தான்.

என்ன அழகான குடும்பம்! அன்பும் பாசமும் சேர்ந்து பின்னப்பட்ட ஒரு கூடையில் இருக்கும் மூன்று பழங்கள் போல் அவர்கள்...

'ஹூம், இந்த மாதிரி என் மேல் கையைப் போட்டுக் கொண்டு சேகரோ, சீதாவோ தூங்கினதில்லையே? சின்ன வயதில் தனியாக ஓர் அறையில் பாட்டியோடு தூங்கினார்கள். பிறகு, உயர்ந்த போர்டிங் ஸ்கூலில், ஊட்டியில் படித்தார்கள். பிறகு இப்பொழுது சென்னையில் கல்லூரி ஹாஸ்டலில் இருக்கிறார்கள். ஒரு நாள்கூட...சே, என்ன பைத்தியக்கார எண்ணங்கள், ஏக்கங்கள்...'

ரோஜாப்பூச் செடி அருகில், வாசற்படியில் உட்கார்ந்தார் நீலமேகம் மலரின் மணம் மனத்துக்கு இதமாக இருந்தது.

'பாவம் ஆறுமுகம்! போர்த்திக் கொள்ள இந்தக் குளிரில் ஒரு கம்பளிகூடக் கிடையாது. வறுமையிலேயே இவ்வளவு சந்தோஷமாக இருக்கிறார்களே, இன்னும் தேவைக்கு வேண்டிய பொருள்கள் இருந்தால் எவ்வளவு சந்தோஷமாக இருப்பார்கள்? நாம் திடீரென்று இவர்களுக்குப் பண உதவி செய்து மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தினால் என்ன?....

நீலமேகம் இந்த மாதிரி தான தர்ம சிந்தனையில் ஆழ்ந்ததில்லை. அந்த எண்ணமே அவர் 'லைனி'ல் கிடையாது. கட்டடத்துக்கு உதவி, கல்லூரிக்கு உதவி என்று அவர் ஒரு நயாபைசாகூடச் செலவழித்தது கிடையாது. அவர் உண்டு. அவர் குடும்பம் உண்டு! அவரைப் பொறுத்த வரையில் இந்த உலகில் அவ்வளவே உண்டு. அன்று ஏனோ அவர் மனம் இளகியிருந்தது. மனம் வேறு லயனில் போக முயன்று கொண்டிருந்தது!




'' வரிக் குதிரை எப்படி இருக்கும்?''

'' குதிரை மாதிரி இருக்கும். உடம்பெல்லாம் வரிகள் போட்டிருக்கும்.''

'' அதன் உபயோகம் என்ன ?''

''முக்கியமாக ஆங்கில அரிச்சுவடிப் புத்தகத்தில் Z என்ற எழுத்தை விளக்க அதை உபயோகிக்கிறார்கள்!''

வெறி பிடித்தவர் போலக் கைப்பையைத் திறந்து, செக் புத்தகத்தை எடுத்தார். மங்கிய அந்த நிலா வெளிச்சத்தில் ஆறுமுகம் பெயருக்குப் பத்தாயிரம் ரூபாய்க்கு ஒரு செக் எழுதினார். பிறகு அதை எடுத்துக் கொண்டு சனிசேரில் சாய்ந்து உட்கார்ந்து கொண்டார். மனம் கற்பனை செய்தது.

'ஆமாம். இதை எப்படிக் கொடுப்பது? சாலை சீர்திருத்தப்பட்டதும் நேராக இவர்களை அழைத்துக் கொடுக்கலாம். ஆனால் அவர்கள் உடனே, ''சாமி, நீங்க எங்களுக்கு வாழ்வளித்த தெய்வம்'' என்று சினிமாவில் சொல்கிற மாதிரி, காலில் விழுந்து கும்பிடு வாங்க, எனக்கு வெட்கமாக இருக்கும். அது வேண்டாம். இல்லாவிட்டால், தற்பெருமைக்கு இடம் இல்லாமல், ஒரு காலிக் கவரில் இதைப் போட்டு சனிசேர் மேலே வைத்து விட்டுத் தெரியாமல் சென்று விடலாம். ஆனால் அதிலும் ஒரு தப்பு இருக்கிறது. இந்த அப்பாவி மனிதர்களுக்குச் 'செக்' என்றால் என்ன என்றுகூடத் தெரிந்திருக்காது. ஏதோ துண்டுக் காகிதம் என்று நினைத்துக் கிழித்துப் போட்டு விட்டால்...? ஒன்று பண்ணலாம். கூட ஒரு கடிதமும் அதோடு வைக்கலாம். இந்த மாதிரி உங்களுக்குப் பத்தாயிரம் ரூபாய்க்குச் செக் எழுதி வைத்திருக்கிறேன். ஏதாவது நிலம் நீச்சு வாங்கிக் கொண்டு சந்தோஷமாக இருங்கள் என்று எழுதலாம்......'

இப்படி இன்பக் கற்பனையில் ஆழ்ந்திருந்த நீலமேகம் கண்ணை மூடிக் கொண்டார். நித்திரை வசப்பட்டார்.

ஃ ஃ ஃ

நினைத்தபடி அவர் செக்கையும் கடிதத்தையும் வைத்து விட்டுக் காரில் சென்று விட்டார். காலையில் கடிதத்தைக் கண்ட ஆறுமுகம்

தம்பதிகள் மிகவும் சந்தோஷம் அடைந்தனர். அதில் எழுதியிருந்தபடி பக்கத்தில் மலிவாக வந்த சின்ன எஸ்டேட்டில் ஒரு பகுதியை வாங்கினான். வேர்வைக்குப் பதில் ரத்தமே சிந்தும்படி கஷ்டப்பட்டு உழைத்தான். கவலையால் உடல் மெலிந்தது. ஆனால் இரண்டே வருஷங்களில் நல்ல லாபம். தோட்டம் பெரிதாயிற்று. உடைந்த சன்னல்களெல்லாம் ரிப்பேர் செய்யப்பட்டன. ரோஸி சரியாகக் காவல் காப்பதில்லை என்ற குறைக்காக, சதா சர்வ காலமும் குரைக்கும் ஓர் உயர்ந்த ஜாதி நாய் வராந்தாவுக்கு வந்தது. இன்னும் நான்கு வருஷங்கள் கழிந்தன. வீட்டில் சௌகரியங்கள் போதவில்லை என்று வீடே பெரிதாக்கப்பட்டது. ஆறுமுகத்தின் பிள்ளை முருகன் நல்ல பள்ளிக் கூடத்தில் சேர்க்கப்பட்டான். வந்த லாபத்தைக் கொண்டு ஆறுமுகம் இன்னும் ஒரு பகுதி எஸ்டேட்டும் வாங்கினான்.

ஒரு நாள் நீலமேகம் அவர்கள் தாம் பணம் கொடுத்து உதவிய ஆறுமுகம் எப்படிச் சந்தோஷமாக இருக்கிறான் என்று பார்ப்பதற்காகக் காரை எடுத்துக் கொண்டு அந்தப் பழைய இடத்துக்குச் சென்றார். ஒரு புதிய பங்களா அவரை வரவேற்றது. நிறைவுற்ற மனத்தோடு படி ஏறினார். உள்ளே யாரோ இரைந்து பேசுவது கேட்டது. ஆறுமுகத்தின் குரல்தான்—

"போதும். இந்த வாழ்க்கையே போதும். ஏதடா ஒரு மனுஷன் இயந்திரம் கணக்காகக் காலையிலேயிருந்து சாயந்திரம் வரை மாடு மாதிரி உழைக்கிறானேன்னு உனக்கு ஒரு கருணை கிடையாது. ஏன், ஒரு சிரிப்பே கிடையாது. எப்போ பார்த்தாலும் முகத்தைத் தூக்கி வைச்சிக்கிட்டு, இது வேணும், அது வேணும், இது இல்லே, அது இல்லே—இந்தப் பாட்டுதான். சே! அட, நீதான் இப்படின்னால், அந்தப் புள்ளை முருகன் இருக்கானே, அவனுமா மாறிடணும்? பணத் தரித்திரம் தீர்ந்ததே தவிர, மனசிலே தரித்திரம் பிடிச்சிடுச்சு. எந்த வேளையிலே அந்த மகராசன் பணம் கொடுத்தாரோ அன்னிக்கே அதுக்குப் பதிலாக என் சந்தோஷத்தை விலைக்கு வாங்கிட்டான் பாவி. எவ்வளவு சந்தோஷமாக இருந்தேன். எல்லாம் போச்சு. எனக்கு வாழ்க்கையே வெறுத்துப்போச்சு. இன்னிக்கு என் முடிவு காலம் வந்துடுத்து..."

நீலமேகம் பயத்தோடு உள்ளே எட்டிப் பார்த்தார். ஆறுமுகம் தலைக்கு மேலாக ஒரு கைத் துப்பாக்கியைப் பிடித்துக் கொண்டிருந்தான். செட்டியாரின் முகம் வெளிறியது.

"ஆ....ஆ....று....மு....க....ம்!" அதற்கு மேல் அவருக்கு வார்த்தை வெளியே வரவில்லை. முகம் விகாரமாயிற்று.

"டமார்...."

"ஐயோ, வேண்டாம்!" நீலமேகம் பலமாகக் கத்தினார்.

ஃ ஃ ஃ

நீலமேகம் கண்ணை விழித்த போது கைப்பை கீழே விழுந்திருந்தது. செக் பறந்து போய் ரோஸியிடம் கிடந்தது.

எல்லாம்கனவுதானா...? நீலமேகம் அவர்களின் உடம்பு 'வெட வெட' வென்று பயத்தால் நடுங்கியது.

ரோஸியின் பீங்கான் கிண்ணத்தை உருட்டி விட்ட பூனை, செடியின் பின்னால் பாய்ந்து ஓடிக் கொண்டிருந்தது. நீலமேகம் "ரோஸி, நான் உனக்கும் இவர்களுக்கும் அபகாரம் பண்ண இருந்தேன். கடவுள்தான் என்னைக் காப்பாற்றினார் ரோஸி!" என்று கூறியபோது அவர் குரல் கம்மியது. ரோஸியை அன்புடன் தடவிக் கொடுத்தார் அவர். அதன் பக்கத்தி லிருந்த 'செக்'கை எடுத்தார். அவர் கண்களுக்கு அது கைத்துப்பாக்கி போல் காட்சியளித்தது.

"வேண்டாம், இது அவர்களுக்கு வேண்டாம்" என்று நடுங்கும் கரங்களில் அதை நாலு துண்டாகக் கிழித்து வராந்தாவில் எறிந்தார். அவர் மனத்தில் தோன்றிய ஒரே ஒரு தர்ம சிந்தனையும் நசித்தது!

"பூம்....பூம்." கார் சத்தம் கேட்டது. அவசரமாகக் கைப்பையை எடுத்துக் கொண்டு கிளம்பினார் செட்டியார். பாவம், அவர்கள் தூங்கட்டும். அவர்களை எழுப்புவானேன் என்று எண்ணினார்.

வாசற்படி இறங்கும்போது ஒரு ரோஜாப்பூ முள் அவருடைய வேஷ்டியில் மாட்டிக் கொண்டு இழுத்தது. திரும்பினார். தான் கவர்க்கத்தில் சில மணி நேரம் இருந்ததற்குச் சாட்சி வேண்டாமா? அங்கும் இங்கும் திரும்பிப் பார்த்து விட்டு ஒரு சிவப்பு ரோஜாப் பூவைக் கிள்ளிக் கையில் எடுத்துக் கொண்டு, இருட்டுப் பாதையில் விரைந்தார்.

காரில் ஏறிக் கொண்டு ரோஜாப்பூவைப் பார்த்தார். ஏனோ அவரை அறியாமல் சிரிப்பு வந்தது. "இந்த மலரும் ரோஜாவும் சேர்ந்து என்னை ஒரு 'சென்டிமென்டல் ஃபூல்'லாக பண்ணி விட்டன. முதலாவது இந்தச் சந்தோஷமெல்லாம் என் வீட்டிலிருந்தால்கூட அனுபவிக்க நேரம் வேண்டாமா? ஹூம், ஏதோ பைத்தியக்கார ஏக்கம்...நானே அந்த ஸ்ட்ரைக் விஷயமாக...."

பழையபடி நடக்கும் இயந்திரமாக மாறின அவர், பிஸினஸைப் பற்றி யோசித்துக் கொண்டேசாய்ந்து உட்கார்ந்துகொண்டார்.

அடுத்த நாள் காலை பொன்னி வராந்தாவைப் பெருக்கும் போது கிழிந்த அந்தச் 'செக்'கைப் பார்த்தாள்.

"என்ன இந்த மனுசரு, குப்பையைப் போட்டிருக்காரு?" என்று சொல்லியபடி அதை வாரி, வாசலில் குப்பைத் தொட்டியில் போட்டாள்.

பத்து மணி நேரத்துக்கு முன்னால் பத்தாயிரம் ரூபாய் மதிப்புக் கொண்டிருந்த அந்தக் கிழிந்த செக், குப்பைத் தொட்டியில் இருந்த வண்ணம், இந்தப் பைத்தியக்கார உலகத்தைப் பார்த்துச் சிரித்தது.

நீலகிரி ரோஜாவுக்கு எப்படி மணம் இல்லையோ அப்படிக் கிழித்தெறியப்பட்ட அந்தச் செக்குக்கும் மதிப்பில்லைதான். ஆனால் சௌகரியங்களே இல்லாத அந்தச் சிறிய குடும்பத்தின் சந்தோஷத்தை மட்டும் எவராலுமே மதிப்பிட முடியாது.



# வட்டமேஜை

## தந்தியும் தபாலும் ஒன்றே!

மத்திய சர்க்கார் நிர்வாகத்தில் இயங்கி வரும் தபால் தந்தி இலாகாவின் தாமதங்களுக்கு இதோ ஓர் எடுத்துக்காட்டு.

நான் என் மனைவியைத் தனியாகச் சமீபத்தில் 4-5-62 அன்று பெங்களூர் குண்டக்கல் மார்க்கமாய்ப் பம்பாய்க்கு அனுப்பியிருந்தேன். போய்ச் சேர்ந்த விவரம் முதலில் தந்திமூலமும் பின்னர் தபால் மூலமும் தெரிவிக்கச் சொல்லியிருந்தேன். அதன்படி அவர்கள் போய்ச் சேர்ந்த விவரம்—7-5-62 அடித்த தந்தியும் 7-5-62 இட்ட கடிதமும்—9-5-62 அன்று முறையே காலை 9-45, 10-00 மணிக்குக் கிடைத்துள்ளன.

மேட்டூர் அணை
10—5—62 கே. சீனிவாசன்

## தொழில் விஸ்தரிப்பு அதிகாரிகளின் அவலநிலை

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் கிராமப் பகுதிகளில், சிறு தொழில் கிராமக் கைத்தொழில்களைப் பெருக்குவதற்கு 1955-ம் வருடம் முதற்கொண்டு தொழில் விஸ்தரிப்புக்கு அதிகாரிகள் நியமனம் செய்யப்பட்டனர். திட்டத்தின் செயலதிகாரிகளாகிய இவர்களது வேலை நிலையை ஊர்ஜிதம் செய்து வேலையில் சேர்ந்து சுமார் ஆறு வருடங்களாகியும் நிரந்தரமாக்கி ஒழுங்குபடுத்தாத காரணத்தால் சுமார் 350 குடும்பங்களின் நிலை அவலமாகவுள்ளது. இதர மாகாணங்களில் பணிபுரியும் இவ்வதிகாரிகளின் வேலை நிரந்தரமாக்கப்பட்டு விட்டது.

அரசினரால் அனுமதிக்கப்பட்ட பொறுப்பு வாய்ந்த ஒரு தனிக்குழு இவ்வதிகாரிகளைத் தேர்ந்தெடுத்து அவர்களுக்குத் தலா ஒன்றுக்குச் சுமார் ரூ 2000 அரசினர் செலவில் தொழிற் பயிற்சி அளித்து, மாநிலத்தின் பல் வேறு வட்டாரங்களில் பணி புரிய அமர்த்தப்பட்டனர். இவ்வாறு அமர்த்தப்பட்டவர்கள் மீண்டும் சென்னை சர்வீஸ் கமிஷன் மூலமாக மறுமுறையும்தேர்ந்தெடுக்கப்பட்டாலொழிய அவர்கள் வேலையிலிருந்து நீக்கப்படுவார்களென்று, அமர்த்தப்பட்டு ஐந்தாண்டுகள் கழித்து உத்தரவு பிறப்பிக்கப்பட்டுள்ளது. அதுபோல் இருமுறை தேர்வுக்குச் சென்று தேர்ந்தெடுக்கப்படாதவர்கள் 32 பேர்கள் தற்சமயம் உள்ளனர். இவர்களில் பெரும்பாலோர் தங்களது பொன்னான இளமைக் காலத்தை இந்தப் பணிக்கு அர்ப்பணித்து வயது அதிகமடைந்து விட்ட காரணத்தால் மற்றத் துறைகளில் உள்ள எந்தப்பணிக்கும் செல்லத் தகுதியற்றவர்களாய் உள்ளனர். 1959-ம் வருடத்திலேயே நிவர்த்தி செய்யப்பட வேண்டிய இக்குறை பொறுப்புவாய்ந்த மேலதிகாரிகளின் அலட்சியப் போக்கினாலும் கவனக் குறைவாலும் நிவர்த்தி செய்யப்படவில்லை. அதன் காரணமாக இவ்வலுவலர்கள் அவல நிலைக்கு ஆளாக்கப்பட்டுள்ளார்கள்.

மேலும் இவ்வதிகாரிகளை அடிக்கடி வெவ்வேறு இலாகாக்களுக்கு மாற்றிக்கொண்டு வருவதால் இவர்கள் கால் உந்து பந்தின் நிலையில் உள்ளனர். சென்னை அரசாங்கத்தொழில், வர்த்தக இலாகாவிலிருந்து இவ்வதிகாரிகளின் வேலைப் பொறுப்பை ரூரல் டெவலப்மெண்டு, லோகல் அட்மினிஸ்ட்ரேஷன் டிபார்ட்மெண்டுக்கு மாற்றி அதிக நாட்கள் ஆகவில்லை. மறுபடியும் சென்னை, கதர், கிராமக் கைத்தொழில் குழுவின் கீழ் இவ்வதிகாரிகளின் வேலைப் பொறுப்பை ஒப்படைக்க நடவடிக்கை எடுக்கப்பட்டு வருவதாகத் தெரிகிறது. கதர் கிராமக் கைத்தொழில்களை மட்டும் முன்னேற்றம் செய்வதற்காக அமைக்கப்பட்ட கதர் போர்டின் கீழ் இவ்வலுவலர்களின் வேலையின் முழுப் பொறுப்பும் ஒப்படைக்கப்பட்டால், மத்திய அரசினரால் இவ்வதிகாரிகள் செய்ய வேண்டும் என நிர்ணயிக்கப்பட்டுள்ளபடி கிராமக் கைத்தொழில்களுடன் சிறு தொழில், கைவினைத் தொழில் ஆகியவைகளைச் செயல் படுத்த முடியாமல் போய்விடும்.

திருச்சி
15-5-62 பாதிக்கப்பட்ட ஒருவர்

## அநியாய வரிவிதிப்பு

திருச்சி நகர சபையில் இந்த ஏப்ரல் மாதத்திலிருந்து புதிய வரி விதித்திருக்கிறார்கள். குடிசைகளுக்கும் அதிகமாக வரி போட்டிருக்கிறார்கள். இன்றைய விலைவாசிகள் விஷம் போல் உயர்ந்து கொண்டிருக்கின்றன. இந்த நிலையில் ஒரு மடங்குக்கு மூன்று மடங்கு அதிக வரியைப் போட்டால் ஏழைகளால் எப்படிச் சமாளிக்க முடியும்?

திருச்சி
26-4-62 பி. என். ஆர். கோபால்

## திட்டத்தின் விபரீதம்

சமீபத்தில் அதிகரிக்கப்பட்டுள்ள ரயில் கட்டண வரி ஏழை மக்களையே பெரிதும் பாதிக்கிறது. பொதுவாக இரண்டாம் வகுப்பு, மூன்றாம் வகுப்புக்களில் பிரயாணம் செய்வோர் படும் துன்பம் கொஞ்சநஞ்சமல்ல. இவர்களையே இக்கட்டண உயர்வு பாதிக்கும்.

இதனால்தான் நமது பெருமைக்குரிய தலைவர் ராஜாஜி திட்டங்களே மக்களின் வாழ்க்கையைப் பெரும் கஷ்டங்களுக்குள்ளாக்குகின்றன என்று சொல்லி வருகிறார். அகரத் திட்டங்கள் நாட்டைப் படுகுழியில் ஆழ்த்தும் என்பதை ஆளும் கட்சியினர் இப்பொழுதாவது உணர்ந்து ராஜாஜியின் யோசனையை அமுலாக்க முன்வர வேண்டும்.

பெங்களூர்
24-4-62 ஜி. சந்தானம்

# தலை அலங்கரிப்புக்குத் தகுந்த ஹேர் ஆயில்




தினந்தோறும் தலையில் எண்ணெய் தடவி நன்றாகத் தேய்த்து வருவதால் இந்திய மக்கள் அடர்ந்த, கருமையான, வளர்ச்சியுள்ள கேசத்தைப் பெற்றிருக்கின்றனர்.

மயிர்க்கால்களுக்கு எண்ணெய் போஷாக்கு அளிப்பதால் கேசம் அடர்த்தியாக வளருகிறது. ஆகையால்தான் புருஷர்கள் தங்கள் மயிர்க்கால்களின் இயற்கையான எண்ணெயோடு கலந்து ஊட்டமளிக்கக்கூடிய நல்லதோர் எண்ணெயைத் தேர்ந்தெடுக்கின்றனர்.

டாடாவின் ஹேர் ஆயில்கள் உங்கள் கேசத்திற்குப் போஷாக்கு அளித்து அடர்த்தியாகவும் ஆரோக்கியத்துடனும் வளரச் செய்கின்றன. கேசத்திற்குப் பளபளப்பு அளிப்பதோடு நன்றாகப் படியும்படி இருக்கச் செய்கின்றன.

டாடாவின் கோகோனட் மற்றும் கேஸ்டர் ஹேர் ஆயில்கள் நறுமணம் கமழும் மூன்று சைஸ்களில் கிடைக்கின்றன.

## டாடாவின் ஹேர் ஆயில்கள்

THOY-11-TAM

# பதில்?

ராமநாதன் படி ஏறினான். ஜன்னல் வழியாக மேஜை தெரிந்தது. வட்டமாக விழுந்த விளக்கின் ஒளி. புத்தக வரிகளில் விரலை ஓட்டியபடியே அவள் ஆழ்ந்து படித்துக் கொண்டிருந்தாள்.

அவன் காலடிச் சத்தம் கேட்டதும் பார்வை நிமிர்ந்தது. மின் நேரத்தில் உதடுகள் முறுக்கித் தளர்ந்து மீண்டும் தம் செதுக்கிய அமைதியில் சமைந்தன. அவன் மேலே போய்விட்டான்.

அறைக் கதவைத் திறந்ததும் காற்று உள்ளே புகுந்தது இதமாக இருந்தது. விளக்கைப் போட்டு விட்டு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டான். பூட்டைக் கழற்றக்கூட மனம் இல்லை. அந்த உதாசீனமான பார்வை மறுபடியும் நினைவைப் பிடுங்கிற்று.

அவன் அங்கே குடி வந்து ஒரு வருஷத்துக்கு மேல் ஆகியிருக்கும். கல்லூரியில் வேலை. காலை ஒன்பது மணிக்குப் புறப்பட்டால் வழியில் ஹோட்டலில் சாப்பிட்டுவிட்டு அப்படியே பஸ்ஸில் ஏறிப் போய் விடுவான். மாலையில் வேலை முடிந்ததும் அப்படியே உலா போய் விட்டு இரவுச் சாப்பாட்டைத் தீர்த்துக் கொண்டு அறைக்குத் திரும்ப இரவு எட்டு மணி ஆகிவிடும்.

அந்த மாடிப்படியில் எத்தனை படிக்கட்டுகள் இருந்தன வென்று அவனுக்குத் தெரியும். குனிந்த தலை நிமிராமல் ஒவ்வொன்றையும் எண்ணுவது போல அடி மேல் அடி வைத்துப் போகும் போது அவன் தலை யோசனைகளிலிருந்து மீள முடியாதது போலத் தோன்றும்.

அவனைப் போலவே அங்கு மாடி அறைகளில் நாலைந்து பேர்கள் குடியிருந்தார்கள். அவர்களிடையே, அரட்டையும், சீட்டாட்டமும், விவாதங்களுமாக எப்போதும் கலகலப்பாக இருக்கும். அவன் அவற்றில் கலந்து கொள்ளமாட்டான். இயற்கையாக ஒன்றிவிடாமல் அப்படித் தான் இருப்பது ஓர் அபூர்வமான இயல்பு என்று அவனுக்குத் தனக்குள்ளேயேஒருபெருமையும்தோன்றுவதுண்டு.

நாற்காலியில் புத்தகமும் கையுமாக உட்கார்ந்து படித்துக் கொண்டிருக்கும் போது அடுத்த அறைகளில் பேச்சொலி கேட்கும். அவைகளில் அடிபடும் விஷயங்கள் காதில் விழும் போது அவன் அவர்களோடு கலந்து கொள்ளாமல் பள்ளிக் கூடத்துப் பையனும், தான் உண்டு, தன் வேலை உண்டு என்று ஒதுங்கி நிற்பது எவ்வளவு அரிய பண்பு என்று தன் காலில் தானே பூப் போட்டுப் பெருமைப் பட்டுக் கொள்வான்.

அந்த வீட்டின் கீழ் போர்ஷனில் ஒரு குடும்பம் இருந்தது. எப்போதாவது அவர்கள் வீட்டிலிருந்து அவனுக்குச் சிறு உதவிகள் வரும். உடம்பு சரி இல்லாதபோது கொஞ்சம் வெந்நீர், அவன் இல்லாத போது அவனுக்காக வந்த தபால், அவனைத் தேடி வந்தவர்கள் விட்டுப் போன செய்தி, இப்படி ஏதாவது.

''தாங்க்ஸ்'' என்று சொல்லி அவன் அதைத் தலை நிமிராமல் ஏற்றுக் கொள்வான்.

கல்லூரிப் படிப்புக்காக அந்தக் குடும்பத்தில் வந்து ஒன்றியவள் தான் ராதை. அவர்களுக்கு நெருங்கிய உறவினளாக இருந்திருக்க வேண்டும். வெகு நாட்களுக்கு அதைப் பற்றிய அக்கறை அவனுக்கு இருந்ததில்லை. அவன் யாரையும் கேட்டதுமில்லை. கீழே இறங்கிப் போக வேண்டிய அவசியம் நேரும் போது தற்செயலாகப் பார்வையில் தட்டுப் பட்டால் தலையைக் குனிந்து கொண்டு போய்விடுவான். நிமிர்ந்து பார்த்திருந்தால் ஓரிரு வார்த்தைகள் பேசியிருப்பாளோ என்னவோ? அந்தச் சந்தேகம்தான் நிச்சயமாயிற்று, அந்தச் சம்பவம் நிகழ்ந்த போது.

அவனுடைய கல்லூரிக்கு ஆண்டு விழா வைபவங்களுக்காக அவன் ஏற்பாடு செய்திருந்தான். அதைப் பற்றிய செய்தி, அவனைப் பற்றிய குறிப்போடு தமிழ்த் தினசரி ஒன்றில் வெளியாகி யிருந்ததாகச் சொன்னார்கள். ஒரு புகைப்படத்தில் அவன் முகம் கூடத் தெரிந்ததாக ஒருவர் சொன்னஞாபகம். செய்தி காதில் விழுந்ததும் அவனுக்குப் பெருமை பிடிபடவில்லை. ஆனால் அந்தத் தேதியிட்ட தினசரி கிடைக்கவில்லை. அது தான் ஏமாற்றம்.

அதைப் பற்றி அடுத்த அறை நண்பர்களிடம் சொல்லிக் கொண்டிருந்தான்.

''கீழே அந்தத் தினசரி வாங்குகிறார்கள் போலிருக்கிறதே? கேட்டுப் பாருங்களேன்'' என்றார் நண்பர் ஒருவர்.

அடுத்த நாள் காலையில் அவன் புறப்பட்ட போது அவன் மனத்தில் அந்த ஒரு யோசனை எழுந்தது. எப்படிக் கேட்பது?

படி ஓரம் நின்றிருந்த ராதை அவனைக் கண்டதும் ஒதுங்கினாள். வழக்கம் போலத் திரும்பி உள்ளே போயிருப்பாள். அவன் முகத்தில் கவிந்த சிந்தனையையும், அவன் நின்று இரும்பியதையும் பார்த்ததும் போகாமல் நின்றாள்.

''ஒரு வேண்டுகோள்.''

''என்னது?''

''உங்கள் வீட்டில் வரவழைக்கும் தமிழ்த் தினசரியில் போன ஞாயிற்றுக் கிழமை இதழ் கிடைத்தால் தேவலை.''

''பார்க்கிறேன். எதற்கு?''

''எங்கள் கல்லூரியைப் பற்றிய செய்தி ஒன்று அதில் வெளியாகி யிருக்கிறது.''

''நீங்கள் கல்லூரியில் படிக்கிறீர்களா?''

எஸ். லட்சுமி சுப்பிரமணியம்

''இல்லை. வேலையாக இருக்கிறேன்.''

''என்ன வேலை?''

''ரசாயனத் துறையில் லெக்சரர்.''

''அப்படியா? இத்தனை நாட்கள் எனக்குத் தெரியாமல் போயிற்றே?''

''ஏன்?''

''எனக்கு அது கொஞ்சம் 'வீக்' சப்ஜெக்ட். அடிக்கடி சந்தேகம் ஏற்படும். உங்களைக் கேட்டுக் கொண்டிருந்திருக்கலாம்'' என்றாள் அவள்.

தலையைச் சாய்த்துக் கொண்டு குழந்தைத் தனமாக அவள் அப்படிப் பேசிய விதம் அவன் சிரிப்பைத் தூண்டியது. அவளும் சிரித்து விட்டாள்.



''அதற்கென்ன? அவசியம் ஏற்பட்டால் பார்க்கலாம்.''

''நானும் பார்க்கிறேன், நீங்கள் தேடி எடுக்கச் சொன்னதை!''

வேடிக்கையாகச் சளைக்காமல் அவள் பதில் சொன்னது அவனைப் பிரமிக்க வைத்தது.

இரண்டு நாட்கள் ஆகி யிருக்கும். அவன் இரவுச் சாப்பாடு முடிந்து அறைக்குத் திரும்பிக் கொண்டிருந்தான், இரண்டு நண்பர்களோடு. அவனைக் கண்டதும் படித்துக் கொண்டிருந்தவள் எழுந்து வாசலுக்கு வந்தாள். அவனும் சற்றுத் தள்ளிப் பின்தங்கி நின்றான்.

''மன்னிக்கணும் ஸார்! நீங்கள் கேட்ட இதழ் கிடைக்கவில்லை. நாலு நாட்களுக்கு முன்னால்தான் பழைய பேப்பர் வாங்குபவனிடம் போட்டு விட்டார்களாம்.''

''த்சொ, த்சொ!''

''கவலைப்படாதீர்கள்! என் சிநேகிதி ஒருத்தியிடம் சொல்லியிருக்கிறேன். அவர்கள் வீட்டில் தேடிப் பார்க்கிறேன் என்று சொல்லியிருக்கிறாள்.''

''எனக்காக நீங்கள் இவ்வளவு தூரம்—''

''அதனாலென்ன ஸார்! கொஞ்சம் வருகிறீர்களா? இங்கே ஒரு இடம் புரியவில்லை'' என்று புத்தகத்தை எடுக்கப் போனாள். அவனும் பின்தொடர்ந்தான்.

இன்னொரு நாள் எதிர்பாராமல் ஏதோ சின்னச் சந்தேகம். இப்படித் தொடர்ந்தது.

அவனுக்கு அந்த அனுபவம் புதுமையாகத்தான் இருந்தது, நண்பர்களின் பேச்சு காதில் படுகிற வரைக்கும்.

காலை நேரம். குளியல் அறை மும்முரம். ராமநாதன் கையில் துண்டோடு தன் முறைக்காகக் காத்துக் கொண்டிருந்தான். சுற்றிலும் பக்கத்து அறை நண்பர்கள் சூழ்ந்திருந்தனர்.

''ராமநாதனைக் கவனித்தீர்களா?'' என்று ஆரம்பித்தார் ஒருவர்.

''அவருக்கு நம்மைக் கவனிக்க நேரம் ஏது?''

சிநேகிதர்கள் கூத்தும் கொம்மாளமுமாக அடிக்க ஆரம்பித்து விட்டார்கள். வாயிலிருந்து புறப்பட்டதற்கெல்லாம் சிரிப்பு.... கேள்வியும் பதிலுமாக அவர்களுக்குள்ளேயே வாய்க்கு வாய் பந்தாடிய வண்ணம் இருந்தது.

ராமநாதன் குளிக்காமலே அறைக்குத் திரும்பி விட்டான். மனத்தில் அடக்கிக் கொள்ள முடியாத பொருமல். பதிலுக்குப் பதில் சொல்ல முடியாத நிலையை நினைத்துச் சங்கடம். பானைத் தண்ணீரில் முகத்தைக் கழுவிக் கொண்டு வழக்கத்தைவிடச் சீக்கிரமாகவே கல்லூரிக்குக் கிளம்பி விட்டான். மாடிப் படி இறங்கியானதும் ராதையின் உருவம் கண்ணில் பட்டது.

''எங்கள் வீட்டுக் கடிகாரம் நின்று போய் விட்டது. உங்கள் கடிகாரத்தில் மணி என்ன ஆகிறது என்று பார்த்துச்சொல்ல முடியுமா?''

''மன்னிக்க வேண்டும். தயவுசெய்து இனி மேல் என்னோடு பேச வேண்டாம்! இத்தனை நாட்கள் பேசினதில்லை. நீங்கள் இங்கே இன்னும் கொஞ்ச நாட்கள், பரீட்சை முடிகிற வரைக்கும் இருந்து விட்டுப் போய் விடப் போகிறீர்கள். இந்த இரண்டு மாதங்களும் அப்படியே போய் விடுவது நல்லது. மற்றவர்கள் என்னென்னவோ பேச ஆரம்பிக்கிறார்கள். உங்கள் நன்மையை மனத்தில் வைத்துக் கொண்டுதான் இதைச் சொல்ல வேண்டியதாக இருக்கிறது!''

அவள் கப்பென்று அடங்கினாள். அந்த மௌனம் அவள் குரலையும் அடக்கி விட்டது. மருட்சியோடு ஒரு முறை பார்த்து விட்டு உள்ளே போய் விட்டாள்.

அன்று அவனுக்குச் சாப்பிடப் பிடிக்கவில்லை. கல்லூரியில் வேலையும் ஓடவில்லை. தன் பேச்சு புண்படுத்தும்படி இருந்து விட்டதோ என்ற நினைப்பு மீண்டும் மீண்டும் அலைக்கும் போது நெஞ்சு தடுமாறியது. ஆனால் அதனிடையே ஒரு திருப்தி. ''அந்தப் பெண்ணுக்கு நல்லதைச் செய்து விட்டோம். உணர்ச்சிகளுக்கு இடம் கொடுக்காமல் கௌரவமாக நடந்து கொண்டு விட்டோம். அவளும் அதைக் கொஞ்சம் கொஞ்சமாக உணர்ந்து கொள்வாள். நாம் கண்யமாக நடந்து கொண்டதற்காக நம்மை மனத்துக்குள் பாராட்டிக் கொள்வாள்'' என்று நினைத்துச் சமாதானமடைந்தான்.

பரீட்சைகளின் மும்முரம் ஓய்ந்து விட்டது. அவனிடம் பாடம் கேட்க வரும் கோடி அறை மாணவன் ஊருக்குப் போய் விட்டான். இரண்டொரு நாட்களில் அந்தப் பெண்ணும் ஊருக்குப் போய் விடுவாள்.

பக்கத்து அறைகளில் யாரும் இருப்பதில்லை. மாலை ஏழு மணி. புலரும் வேளையில் சூழும் அமைதி போல் எங்கும் நிசப்தம். வாசலில் டாக்ஸி வந்து நின்ற சத்தம் கேட்டுக் கைப்பிடிச் சுவரின் அருகே வந்து நின்றான். படிகளில் காலடி ஒலி ஏறி வந்தது காதில் விழுந்ததும் திரும்பினான்.

பிரயாணத்துக்குத் தயாராக ராதை நின்று கொண்டிருந்தாள், தோளில் கைப்பையும் கையில் பிளாஸ்குமாக.

''நான் ஊருக்குப் போய் வருகிறேன், ஸார்!'' என்றாள் அவள்.

''ஆகட்டும்.''

சட்டென்று அவள் முகம் மாறியது. கோப நெற்றியில் செவ்வொளி வீசிற்று. குரலில் சீற்றம்.

''நான் நேர்மையாகத்தான் நடந்து கொண்டேன். என் மனத்தில் தப்பு ஒன்றும் இல்லை. அதனால்தான் உங்களிடம் அப்படி வித்தியாசமில்லாமல் பேசினேன்; பழகினேன். உங்கள் மனம் அப்படி இல்லை போல் இருக்கிறது. அதனால்தான் நீங்கள் அப்படிச் சொல்லி விட்டீர்கள். சுயநம்பிக்கை இல்லாவிட்டால் போகிறது. இனி மேல் மற்றவர்களையாவது சரியாகப் புரிந்து கொள்ளுங்கள். வருகிறேன்!''

அவள் திரும்பி விட்டாள். அவன் பதில் அவளுக்குத் தேவை இல்லை.

அவன் திகைப்பு அடங்கவில்லை. இட வைராக்கியத்தோடு ஏதோ அபூர்வ சாதனையை முடித்து விட்டதாக அதுகாறும் எண்ணி இருந்த பெருமை திடீரென்று சரிந்து உருக் குலைந்தது. படிகளின் வழியே இறங்கிப் போய்க் கொண்டிருந்த ராதையின் உருவத்தைப் பார்த்தபடி பட்ட மரமாய் நின்று கொண்டிருந்தான் அவன்.

# பாண்ட்ஸ்

## ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடர்

உபயோகித்து நாள் முழுவதும் குளுமையையும் நறுமணத்தையும் அனுபவியுங்கள்

பட்டுப்போன்ற மென்மை, அன்றலர்ந்த மலரின் குளுமை, துல்லிய நறுமணம்—இவற்றின் சேர்க்கைதான் பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடர்! அசௌகரியமான வியர்வையை விரைவில் உறிஞ்சுகிறது...நாள் முழுவதும் நறுமணத்தோடு இதமாக இருக்க உதவுகிறது. அதை வருஷம் பூராவும் உபயோகித்துப் பரவசமடையுங்கள்!



# சிவகாமியின் சபதம்

காந்தன்

பேராசிரியர் கல்கி அவர்களின் இம் மாபெரும் வரலாற்று நவீனத்தை அறியாதவர்களே இல்லை. நடிப்புக் கலையின் நாயகர்களாக விளங்கும் டி. கே. எஸ். சகோதரர்கள் இதை நாடகமாக்கி நடிக்க முன் வந்ததை யறிந்து பலரும் மகிழ்வெய்தினர். சிலர் ஐய



முங் கொண்டனர். இம் மாபெருங் கதையை நாடகமாக்கி நல்ல முறையில் நடத்துவது எவ்வளவு பெரிய காரியம் என்னும் மலைப்புத்தான் மேற்படி சந்தேகத்துக்குக் காரணம்.

முதன் முதலில் ''சிவகாமியின் சபதத்''தை நாடகமாக்கி அரங்கேற்றிய பெருமை ஸ்ரீராம கிருஷ்ண கிருபா அமெச்சூர்ஸ் குழுவினரையே சாரும். அவர்கள் இந்த நாடகத்தைத் தொழில் நடிகர்களும் வியக்கும் வண்ணம் மிகவும் சிறப்பாகப் பலமுறை பல ஊர்களில் நடித்து நாடகக் கலைக்கு நற்பணி புரிந்திருக்கின்றனர்.

இப்பொழுது நாடகக் கலையில் நீண்டகால அநுபவம்பெற்ற டி. கே. எஸ். சகோதரர்கள் இந் நாடகத்தை நடிக்க முன் வந்தது மேலும் ஒரு படி முன்னேற்றம் என்றே கூற வேண்டும்.

பாத்திரத் தேர்வு, நாடக அமைப்பு, காட்சி ஒப்பனைகள், ஆடை ஆபரணங்கள் ஆகிய வற்றையெல்லாம் டி. கே. எஸ். சகோதரர்கள் மிகச் சிறப்பாகச் செய்து விட்டனர். ஒரு படப்பிடிப்பின் போது காட்ட வேண்டிய அவ்வளவு அக்கறையையும், ஆர்வத்தையும் இந் நாடகத்துக்குக் காட்டி விட்டனர்.

மாமல்லபுரத்துக் கடற்கரைக் கோயில் சிற்ப சித்திரங்கள், சிலை வடிவங்கள் ஆகியவற்றை யெல்லாம் பார்த்த போது பல்லவ சாம்ராஜ்யம் தழைத்துப் படர்ந்திருந்த வரலாற்றின் மகோன்னத காலத்துக்கே போய் விட்டோமோ என்ற ஐயம் யாவருக்கும் ஏற்பட்டிருக்கும் என்பதில் ஐயம் இல்லை.

பேராசிரியர் கல்கி அவர்கள் பன்னிரண்டு ஆண்டுகளாகத் தம் உள்ளத்தில் தேக்கி வைத்திருந்த இந்நீண்ட நெடுங் கற்பனைக் கனவைத் தொடர் கதையாகக் ''கல்கி'' யில் படிக்காதவர்களே இல்லை யெனலாம். ராமாயணம், மகாபாரதம் ஆகிய இதிகாசங்களைப் போல் ''சிவகாமியின் சபத''மும் மக்கள் உள்ளங்களில் வேரூன்றி விட்டது. மேற்படி இதிகாச புருஷர்களை நினைவில் வைத்துக் கொண்டிருப்பது போல் இந்நவீனத்தில் வரும் பாத்திரங்களையும் மக்கள் மறந்து விடாமல் சதா நினைவில் இருத்தியிருக்கின்றனர். ''சிவகாமியின் சபதம்'' வரலாற்றில் வரும் பிரதான பாத்திரங்களான மகேந்திர பல்லவ சக்கரவர்த்தி, மாமல்ல நரசிம்மர், சிற்பியின் மகள் சிவகாமி, சேனாபதி பரஞ்சோதி, புத்த பிக்ஷுவான நாக நந்தியடிகள் ஆகியவர்களை யெல்லாம் வாசகர்கள் தங்கள் மனக்கண்ணால் மாதக்கணக்கில் பார்த்து ரசித்துவந்திருக்கின்றனர். அத்தகைய ரசிகப் பெருமக்களின் ஏகோபித்த பாராட்டுதல்களைப் பெறும் அளவுக்கு நாடகத்தைச் சிறப்பாகத் தயாரிப்பது மிகவும் அருமையான காரியம்தான். அந்த அருமையான காரியத்தை டி. கே. எஸ். சகோதரர்கள் மிகவும் பெருமைப்படும் விதத்தில் செய்திருக்கின்றனர் என்பதற்கு 6–5–62 அன்று திருவல்லிக்கேணி, பார்த்தசாரதி ஸ்வாமி சபாவின் ஆதரவில் அரங்கேற்றப்பட்ட ''சிவகாமியின் சபதம்'' நாடகம் தக்க சான்றாக இருந்தது.

பிராயம் முதிர்ந்த விசித்திர சித்தரான மகேந்திர பல்லவ சக்கரவர்த்தியின் நெடிதுயர்ந்த கம்பீரமான தோற்றத்தை டி. கே. பகவதியிடம் கண்டதும் 'நாடகம் களை கட்டி விட்டது' என்று நினைத்துப் பூரித்துப் போனேன். நம் மனத்தில் உருவாகி யிருக்கும் அதே பார்வை, அதே அழுத்தமான பேச்சு, கம்பீரமான நடை யாவற்றையும் அவரிடம் நேரில் காண முடிந்தது. சிற்பியின் மகளுக்கும், சக்கரவர்த்தியின் மகனுக்கும் இடையே வளர்ந்து விட்ட காதலை அழிக்க முற்பட்ட போது மகேந்திர பல்லவர் உள்ளம் நெகிழ்ந்து விம்மிய கட்டத்தில் பகவதி பிரமாதமாக நடித்து விட்டார்.

மாமல்லராக வந்தவர் டி. கே. சண்முகம். தந்தைக்கும் மகனுக்கும் இருந்த உருவ ஒற்றுமை மிகவும் பாராட்டும் வண்ணம் இருந்தது. பாண்டிய ராஜகுமாரி வானவன் மாதேவியுடன் சிவகாமியைப் பற்றிப் பேசிய போது மாமல்லர் மனம் பட்ட வேதனை மிகவும் அற்புதமாக வெளிப்பட்டது. டி. கே. சண்முகத்தின் சிறந்த நடிப்புக்கு அது நல்ல எடுத்துக்காட்டு.

''சிவகாமியின் சபத''த்தில் சிவகாமிதான் சிரமமான பாத்திரம். அதை ஏற்பவருக்கு நடிப்புக் கலையிலும் திறமை இருக்க வேண்டும்; நடனக் கலையிலும் திறமை இருக்க வேண்டும். சாதுர்யமும், மாதுர்யமுங் கொண்டு விளங்க வேண்டிய பாத்திரம்.

நாடகத்தைப் பார்க்கும் முன்பே என் கவலையெல்லாம் சிவகாமியைப் பற்றித்தான் இருந்தது. மேடையில் சிவகாமி எப்படித் தோன்றுவாள்? கதையைப் படித்து அவளைப் பற்றி ஏராளமாகக் கற்பனை செய்து வைத்துக் கொண்டிருக்கும் ரஸிகர்களை எவ்விதத்தில் திருப்தி செய்வாள்? தெய்வமாக்கலையான நடனக் கலையில் தேர்ச்சி பெற்று, மாமல்லரின் மனக்கோட்டை முழுவதையும் தனதாக்கிக் கொண்டு, கடைசியில் பூர்த்தி பெறாத மனோரதத்துடன் அம்பலத்தரசனின் அடிகளையே அடைக்கலமாகக் கொண்ட அப்பெண்ணரசியின் மகிமை முழுவதையும் மேடையில் வெளிப்படுத்த இயலுமா என்ற சந்தேகம் என் மனத்தில் தோன்றிப் பலமாகவே வேரூன்றி யிருந்தது. ஆனால் மேடையில் சிவகாமி தோன்றிய சில நிமிஷங்களில் என் கவலை மறையலாயிற்று. அதை வகித்த ஹேமலதா மிகத் திறமையாக நடித்தார். ஒவ்வொரு கட்டத்திலும் அவரது நடிப்பு துடிப்போடு விளங்கியது.

பரஞ்சோதியின் பாகம் பி. ஏ. சொக்கலிங்கத்துக்கு நன்கு பொருந்தியதாயினும் அவர் இன்னும் உணர்ச்சியுடன் நடிக்கப் பயில வேண்டும்.

நல்லபடியாகத் தயாரிக்கப்பட் டிருக்கும் இந்த நாடகத்தில் ஒரு முக்கியமான குறையைக் கண்டபோது சும்மாவிருக்கமுடியவில்லை. ''சிவகாமியின் சபத''த்துக்கு முக்கிய காரணமாயிருந்தவர் பிக்ஷு நாகநந்தி அடிகள். அவர் மட்டும் இல்லையென்றால் ''சிவகாமியின் சபத''மேயில்லை. நாகநந்தி வெறும் பிக்ஷு அல்ல; பயங்கர ராஜ தந்திரி; அருங்கலை விநோதர். கொல்லும் வேங்கையின் கொடுங் கோபமும், சீறும் நாகத்தின் சீற்றமும் கொண்ட அவரது உள்ளத்தில் காதலுக்கும் இடம் இருந்தது. அவரை வைத்துக்கொண்டு பேராசிரியர் கல்கி மனித உள்ளத்தின் ஆசாபாசங்களையும், விருப்பு, வெறுப்புக்களையும் அதியற்புதமாகப் படம் பிடித்துக் காட்டி யிருக்கிறார். ஆனால் அந்தப் பாத்திரம் அவ்வளவு திருப்திகரமாக அமையவில்லை.

இந்த நாகநந்தியைப் பார்க்கும்போது ஸ்ரீ ராமகிருஷ்ண கிருபா அமெச்சூர்ஸின் நாகநந்தியான டாக்டர் ராமமூர்த்தியின் சிறந்த நடிப்பை நினைக்காமல் இருக்க முடியவில்லை. சிறிது நேரம் வந்தாலும் வானமா தேவியின் பாத்திரம் மனத்தில் பதியும் வண்ணம் இருந்தது. அதை ஏற்ற வசந்தா, பாத்திரத்தை உணர்ந்து நடித்தார்.

ஆயனச் சிற்பி ஓர் அருமையான பாத்திரம். குழந்தை உள்ளமும், கலையார்வமும் கொண்ட அந்தப் பாத்திரத்தை ஏற்ற பி: எஸ். வேங்கடாசலம் நன்றாய் நடித்தார்.

இம் மாபெரும் நவீனத்தை நாடகமாக்கிய பெருமை, புத்தனேரி ரா. சுப்பிரமணியம் அவர்களைச் சேர்ந்தது. நாடகத்துக்கான இனிமையான பாடல்களையும் அவரே இயற்றியிருக்கிறார். ஆசிரியர் கல்கி அவர்களின் வசனங்களையே அனேகமாகப் பயன்படுத்திக் கொண்டிருப்பது பாராட்டத்தக்கது.

இந் நாடகத்தில் முக்கியமான அம்சம் காட்சி அமைப்புக்கள். மிகவும் சிரத்தையோடு வி. மாதவன் பிள்ளையும், ஜி. தர்மராஜனும் அமைத்து எல்லோரையும் பழங் காலத்துக்கே அழைத்துச் சென்று விட்டதைச் சொல்லித்தானாக வேண்டும்.

ஏராளமான பாத்திரங்களும், பல்வேறு காட்சியமைப்புக்களும் கொண்ட இம் மாபெரும் நாடகம் மேற்படி ஓவியர்களின் கைத்திறமையினால் மிகச் சிறந்து விளங்கியது.

இது முதல் நாடகம். ஆகவே இனிமேல் தான் மெருகு ஏற வேண்டும். அடுத்து நடத்தப்படும் நாடகங்கள் முதல் தரமாகவே அமையும் என்று எதிர்பார்க்கிறோம்.



# வி. கிருஷ்ணசாமி அய்யர்

தேச மக்களிடையே, காங்கிரஸ் கட்சி தோன்றுவதற்கு முன்னதாகவே, சுதந்திர உணர்ச்சியை வளர்த்து வந்த சென்னைப் பெருந் தலைவர்களில் திரு வி. கிருஷ்ணசாமி அய்யரும் ஒருவர்.

இவரைத் தமிழ் மக்கள் 'அஞ்சாமையின் அவதாரம்' என்று கொண்டாடி வந்திருக்கிறார்கள். ''தருமத்தை வளர்க்கும் போதே, அதருமத்தை எதிர்த்துப் போராடி வர வேண்டும்; அப்போது தான் விரைவில் பலன் கிட்டும்'' என்ற திட்டமான கொள்கையுடன் நாட்டுப் பணியாற்றி வந்த 'வீரர்' ஆகவும் இவர் விளங்கி வந்தார்.

'காங்கிரஸின் சிம்மம்' சேலம் விஜயராகவாச்சாரியாருக்குச் சீடராகவும், கோகலேயின் அத்தியந்த நண்பராகவும், மகாகனம் சீனிவாச சாஸ்திரியாருக்கு வழிகாட்டியாகவும், வி. பி. ராமசாமி அய்யருக்கு அந்தக் காலத்தில் குருவாகவும் விளங்கியவர் திரு கிருஷ்ணசாமி அய்யர் அவர்கள்.



தமிழ் நாட்டின் சிறந்த கல்விமான்களில் ஒருவராக விளங்கி வந்த பூண்டி அரங்கநாத முதலியார் அவர்களிடம், கல்லூரி நாட்களில் 'சிறப்பு ாணவன்' என்ற புகழும் பெற்றார்.

மனைவி ஓரணுவுக்குப் பூ வாங்கியதைக் கூடக் கண்டித்த அளவுக்கு வறுமையில் வாழ்க்கையைத் தொடங்கி வழக்கறிஞர் தொழிலில் பெருஞ் செல்வம் சேர்ந்து வரும்போது நாட்டின் வறுமையில் தாமும் பங்கு கொண்டு சம்பாதித்த பொருளைப் பொது நலனுக்கு வாரி வழங்கி வந்தார்.

நீதி மன்றத்தில் திரு கிருஷ்ணசாமி அய்யர் அவர்கள் பிரபலமான வழக்கறிஞராக மட்டுமல்லாது, பிரபலமான 'கட்சிக்காரராக'வும் விளங்கியதுண்டு.

சென்னையில் 'அர்பத் நாட் பாங்கு' என்று ஒரு பெரிய பாங்கு இருந்து வந்தது. அதன் நிர்வாகத் தலைவர் அர்பத்நாட் துரை, கவர்னரை விடச் செல்வாக்குடன் திகழ்ந்து வந்தார். கவர்னர் இரண்டு குதிரைகள் பூட்டிய 'கோச்'சில் உலாவுவாரானால், அர்பத்நாட் துரை நான்கு குதிரைகள் பூட்டிய கோச்சிலேயே உலாவுவது வழக்கம். இதையெல்லாம் பார்த்துப் பொது மக்கள் மயங்கி, அவருடைய பாங்கில் தாங்கள் சேமித்த பணத்தைப் போட்டு வந்தார்கள். பெரிய வர்த்தகர்கள் முதல், தோசை பலகாரம் விற்று, ஜீவனம் செய்து வந்த ஏழை ஸ்திரீகளின் பணம் வரை, கோடிக் கணக்கில் துரையின் பாங்கில் ரூபாய் குவிந்தது. ஒருநாள் சீமையில் அர்பத்நாட் பாங்குக் காரியாலயம் 'மூழ்கி' விட்டதாகச் செய்தி வந்தது. அதைத் தொடர்ந்து இங்கும் பாங்கு 'மூழ்கி' விட்டதாக அர்பத்நாட் துரை அறிவிப்புத்தாளை பாங்கு வாசலில் ஒட்டிவிட்டார். அதன் விளைவு, எங்கும் ஒரே புலம்பல். வர்த்தகர்கள் பலர் மூர்ச்சையடைந்தார்கள். ஏழை எளியவர்கள் கதறிக் கொண்டு தெருக்களில் வீழ்ந்து புரண்டு அரற்றினார்கள்.

இதற்கிடையில் துரை, இருந்தவரையில் பணத்தைச் சுருட்டிக் கொண்டு கப்பல் ஏறிப் போய்விட முயன்றார். சென்னைப் பத்திரிகைகளில், அர்பத்நாட் துரையை வெளியேற விடாமல் தடுக்க வேண்டுமென்று வி. கிருஷ்ணசாமி அய்யர் எழுதினார். இதனால் அவர் தப்பிச் செல்ல முடியவில்லை. நீதி மன்றத்தில் துரை, தமக்காக மிகப் புகழ் பெற்ற ஆங்கில பாரிஸ்டரை நியமித்து 'இன்சால்வென்ஸி' மனுக் கொடுத்து விட்டார். சீமையில் படித்து வந்த பாரிஸ்டர்கள் தான் இந்த மனுக்களை விவாதிக்கலாம், வக்கீல்கள் இந்த வழக்குகளில் ஈடுபடக் கூடாது என்ற ஏற்றத் தாழ்வு இருந்து வந்த காலம் அது. ஆனால் கட்சிக்காரர்கள் இந்தக் கோர்ட்டுகளில் தாராளமாக வாதிக்கலாம். அதற்கு ஒரு தடையுமில்லை. திரு கிருஷ்ணசாமி அய்யர், இந்தப் பாங்கில் பணம் போடவில்லை என்றாலும், 'சுதேசி நிதி' என்று ஒரு நிதி திரட்டியிருந்தார். இரண்டாயிரம் ரூபாய் கொண்ட சிறிய தொகை தான் அது. அதை இந்தப் பாங்கில் போட்டிருந்தார். கிருஷ்ணசாமி அய்யருக்கு ஒரு யோசனை தோன்றியது. வக்கீல் என்ற முறையில் தானே கோர்ட்டில் ஆஜராகக் கூடாது? தமது மேல் கோட்டையும் தலைப்பாகையையும் கழற்றி வைத்து விட்டு, சுதேசி நிதியைப் போட்ட ஒரு கட்சிக்காரர் என்ற முறையில் கோர்ட்டில் விவாதத்தைத் தொடங்கினார். ஏழு நாட்கள் தொடர்ந்து குறுக்கு விசாரணை செய்ததும், அர்பத் நாட் துரையினால் தாக்குப் பிடிக்க முடியவில்லை. பாங்கில் மறைமுகமாக நடந்து வந்த மோசங்கள் அவர் வாயிலிருந்தே வெளியாகத் தொடங்கி விட்டன. வழக்கின் முடிவில், துரைக்கு நீதிமன்றம் சிறைத் தண்டனை விதித்தது.

இதைக் கேள்விப்பட்ட நகர மக்கள் 'கட்சிக்காரர்' திரு வி. கிருஷ்ணசாமி அய்யர் அவர்களை ஆரவாரமாகக் கொண்டாடினார்கள். ஆனால், இதை அவர் விரும்பவில்லை. தமது வீட்டில் பாங்கில் பணம் போட்டவர்கள், போடாதவர்கள் கொண்ட கூட்டம் ஒன்று கூட்டினார். ''வெள்ளையர் ஒருவரின் படாடோபத்தை நம்பி இப்படி மோசம் போகலாமா? சுதேசிப் பற்று வேண்டாமா?'' என்று கேட்டு இடித்துரைத்து விட்டு, ''நம்மவர்களே கொண்ட பாங்கு ஒன்றை நாமே ஏன் ஆரம்பிக்கக் கூடாது?'' என்று கேட்டார். வந்திருந்தவர்கள் இந்த யோசனையை வரவேற்றார்கள். சிலர் மூலதனம் போடவும் முன் வந்தார்கள். அவரையே பொறுப்பேற்று பாங்கு ஒன்றைத் தொடங்கும்படி கூறினார்கள். அன்று அவர் வீட்டில் ஜனனம் ஆனது ''இந்தியன் பாங்கு.''

வ. உ. சிதம்பரம் பிள்ளை, சுப்பிரமணிய சிவா இவர்கள் பொதுக் கூட்டத்தில் அந்நிய ஆட்சியை எதிர்த்து ராஜத் துவேஷமாகப் பேசினார்கள் என்று குற்றம் சாட்டி, திரு பிள்ளையும், சிவாவும் தனித்தனியாக இரண்டு முறை நாற்பது ஆண்டுகள் — ஆயுள் தண்டனை அநுபவிக்க வேண்டுமென்று 'பின்ஹே' என்ற ஒரு நீதிபதி திருநெல்வேலியில் தண்டனை அளித்தார். கடுமையாக அரசியல் வாதிகளைத் தண்டிப்பதில் 'பயங்கர நீதிபதி'யாக விளங்கியவர் திரு பின்ஹே துரை. இவரைச் சென்னை உயர்நீதி மன்றத்தில் நீதிபதியாக அரசாங்கம் நியமித்தது. இந்நியமனத்தைத் துணிவோடு எதிர்த்த வழக்கறிஞர் திரு வி. கிருஷ்ணசாமி அய்யர், ''மக்களின் வெறுப்புக்கு இலக்கான ஒருவரை உயர்நீதி மன்றத்தில் அமர்த்துவது, நீதியையே குலைத்து விடும்'' என்று சீமைக்குக் கடிதம் எழுதினார். இந்தக் கடிதத்தைப் பார்த்ததும் இந்தியா மந்திரி நடுக்கமுற்றிருக்க வேண்டும். பின்ஹே துரை மூன்று மாதத்துக்குள் உயர்நீதி மன்றத்திலிருந்து ஓசைப்படாமல் வெளியேறி விட்டார்! காங்கிரஸ் மகா சபையை முதன் முதலில் உருவாக்கிய தலைவர்களில் திரு வி. கி. யும் ஒருவர்.

அய்யரவர்கள் தமிழிலும், சம்ஸ்கிருதத்திலும் பாண்டித்தியமுள்ளவர். சென்னையிலுள்ள சம்ஸ்கிருதக் கல்லூரியைப் பெருந் தொகை அளித்து ஆரம்பித்து வைத்தார். மயிலையில் தமது அத்தையின் பெயரால் வெங்கடரமணா ஆயுர்வேத வைத்திய சாலையையும் ஆயுர்வேதக் கல்லூரியையும் தோற்றுவித்தார். ''இந்திய மக்கள் பண்பில்லாதவர்கள்'' என்று பகிரங்கமாக இழித்துரைத்த ராஜப் பிரதிநிதி கர்ஸன் பிரபுவுக்குத் தக்க பதிலளிக்கும் முறையில், அய்யர் அவர்கள் வெளியிட்ட நூல் பிரபலமாகும். சென்னை சட்ட சஞ்சிகையை ஆரம்பித்து வைத்தவர்களில் திரு அய்யர் முக்கியமானவர்.

திரு கிருஷ்ணசாமி அய்யர் அவர்கள் பிறந்து நூறு வருடங்களாகின்றன. கவி தாகூர் பிறந்த 1863-ம் ஆண்டு ஜூன் 14-ந் தேதி திருவிடைமருதூரில் திரு வி. கி. அவர்கள் பிறந்தார்கள். அய்யர் அவர்கள் தமது 47-வது வயதில் 1911 டிஸம்பரில் நோய் வாய்ப்பட்டு மறைவு பெறலானார். சென்னை சர்வகலாசாலை முன் நிறுவப்பட்டிருக்கும் அய்யர் அவர்களின் உருவச் சிலை அவரது பெருமையைப் பறைசாற்றிக் கொண்டிருக்கிறது.

— கதிர்




மேற்கொண்டு தொடர விருப்பமில்லாமல் திட்டமிட்டதைக் காட்டிலும் துரிதமாகவே ஊருக்குத் தான் திரும்பி விட்டதையும் தாராவுக்கு ஞாபகப் படுத்திவிட்டுத் தொடர்ந்தான் வடிவேலு. தன் வாழ்க்கை நூலின் பழைய ஏடு ஒன்றைப் புரட்டிப் படித்தான்.

மாயவரத்தில் ரயிலை விட்டு இறங்கி ஸ்டேஷனுக்கு வெளியே போக அவன் படியேறத் தொடங்கினன். பாதி தூரம் சென்றிருப்பான். அந்தத் தருணத்தில் எதிரே திபுதிபுவென்று இறங்கி வந்து கொண்டிருந்தார் சிங்காரம். அவனைக் கவனித்ததாகவே காண்பித்துக் கொள்ளாது அவனைக் கடந்து நேராகச் சென்ற வண்ணம் இருந்த அவருக்கு, ''அத்தான்!'' என்று கூவி அழைத்ததன் மூலம் தான் கிராமப்புறத்தை நோக்கித் திரும்பி வந்து விட்டதை அறிவித்தான் வடிவேலு.

## அத்தியாயம் 13

## கலகக்கார சீமாச்சு

**யா**ருக்கும் திறந்து காட்டாமல் தன் இதயத்துக்குள்ளேயே பூட்டி வைத்துவிட வேண்டிய விஷயம் என்று வடிவேலு எதைக் கருதியிருந்தானே அதையே இன்று தாராவிடம் உடைத்துச் சொல்லிக் கொண்டிருந்தான். 'ஊரிலேயாகட்டும்; வீட்டிலேயாகட்டும் யார் தன்னைப் பற்றி என்ன நினைத்தாலும் சரி, என்ன பேசினுலும் சரி, அதையெல்லாம் சகித்துக் கொண்டுதான் இருப்பேனே ஒழிய, தங்கை பாருவின் மனத்துக்குத் துன்பம் அளிக்கக் கூடிய அந்தச் சம்பவத்தை வெளியிடவே மாட்டேன்' என்ற வடிவேலுவின் வைராக்கியம் இன்றைக்குத் தவிடுபொடியாகி விட்டது. தாராவைப் பொறுத்தமட்டில் ஏனே அவனல் அவ்வளவு அசிரத்தையாக இருந்துவிட முடியவில்லை. அவன் யோக்கியதாம்சங்களைப் பற்றித் தவருக மதிப்புப் போட்டு விடக்கூடாதே அவள் என்பதில்அளவற்ற அக்கறை காட்டினன். வடக்கே போய்ப் பம்பாயில் தாராவையும் உமாகாந்தையும் யதேச்சையாகச் சந்தித்ததையும் அப்போது நடைபெற்ற ஒரு நிகழ்ச்சி காரணமாகச் சுற்றுப் பிரயாணத்தை

அதைக் கொஞ்சமும் சட்டை செய்யாமல் கடைசிப் படியையும் தாண்டிப் பிளாட்பாரத்தில் அடியெடுத்து வைத்த பிறகுதான் நின்ருர் சிங்காரம். தோளிலிருந்து நழுவிய சரிகை அங்கவஸ்திரத்தைச் சரிசெய்தபடியே அருகில் நெருங்க நேரமில்லாதவர் போல் கழுத்தை மட்டும் ஒடித்துப் பின்புறம் பார்த்தார். ''தம்பி! நாலு நாள் கழிச்சுச் சந்திக்கப் பேசலாமே? அவசர ஜோலி; வரட்டுமா?'' என்ருர். கூடவே, பெட்டி படுக்கைகளைத் தலையில் சுமந்தபடி தம் பக்கத்தில் நின்ற வண்டிக்காரனை, ''போயேண்டா, தடிமாடு! செகண்டு கிளாஸ் பெட்டி ஒண்ணைத் தேடிப்புடிச்சுச் சாமான்களை யெல்லாம் ஏத்து!'' என்று விரட்டினர். தாமும் அவன் பின்னேடேயே விரைந்தார்.

தான் வந்து இறங்கிய அதே ரயிலில் அவர் ஏறிக் கொள்வதை எட்ட நின்ற

போதிலும் வடிவேலுவினால் காணமுடிந்தது. அவரை நெருங்கிப் பேசிக் கொண்டிருந்து விட்டு ரயில் கிளம்பிய பிறகு ஊருக்குப் புறப்படலாமா, அல்லது இப்படியே போய் விடலாமா என்று சில விநாடிகள் யோசித்தான் வடிவேலு. அத்தான் நடந்து கொண்ட விதம் தன்னுடன் அவர் தற்சமயம் பேசிக் கொண்டிருக்க விரும்பவில்லை என்பதைச் சுட்டிக் காட்டுவதாய்த் தோன்றியது.

இதற்குள், ''அடேடே! வடிவேலு தம்பியா? எப்ப வந்தாப் போல?'' என்ற குரல் கேட்டு அவன் திரும்பிப் பார்த்தான். சிமாச்சு நிதானமாக இறங்கி வந்து கொண்டிருந்தார் படிகளில்.

''இப்பத்தான் வந்து கொண்டேயிருக்கிறேன். அது சரி, அத்தான் எங்கே திடீரென்று பயணப்பட்டிருக்கிறார்?'' என்று கேட்டான் வடிவேலு.

''ரெண்டு பேருமா சேர்ந்துதான் போகிறோம் தம்பி கும்பகோணத்துக்கு! 'ரயில் கிளம்பப் பத்து நிமிஷம் இருக்கு, ஐயா! பாதகமில்'லென்னு சொன்னால் கேட்கிறானா? பறக்கிறான் மனுஷன். படிச்சுப் படிச்சுச் சொன்னாலும் புண்ணியமில்லே. பொறுக்கவே முடியலே அவனுக்கு. புதுசு பாரு! போகப் போக எல்லாம் சரியாகி விடும்!'' என்று கூறிவிட்டு ஒரு மாதிரியாகச் சிரித்தார் சிமாச்சு.

சிமாச்சு தன்னைச் சீண்டி விட்டு வேடிக்கை பார்க்கிறார் என்று வடிவேலுவுக்கு நிதர்சனமாகத் தெரிந்தது. இருந்தும் கூட, ''நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? ஒன்றும் புரியவில்லையே!'' என்றான் அவன்.

''ஓஹோ ஹோ!'' என்று புருவங்களை உயர்த்தினார் அந்த மனிதர். ''அவசியம் உனக்கு விஷயம் பூராவும் அறிஞ்சுண்டு ஆகணுமோ? அப்படியானால் என்னைத் தொண தொணப்பதற்குப் பதிலாக உன் அத்தானை நிறுத்திக் கேட்கிறது தானே?'' என்று சொன்னார்.

''அவர்தான் பம்பாய் மெயிலாட்டமா ஓடுறாரே!''

''பேஷ்! மச்சானிடம் மாட்டிக்க வேண்டாம்னு சிங்காரம் சீக்கிரமாக ஓடி விட்டானா? ஆனாலும் இப்படி ஒரு பயந்தாங்கொள்ளியாக இருக்க வேண்டாம்ப்பா. நீ என்ன அவன் தலையைச் சீவி விடவா போறே?''

இப்படிக் கேட்ட சிமாச்சு வடிவேலுவின் கையைப் பிடித்துக் 'கரகர'வென்று இழுத்துக் கொண்டு போனார். ''கேளு, கேளு! நீயே என்ன சமாசாரம் என்கிறதைச் சிங்காரத்திடம் விசாரித்துத் தெரிஞ்சுக்கோ!''

ஜன்னல் வழியே எட்டிப் பார்த்து அவர்கள் இருவரும் வருவதைக் கண்ட சிங்காரம் தாமும் கீழே இறங்கினார்.

''சிமாச்சு! தம்பியை எதுக்குத் தொந்தரவு பண்ணறே அனாவசியமாக? ஊர் ஊராகச் சுற்றி விட்டுக் களைச்சுப் போய் வந்திருக்கான் பாவம்! நேராக வீட்டுக்கு அனுப்பி வைப்பியா....''

''உன் மச்சானுக்கு என்னவோ ஏதோன்னு சந்தேகம் விழுந்துடுத்து. அதனால்தான் அழைச்சுண்டு வந்தேன். நீயே பதில் சொல்லிட்டாத்தான் நல்லது. அப்புறம் நான் ஒண்ணு கிடக்க ஒண்ணு உளறி வைக்க உன்னைத் திண்டாட்டத்திலே சிக்க வைத்து விடக் கூடாது பார்!''

''என்ன சந்தேகம்?'' என்று கேட்டார் சிங்காரம் எரிச்சலுடன்.



''அத்தான் இவர் ஒண்ணைப் பத்தாகப் பெரிசு படுத்தறார். இவர் சொல்வதைக் கேட்டுக்கிட்டுப் பிறகு என்னண்டை கோபப்படாதீங்க.''

''கிடக்கிறான், விட்டுத் தள்ளு தம்பி! விஷமத்தனமாகப் பேசறதே அவனுக்கு வேலை. நீ எதையும் கண்டு கொள்ளாதே!''

''ஆமாம் ஓய்! நான் விஷமத்தனமாகப் பேச மட்டும் செய்யறேன்; நீ விஷமத்தனமாக நடந்து கொள்ளவே செய்யறே!''

''சீமாச்சு! கிண்டல் போதும். தம்பி தப்பா எடுத்துக்கிடப் போவுது. இதோ பாரு தம்பி! கும்பகோணத்திலே சாரங்கதரா நாடகம் நடக்குதாம். ரொம்ப ஜோரா யிருக்குதுன்னு சொல்லி இந்தச் சீமாச்சுதான் என் ஆசையைக் கிளறி விட்டுட்டான். எல்லாம் இவன் ஏற்பாடுதான்.''

''ஆமாம், ஆமாம்!'' என்று தலையை ஆட்டினார் சீமாச்சு. வெற்றிலைப் பெட்டியைத் திறந்து கொட்டைப் பாக்கு ஒன்றை எடுத்து மெல்லிய சருகு போல் அதைச் சீவியவாறே சுவாரசியமாகப் பேசினார். ''தம்பி! நாடகம் பலே பல் பாட்டா இருக்கு. மூந்தா நாள்தான் முதல் வரிசையிலே உட்கார்ந்து பார்த்தேன். இன்னைக்கு மறுபடியும் கிளம்பிட்டேன்! அதிலே பாரு. நம்ப சக்கு பாய் மேடையிலே வந்து நின்னு, கண்களை ஒரு சுழற்று சுழற்றி எதிரே இருக்கறவங்களைச் சுற்றி நோட்டம் விட்டாளானால் அப்படியே அஜிமாஷ் பண்ணிப் போடுவாள் என்று உன் அத்தானிடம் சொன்னேன். அவ்வளவுதான்! அப்போதிலிருந்து பார்க்கணும்னு துடியாத் துடிச்சுக்கிட்டு இருக்கான் சிங்காரம்!''

''எதை? நாடகத்தையா? சக்கு பாயையா?'' இப்படி ஒரு கேள்வியைப் போட்டு விட்டுப் பிறகு நாக்கைக் கடித்துக் கொண்டான் வடிவேலு. மனத்திலிருந்த எண்ணம்தான் என்றாலும் அவனே எதிர்பாராத விதத்தில் வார்த்தைகளாக உருவெடுத்து விட்டது அது. சிங்காரத்தின் முகம் விகாரமாகிக் கறுப்பதைக் கவனித்தான் வடிவேலு. சிரித்து விட்டுப் போகாமல் எதற்கு இவர் சிடுசிடுக்கிறார் என்று வருத்தப் பட்டான்.

சீமாச்சுவின் சேஷ்டைப் புத்திக்கோ அந்தக் கேள்வி சர்க்கரையாக இனித்தது. ''ஓஹோ ஹோ ஹோ!'' என்று பலமாகத் தமது ஆச்சரியத்தை வெளிப்படுத்தினார் அவர். ''போடு சக்கைன்னும்! சிங்காரம்! கேட்டியா மச்சான் உன் மண்டையை உருட்டுவதை?''

''நான் ஏதோ வேடிக்கையாகச் சொன்னேன். அத்தான்!'' என்று மழுப்பினான் வடிவேலு.

''வேடிக்கைதான்! வேடிக்கைதான்!'' என்று ஆமோதித்து அவன் முதுகில் தட்டினார் சீமாச்சு. வெற்றிலைகளை ஒவ்வொன்றாகக் காம்பு கிள்ளி, நரம்பு நீக்கிச் சுருட்டி வாயில் திணித்துக் கொண்டே தொடர்ந்து கூறினார்: ''கேளு, தம்பி! ரொம்பத் தமாஷா இருக்கும் இந்தக் கட்டம். சாரங்கதரன் மேடையிலே வரானா? புறாவைப் பறக்க விட்டுடறான். அது இளைய ராணிகிட்டே போய்ச் சிக்கிக் கொள்றது. யார்கிட்டே?''

''இளைய ராணி கிட்டே.'

''அதாவது சாரங்கதரனுடைய மாற்றாந்தாய் கிட்டே. என்ன புரியுதா? அப்புறம் இரண்டு பேரும் சந்திக்கிறாங்க. அப்போ சாரங்கதரன்..... யாரு?''

''சாரங்கதரன்.''

''அதுதான் தம்பி! நம்ப மன்னார்குடி மாணிக்கம்!.....அவன் என்ன சொல்றான்? 'நீ புறாவை மட்டும் திருடிக்கலை! என் மனசையும் கவர்ந்துக்கிட்டே நீ, கள்ளி!' அப்படீன்னு ஜமாய்த்துத் தள்ளிடறான்!

''அப்போ சக்குபாய் இடுப்பிலே இரண்டு கையையும் வைச்சுகிண்டு அவன் கிட்டக்கே வந்து நின்னு இப்படி முழங்கையாலே ஒரு நெம்பு நெம்பி...எப்படி? ....இப்படி ஒரு நெம்பு நெம்பி...''

''சீமாச்சு! ஸ்டேஷன் பிளாட்பாரத்தையே நாடக மேடையாக்கி விடாதே அப்பா! இன்னும் கொஞ்ச நேரமானால் தொண்டையைக் கனைச்சுண்டு, 'ஆர்மோனியப் பெட்டிக்காரனைக் கூட்டிக்கிட்டு வா, ஒரு பாட்டுப் பாடணும்னு தோணுது' என்பாய் போலிருக்கே!''

''குறையையும் கேளும் ஓய்! சக்குபாயுடைய 'டயலாக்' அங்கே எவ்வளவு அழுத்தமா விழுது கவனியும்! 'என்ன பேச்சு ஒருமாதிரியா இருக்குது இன்னைக்குக் குமார ராஜாவுக்கு? வார்த்தைகளெல்லாம் ஒண்ணுக்கு ஒண்ணு சம்பந்தமில்லாமல் ஏதேதோ குளறுதே' அப்படீன்னு பிறியைக் கட்டி இழுத்துப் பிட்டான்னேன்! மன்னார்குடி மாணிக்கம் தீர்த்தத்துலே ஊறினவன் என்பது எல்லாருக்கும் தெரிஞ்சதுதானே? சபையிலே கொல்லுன்னு சிரிப்பு! அவன்தான் சும்மா விட்டான் என்கிறயா? 'ராணியம்மா எந்த வழியா இந்த அரண்மனைக்குள்ளே நுழைஞ்சா என்கிறதை ஞாபகப்படுத்தணுமோ' என்று கேட்டுப் பிச்சு வாங்கிட்டான்! கொட்டகை இடிஞ்சு விழறமாதிரி அப்போ ஒரே சீட்டி.

# 'ஸேப்டி டிரைவ்' கொண்டு அபாயமின்றி ஓட்டுங்கள்




சியெட் டயர்களின் பிரத்தியேகமான மெத்தை போல் இயங்கும் தன்மை மோட்டார் ஓட்டுவதை அதிக சுகமாகவும் அபாயமின்றியும் செய்கிறது.



"சைப்ஸ்"—டிரெட்டில் காணப்படும் சிறிய வட்டமான குமிழ்கள்—மிக நன்றாக ரோட்டைப் பிடித்துக் கொள்வதால் அதிகப்படியான பாதுகாப்பை அளிக்கின்றன. இந்தப் "பாதுகாப்பு வளையங்கள்" சியெட்டின் தனிப்பட்ட ஆழ்ந்த டிரெட் அமைப்புடன் இணைந்து பரிபூரணமாய் ஓட்டுவதற்கான தன்னம்பிக்கையைத் தருகின்றன.

# ◂ சியெட் டயர்ஸ் ▸

## ஆப் இந்தியா லிட்.

அடிக்கிறதும் கைதட்டலும்....அடடா! அது அடங்கவே அரை மணி பிடிச்சுது!''

''அத்தான்! நாலு நாள் ஆகும் என்று சொன்னீங்களே? நாலு நாளா நாடகம் பார்க்கப் போறீங்க?''சீமாச்சு வளவளவென்று வம்பு வளர்ப்பதை நிறுத்த வடிவேலு ஏதோ கேட்டுவைத்தான். அதுவும் ஆபத்தாகவே முடிந்தது.

''ஓய் சிங்காரம்! உன் மச்சான் உளவறியப் பார்க்கிறான் ஓய்!'' என்று கூறிவிட்டு இடி இடியென்று சிரித்தார் சீமாச்சு. பின்னர்,''தம்பி! நாடகத்துக்கு ஒரு நாள் போனாலே போதும். ஆனால் வேறே பல முக்கியமான காரியங்களும் இருக்கின்றன உன் அத்தானுக்கு! என்ன சிங்காரம்! நான் சொல்றது சரிதானே?''

''ஏன் அத்தான், நானும் நாடகம் பார்க்க வருகிறேனே?'' என்றான் வடிவேலு. திடீரென்று அவனுக்கு மனத்தை உறுத்த ஆரம்பித்திருந்தது.





''வெளுடா ராஜா, வெளுன்னுனும்! என்ன சிங்காரம்? மச்சானை மடியிலே கட்டிக் கிட்டுத்தான் புறப் படப் போகிறாயா கும்ப கோணத்துக்கு?'' பெரிதாகச் சிரித்தார் சீமாச்சு.

''கலகம் பண்ணறதே உனக்கு வேலை!'' என்று கடு கடுத்தார் சிங்காரம். ''சிறு பயலுகளுக்கெல்லாம் நாடகம் என்ன கேடு? நீ ஏறு வண்டியிலே சொல்றேன். மணி அடிச்சுட்டான்!''

ரயில் நகரத் தொடங்கியது. ஏதோ ஒரு வேகம் உந்தித் தள்ளத் தாற்காலிகமாகத் தரையில் இறக்கி வைத்திருந்த பெட்டி படுக்கைகளைக் கடைசி ரயில் பெட்டியில் தூக்கிப் போட்டான் வடிவேலு. ஓடிக் கொண்டிருந்த ரயிலில் ஒரே தாவலாகத் தாவித் தானும் ஏறி விட்டான். தட்டுத் தடுமாறிச் சமாளித்து வண்டியினுள் நுழைந்தான்.

அத்தியாயம் 14

# வேண்டாத விருந்தாளி

அத்தான் சிங்காரத்துக்குத் தன் செய்கை கொஞ்சமும் பிடிக்காது என்பது வடிவேலுவுக்கு நன்கு தெரியும். ஆனால் அவரைக் கண்காணிக்க வேண் டும் என்ற ஒருவித கவலை கலந்த அரிப்பு உருவாகி விட்டது அவன் உள்ளத்தில். ரயிலடியில் நடைபெற்ற சம்பாஷணை அவனைக் குழப்பத்தில் ஆழ்த்தியிருந்தது. சீமாச்சு குழந்தையைக் கிள்ளி விட்டுத் தொட்டிலையும் ஆட்டுகிறாரா? அல்லது தொட்டிலை ஆட்டித் தாலாட்டாகச் சக்குபாயின் புகழையும் பாடி அத்தா னுக்கு உறக்கத்தை உண்டு பண்ணி விட்டுப் பிறகு நன்றாக வலிக்கும்படியாக அழுத்திக் கிள்ள நினைக்கிறாரா என்பதை அவனால் நிதர்சனமாகத் தெளிவு படுத் திக் கொள்ள முடியவில்லை. அத்தானை ஆபத்து சூழ்கிறதோ என்று சந்தேகித்த அவன், அவரை மதி மயக்கத்திலிருந்து விடுவிக்க வேண்டியது தன் கடமை என்ற தீர்மானத்துக்கு வந்தான். அடுத்த ஸ்டேஷனில் டி. டி. ஆரிடம் சொல்லிக் கும்பகோணம் வரை டிக் கெட் வாங்கிக் கொண்டால் போயிற்று என்கிற கருத்தில் ரயிலேறி விட்டான்.

சிங்காரமும் சீமாச்சுவும் போகப் போகிற சாரங்கதரா நாடகத்துக்குத் தானும் விஜயம் செய்ய வேண்டியது என்ற முடிவுக்கு வந்தான் வடிவேலு. தூரவே உட்கார்ந்துகொண்டு அத்தான் மீது ஒரு கண் வைத்திருக்க வேண்டும். தான் எண்ணுவது போல் ஒன்றும் நடக்கா விட்டால் நிம்மதியாக ஊர் திரும்பி விடலாம். அத்தானைப் பின் தொடர்ந்து தான் கும்பகோணம் வந் ததே அவருக்குத் தெரிய வேண்டிய அவசியமில்லை. அப்படியின்றி இந்தச் சீமாச்சுவின் தூண்டுதலின் பேரில் சிக்கலில் அகப்பட்டுக் கொண்டு பாபப் படுகுழியில் விழுந்து விடுவார் என்று பட்டால் நிலைமை விபரீதமாவதற்கு முன் அவருக்குக் கைலாகு கொடுத்துக் காப்பாற்றி மீட்டு வரலாம். அத்தான் அப்படி ஒன்றும்அசட்டுத்தனமாகநடந்து கொண்டுவிட மாட்டார்தான். அவருக் குச் சமீபமாகவே இருப்பதினால் பிரமாத மான நஷ்டமும் ஒன்றுமில்லையே?

சீமாச்சு 'ஆஹா ஓஹோ' என்றெல் லாம்' வர்ணித்தது போல் நாடகம் அப்படியொன்றும் உயர்வாக இல்லை. நாலு 'காஸ்' லைட்டுகளை ஏற்றி வைத்திருந்தார்கள் வெளிச்சத்துக்கு. படுதாவைத் தூக்கியதுமே பிரமாதப் படுத்தி விடுவதாக நினைத்துக் கொண்டு ஒரு ராகத்தை ஆலாபனை செய்தபடியே மேடையின் மையத்துக்கு வந்து சேர்ந் தான் மன்னார்குடி மாணிக்கம், சாரங்க தரன் வேஷத்தில். பிறகு முன்னால் நகர்ந்து ஆர்மோனியம் வாசிப்பவனை நெருங்கிப் பாட்டுப் பாட ஆரம்பித் தான். எந்த வினாடியில் கழுத்து சுளுக் கிக் கொள்ளுமோ என்று கவலைப்படக் கூடிய அளவுக்குப் பலமாகத் தலையைச் சொடுக்கியும் கைகளிரண்டையும் சேர்த் துத் தட்டிக் கொடுத்து வாங்கித் தாளம் போட்டும் ஆர்மோனியம் வாசிப்பவ னுடன் சுவர ஞான யுத்தம் நடத்தினான். பத்து நிமிஷங்களுக்கு இந்தப் போராட் டம் நீடித்தது. அதன் பிறகு நடிகர்கள் ஒவ்வொருவராகத் தங்களைத் தாங்களே சபையினருக்கு அறிமுகப் படுத்திக் கொண்டு போய்ச் சேர்ந்தார்கள். அவர்களுள் கடைசியாக வந்த சக்கு பாய் ஒரே ஒரு அம்சத்தைப்பற்றி மட்டி லும் சீமாச்சு மிகைப்படுத்திக் கூறிவிட வில்லை என்பதை நிரூபித்தாள். அந்த ஓர் அம்சம் சக்குபாய் அளித்த தோற் றம். எடுப்பான மேனியும் மிடுக்கான பார்வையும் பெற்றிருந்த அவன் தான் நடிப்பதாகச் சொல்லிக் கொள்வதே நகைப்புக்கிடமான விஷயம் தான் என்ற போதிலும் மேடை மீது அலங்காரமாக அவள் வந்து நின்றதுமே பார்ப்பவர்கள் மூச்சு விடவும் மறந்து ஸ்தம்பித்துப் போவதை வடிவேலு கண்டான்.

பெண்மையின் இலட்சணங்களுக்கு இலக்கணம் வகுத்து அதன்படி பார்த் தால் அவளை அழகி என்று அளவிட்டுச் சொல்லி விட முடியாது. ஒடிந்து விழு கிற இடையுடனும் ஒயிலான நடையுட னும் மருண்டு நோக்கும் விழிகளுடனும் நாணத்தில் தாழ்கின்ற வதனத்துடனும் அடக்கமாக விளங்குபவளல்ல அவள். தன் கவர்ச்சிக்குக் கட்டுப்படாமலும் இருக்க முடியுமா என்று கேட்காமல் கேட்கும் சக்தி பெற்றுள்ள எழிற் கோலத்தைக் கொண்டவள். தடித்த உதடுகளும் அவற்றைத் தடவிச் செல் கின்ற நாவும் விரிந்த கண்களும் அத னுள் வலம் வருகின்ற விழிகளும் அள வுக்குச் சற்று அதிகமாகவே வளர்ச்சி யுற்றுத் திரண்டு திமிறிக் கொண்டிருக் கும் அவளது இதர அங்கங்களும் இதைத் தான் உணர்த்தின. கண்களுக்குப் புலப் படாத ஏதோ ஒரு ஜ்வாலை அவளிட

# தலைவலிகளி லிருந்து பூரண வாரணம் பெறுங்கள்

உலகம் முழுவதிலும் லக்ஷக்கணக்கானவர்களுக்கு குடும்ப மருந்தான 'ஆஸ்ப்ரோ', உங்கள் உடலின் நோவுறும் இடங்களில் நேரிடையாக வேலை செய்கிறது. 'ஆஸ்ப்ரோ' தலைவலிகளிலிருந்து பூரண நிவாரணம் அளிக்கிறது. 'ஆஸ்ப்ரோ' மேலும் பல்வலி, முதுகுவலி, மாதவிடாய் நோவுகள், மூட்டுக்களிலும் கைகால்களிலும் ஏற்படும் பிடிப்பு, நரம்பு நோய், மற்றும் இதர வலிகளையும் நோவு களையுங்கூடப் போக்குகிறது.

குடும்பம் முழுவதற்கும் உபயோகிக்க 'ஆஸ்ப்ரோ' கைவசம் வைத்திருங்கள்.

# 'ஆஸ்ப்ரோ'



## குடும்பம் முழுவதற்கும் ஏற்றது

## "ஆஸ்ப்ரோ" வேலை செய்யும் விதம்



**பொடியாகப் பிரிகிறது:** 'ஆஸ்ப்ரோ' உடனேயே பொடி யாகப் பிரியத் தொடங்குகிறது. 'ஆஸ்ப்ரோ' சில விநாடிகளிலே யே வேலை செய்ய ஆரம்பிக்கிறது.



**பரவுகிறது:** லக்ஷக்கணக்கான அதன் நுண் ணிய அணுக்கள் விரைவில் ரத்த ஓட்டத்தின் மூலமாய் உங் கள் உடலின் நோவுறும் இடங் களை அடைகின்றன. உடனே யே நிவாரணம் துவங்குகிறது.



**நிவாரணமளிக்கிறது:** பூரண நிவாரணமளிக்கிறது. 'ஆஸ்ப்ரோ' உங்கள் உடல் வலிகளை நீக்கி, உங்களை ஆரோக் கியமாகவும் ஆனந்தமாகவும் இருக்கச் செய்கிறது.




இளஞ்சிவப்பும் தாமிரமும் கொண்ட சீல் செய்யப்பட்ட பட் டையைக் கேட்டு வாங்குங்கள்

## 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள் மீண்டும் நிச்சயமாக சுகம் பெறுங்கள்

ஒரு நிக்கொலஸ் N தயாரிப்பு

*தரத்திற்கும் தூய்மைக்கும் சீல்கள் பெறும் உத்தரவாதம்'*

S .TAH.

# ஏழு வைட்டமின்கள்

## சேர்ந்தது, ஏற்றமிகு அமுல் பாலுணவு




புரதச்சத்து நிறைந்த அமுல் பாலுணவு வைட்டமின் ஏ, பி1, பி2, பி6, சி, டி ஆகிய சத்துக்களும், நியசினமைடும் கொண்டது. இந்த வைட்டமின் சத்துக்கள் சீரிய, ஆரோக்கியமிக்க வளர்ச்சிக்கு உதவுவதோடு உங்கள் மழலைச் செல்வத்தை நோயிலேயிருந்து காத்திடுகின்றன.



தயாரிப்பாளர்கள்:
கெய்ரா டிஸ்ட்ரிக்ட் கோவாப்பரேடிவ் மில்க் ப்ரொட்யூசர்ஸ் யூனியன் லிட்.
அகில இந்திய விநியோகஸ்தர்கள்: VOLTAS வோல்டாஸ் லிமிடெட்.

ASP/ABF-24 TAM.

மிருந்து பரவிக் கூடியிருந்த அனைவரையும் சூழ்ந்து தகிப்பதாக ஒரு இக்பிரமை உண்டாயிற்று வடிவேலுவுக்கு.

இடைவேளையின்போது இந்தக் கிறக்கத்திலிருந்து தன்னைத் தானே உலுக்கி எழுப்பிக் கொண்டான் அவன். இரண்டு ரூபாய் டிக்கெட் எடுத்திருந்தவன் மூன்று வரிசைகளுக்கு அப்பால், மற்ற எல்லாருக்கும் முன்னதாகவும் நடுநாயகமாகவும் அமர்ந்திருந்த சீமாச்சுவையும் சிங்காரத்தையும் எட்டிப் பார்த்தான்.

திரையைத் தொங்க விட்ட பிறகும் கூட அதைப் பொருட்படுத்தாமல் சிலையாகி விட்டிருந்தார் சிங்காரம். படுதாவில் வரையப் பட்டிருந்த ஓவியப்பூங்காவில் மலர் கொய்தபடி சக்குபாய் நின்று தன்னைப் பார்த்து முறுவலிப்பதாய் அவர் மனக் கண்களுக்குத் தென்படுகிறதா? மலரைத் துவைத்துத் துளைத்து மதுவில் திளைத்து அதன் இனிமையைச் சுவைத்துத் திகைத்துச் சிந்தனையைச் சிதைத்துக் கொண்டு விட்ட வண்டின் நிலையிலா இருக்கிறார் அவர்?

அவருடைய இன்றைய ஆடம்பரத் தோற்றத்தைப் பார்த்த போது வடிவேலுவின் புருவங்கள் ஆச்சரியத்தினால் உயர்ந்தன. அங்கவஸ்திரத்தின் ஜரிகை வேலைப் பாட்டிலே ஒரு முனையிலிருந்து மற்றொரு கோடி வரையில் 'சிங்காரம், சிங்காரம்' என்ற வார்த்தைகளே தகதகத்துக் கொண்டிருந்தன. வைரக் கடுக்கன்களும் விரல்களிலே எண்ணி எட்டு மோதிரங்களும் ஜவ்வாதுப்பொட்டும் சென்டு மணமும் 'சில்க்' சட்டையுமாக அமர்க்களப் படுத்திக் கொண்டிருந்தார் அவர்.

தான் எச்சரிக்கையாக இருக்க வேண்டியது மிக மிக அவசியம்தான் என்று நிச்சயித்துக் கொண்ட வடிவேலுவுக்கு நாடகத்தில் கொஞ்ச நஞ்சம் பாக்கியிருந்த சிரத்தையும் அடியோடு போய் விட்டது.

ஒரு வழியாக நாடகமும் முடிந்து கூட்டத்தோடு கூட்டமாக அடித்துப் பிடித்துக் கொண்டு கொட்டகைக்கு வெளியே வந்து சேர்ந்தான். மேடைக்குப் பக்கத்தில் அமைந்திருந்த சிறிய கதவு வழியாகச் சீமாச்சுவும் சிங்காரமும் உள்ளே நுழைவதைக் கண்டு விட்டன அவன் கண்கள். அரங்கிலேறித் தங்கள் பாராட்டுதல்களை நேரில் தெரிவித்து விட்டு வரத்தான் அவர்கள் செல்கிறார்கள் என்பதை ஊகித்தான். மீண்டும் அவர்கள் வெளிப்படும் வரையில் அங்கேயே தவமிருக்க முடிவு செய்தான். பத்துப் பதினைந்து நிமிஷங்கள் கழிந்திருக்கும். கதவு திறந்தது.

''சிங்காரம்! சக்கு ஒரு கிராமபோன் பிளேட் கொடுத்திருக்கே கேட்டியோ நீ?'' என்று வினவியவாறே முதலில் பிரசன்னமானார் சீமாச்சு. அவருக்குப் பின்னால் சிங்காரமும் சக்குபாயும் இன்னொருவனும் வந்தார்கள்.

நிழலில், இருளில் பதுங்கிக் கொண்டான் வடிவேலு.

''பிளேட் எதுக்கு? இன்னைக்குத்தான் நேரிலேயே கேட்டேனே தேவகானம்னு தேவகானம்தான்!''

''பாட்டை விட்டுத் தள்ளு, ஒய்! எல்லாரும்தான் பாடறா! அந்தப்பிளேட்டிலே கடைசீ கடைசியா நம்ப சக்கு, இங்கிலீஷிலே... எதிலே? இங்கிலீஷிலேன்னேன்!.... ஒரே ஒரு வரி சொல்றா; 'மை நேம் இஸ் சக்கு பாய்!' அப்படீன்னு. ஐயோ! ஐயோ! எவளாவது வெள்ளைக்காரிச்சி கேட்டாக் கூட வெட்கப்பட்டுக்கிட்டு ஓடியே போயிடுவாள்!''

''சீமாச்சு! சத்தியமா சொல்றேன். பகவான் மண்ணைப் புடிச்சுத்தான் மனுஷங்களைப் படைக்கிறார் என்கிறாங்க; ஆனால் சக்குவோட தொண்டையை மட்டும் வெல்லப் பாகினால்தான் உருட்டி வைச்சிருக்கணும் அவர்!''

சிங்காரம் இப்படிச் சக்குபாயைச் சிலாகித்ததும், ''உங்களைப் போன்றவங்க கிட்டேயிருந்து பாராட்டுதலைப் பெறக் கொடுத்து வைச்சிருக்கணுமே எனக்கு'' என்றாள் சக்குபாய்.

''பத்துப் பதினைஞ்சு நிமிஷத்திலே, சொல்லிட்டுப் போற சமாசாரம் இல்லே, சக்கு! சாவகாசமாக ஆறஅமர இருந்து பேசணும் என்கிறதுதான் என் அபிப்பிராயம். என்ன, ஜமால் பாய்! நான் சொல்றது சரிதானே?''

ஜமால் என்று அழைக்கப்பட்ட அந்த நான்காவது நபர் முதன் முறையாக வாயைத் திறந்தான். ''ஆஹா! அதுக்கென்ன? மறுபடியும் எங்களைச் சந்திக்காமலா ஊருக்குத் திரும்பிடப் போறீங்க? வீட்டுப் பக்கமா வாங்களேன். நாளைக்கு ஸ்பெஷல் நாடகம் கூடக் கிடையாது. ஒரே 'ஷோ'தான். பத்து மணியோட எல்லாம் முடிஞ்சுடப் போவுது. அதற்கு அப்புறமா இவங்களை வரச் சொல்லலாமா சக்கு?''

''அவுங்க சௌகரியம் எப்படியோ அப்படிச் செய்யட்டும்.''

''சக்குவைப் பத்தி நான் சொல்லிக் கேட்டதுலே யிருந்தே அவ பாட்டிலே உசிரா இருக்கான் தேனூர் மிராசுதார். நேத்திக்குக் கடைத் தெருப் பக்கமா போயிண்டு இருந்தோம். சட்டுன்னு வண்டியை நிறுத்தச் சொன்னான். கிடுகிடுன்னு கீழே இறங்கிப் போய் ராஜு செட்டியார் நகைக்கடைக்குள்ளே புகுந்

தான். கனமான வெள்ளிக் கூஜாவா ஒண்ணைப் பொறுக்கி எடுத்து விலை பேசி வாங்கிண்டு வந்துட்டான். 'என்ன சுவாமி, எதுக்கு இதெல்லாம்'னு கேட்டால், 'மிளகு மஞ்சள் அரைச்சுப் போட்டு இதிலே சூடா பால் விட்டு வைச்சிருந்து, அப்பப்போ கொஞ்சம் எடுத்து உறிஞ்சிண்டால் சக்குவோட தொண்டைக்கு இதமா இருக்குமேடா' என்கிறான். அதைத்தான் மத்தியானம் உங்க வீட்டிலே கொண்டு வந்து கொடுத்தேன், இவன் சார்பிலே. சிங்காரத்துக்கு இதெல்லாம் ஒண்ணும் பிரமாதமில்லே. சல்லிக் காசுக்குச் சமானம். சரி, நாங்க வரோம், நாழியாறது.''

கன்னங்களில் வழிந்தோடும் கண்ணீரைக் கூடத் துடைத்துக் கொள்ளத் திறனிழந்து செயலற்று நின்றான் வடிவேலு. அத்தானும் சிமாச்சுவும் ஜட்கா ஒன்றில் ஏறிச் சென்று நீண்ட நேரமாகியும் கூட, அவன் அதே இடத்தில் தனித்து நின்று தவித்துக் கொண்டிருந்தான். எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் நான்? அத்தானின் கால்களில் விழுந்து, தன் தங்கையின் சார்பிலே மன்றாடுவதா? அல்லது கோபத்துடன் அவர் மீது எரிந்து விழுவதா? இரண்டுமே சுலபமான காரியங்களில்லேதான். இத்தகைய ஒரு விஷயத்தைப் பற்றி அத்தானிடம் எப்படி ஆரம்பித்து என்ன பேசுவது? தகாத செயல் என்று நான் கடிந்துரைக்க ஆரம்பிக்கும் போதே அவர் தம்மைத் தப்பர்த்தம் செய்து கொண்டு விட்டதாக என் மீதே குற்றம் சாட்டினாரானால்? கலைஞர்களைக் கண்டு பேசுவதும் பாராட்டுவதும் ஏன், பரிசளிப்பதும்கூடப் பண்பு கெட்ட காரியங்களா என்று திருப்பிக் கேட்டுத் தாக்கினாரேயானால்? உத்தமனாகிய தன்னைச் சந்தேகித்து உளவறிய வந்ததன் மூலம் நான் அவர் உள்ளத்தை நோக அடித்து விட்டதாக நடித்து, உருகுவாரேயானால்? தவறெல்லாம் தன்னுடையது என்றல்லவோ ஆகி விடும்? இதென்ன சங்கடம்? அத்தானைக் காப்பதென்பது ரொம்பக் கடினமாயிருக்கும் போல் இருக்கிறதே?'

ஆளரவம் கேட்டது. சக்குபாயும் ஜமாலும்தான் வீடு நோக்கிக் கிளம்பிக் கொண்டிருந்தார்கள்.

அவர்களைக் கண்ட உடனே வடிவேலுவுக்கு பிரச்னையைத் தீர்த்து வைக்க ஒரு வழி மனத்தில் பளிச்சிட்டது. அவ்விருவரையும் அவன் தன் பார்வையிலிருந்து தப்ப விடவில்லை.

அன்றிரவு அவர்கள் வீடு இருக்குமிடத்தைத் தெரிந்து கொண்டவன், மறுநாள் பத்து மணி சுமாருக்கு அங்கே போனான். வாசல் கதவைத் தட்டினான். கொஞ்சமாக அது திறந்து கொள்ள வெளியே எட்டிப் பார்த்தது வழவழப்பானதொரு வதனம். ''என்ன வேண்டும்?'' என்று கேட்டது.

வடிவேலு பதிலளிக்கவில்லை. நெஞ்சைக் கவ்வ முயலும் அந்தக் கருவிழிகளை வெறித்து நோக்கின அவன் கண்கள்.

முன்பின் அறிமுகமில்லாத யாரோ வெளியே நிற்பதையும் அவன் பயங்கரமாகத் தன்னைப் பார்த்து விழிப்பதையும் கண்ட சக்குபாய் கதவை மீண்டும் சாத்தித் தாளிட முயன்றாள். அதற்கு இடம் தராமல் வடிவேலுவின் வலது தோள் கதவில் பதிந்தது; உந்தித் தள்ளியது. தடுமாறினாள் அவள். பீதியுடன் வாயைத் திறந்து பெரிய கவளமாகக் காற்றை உட்கொண்டபடியே பின்னுக்கு நகர்ந்தாள். வடிவேலு உள்ளே புகுந்தான். அதே சமயத்தில் எதிரே நின்ற ஓர் அலமாரியில் பதிக்கப்பட்டிருந்த நிலைக் கண்ணாடி மற்றும் ஓர் உருவத்தை அவனுக்குப் பிரதிபலித்துக் காட்டியது. கரத்தில் பற்றியிருந்த ரிவால்வரினால் வேண்டாத விருந்தாளியைக் குறி பார்த்துக் கொண்டிருந்தான் ஜமால். வடிவேலு திடுக்கிட்டுத் திரும்பினான். (தொடரும்)

உங்கள் தோற்றத்தை அழகுறச் செய்கிறது

# பின்னியின் தூய பட்டுப் புடவை

ஜார்ஜெட், ஷிப்பான், மற்றும்
மென்பட்டு ரகங்களில் கிடைக்கும்.



பெங்களூர் உல்லன், காட்டன் & ஸில்க் மில்ஸ் கம்பெனி லிமிடெட்
அக்ரஹாரம் ரோடு, பெங்களூர்-2
பின்னி & கம்பெனி (மதராஸ்) லிமிடெட் ஸ்தாபனத்தின் ஒரு கிளை

JWT/BM/SS/1749a

# பவழத்தீவு

கதை: வாண்டுமாமா
சித்திரம்: ரமணி.. 21

கந்தன் ஆவபாரணியின் அரண்மனைக்குள் புகுந்து சுற்றிப் பார்த்துக் கொண்டு வரும்போது, ஓரிடத்தில்..

ஜம்பு, அந்த இரண்டு காவல்காரர்களையும் நான் கவனித்துக்-கொள்ளுகிறேன். நீ அவர்களைக் கடந்து வேகமாகப் போய் விடு. நாம் இங்கிருந்து போக அந்த வழி ஒன்றுதான்..

கந்தனின் கட்டளைப் படி ஜம்பு அவனுடன் மாடிப்படிக ளில் பாய்ந்தோட, திடுப்ப-டைந்து விரட்டி வந்த காவ-லர்களை.......

கந்தன் தலையால் முட்டிக் கீழே உருட் டித் தள்ளிவிட்டு ஓடு கிறான்......

துரத்தி வந்த அவர்களை.....

வாருங்கள், வாருங்கள்! என்-னைப் பிடிக்கு முன்-இந்தப் பெட்டியைப்-பிடித்துக் கொள் ளுங்கள்....

ஹா..
..ஹா....
...ஹா..
ஹா!..

ஆ. ஐயோ!
செத்தேன்.

இந்தப் பக்கமா-கத்தானே வந்தான் அந்தப் பயல். எங்கே போயிருப்பான்.?


இதுதான் சூலபாணி யின் சிங்காதனம் போலிருக்கிறது. அப் படியானால் இதுதான் தர்பார் மண்டபமாக இருக்கும்.


ஹ..ஹ.. ஹா!.. சூலபாணியை விட இதில் உட்காருவ- தற்கு உனக்குத்தான் தகுதி உண்டு. அரசே! எனக்கு நீதி வழங்க வேண்டும்.


ஜிம்பு, நாம் வகையாகச் சிக்கிக் கொண்டோம் நம்மைச் சூழ்ந்து கொண்டு விட்டார்கள்.


சூலபாணி, கிழவன் தொடர வந்து சிங்கா தனத்தில் அமர்ந்தான்.
அந்தப் பயலை இப்படிக் கொண்டு வாருங்கள். மஹிபாலனின் மகளுக்கு ஆக்கமும் ஊக்கமும் தந்தவன் -கையா இவன்?


நிஜமாகவா.....?
அது மட்டுமல்ல, அந்த மஹிபாலனிடமிருந்து எந்த ரகசியத்தை அறிய நீ தவங்கிடந்தாயோ அது இப்போது இந்தப் பொடியனின் பொறுப்பிலிருக்கிறது...
நேற்று சிறைக் கூடத்தை ரக சியப் பலகணி வழியே பார்த் தேன்.


அவனிடமுள்ள அந்தப் புதையல் குறிப்பைப் பறி யுங்கள்.


தன் நண்பனுக்கு ஏதோ ஆபத்து என்பதை உணர்ந்த ஜிம்பு மெள்ள யாரும் காணாத சமயத்தில் அங்கி ருந்து நழுவுகிறது...


தேடிச் சென்ற பொருள்
தானே வந்து கிடைத்தது போல
இந்தப் பயலால் நமது லட்சி-
யம் கைகூடியது... ஹ...ஹ...
ஹா! இவன் மிருகங்களை
அடக்கியாளுவதில் வல்ல-
வனாமே? எங்கே நமது -
கரும் பூதத்தை அழைத்து வந்து
இவன் மீது ஏவி விடுங்கள்
பார்க்கலாம்..


வெறி கொண்ட கருஞ் சிறுத்தையைக்-
கூட்டி இழுத்து வந்து கந்தன் மீது ஏவுகி
றார்கள். ஆனால் அதுவோ அவனது கையை
நக்கிக் கொஞ்சுகிறது...


நமது கரும் பூதத்தையே
மயக்கிய இந்த மாயக்
காரனைக் கொண்டு -
போய்ப் பாதாளச் சிறை
யில் தள்ளுங்
கள்..


அந்த வேளையில்
ஏதோ ஒரு முடிவு
டன் ஓடுகிறது
ஜிம்பு.


தர்பார் மண்டபத்தின் விதா
னத்தில் தொங்கும் லஸ்தர்
விளக்கைப் பிணைத்திருக்
கும் கயிற்றை நோக்கி அம்
பைத் தொடுக்கிறது ஜிம்பு.






மின்னல் வேகத்தில் -
யாரும் எதிர் பாராத வாறு
ஜிம்பு குபீரென்று பாய்ந்து
துண்டித்த கயிற்றை ஒரு
கையால் பற்றிக் கொண்டு
கந்தனை வாரி அணைத்
துக் கொள்ளவே,
லஸ்தர் விளக்குக் -
கீழ் நோக்கிச் செல்ல
அதன் மறுமுனையி
லுள்ள ஜிம்பு கந்தனை
மேலே தூக்கப்படுகிறது.

தொடரும்

# 'தரத்தின் சின்னம்'

## இதைப் பாருங்கள்



## ர்ஸ்டோன் டயர்களில் மட்டுமேயுள்ள இது உங்களுக்கு அதிகப் .யான பாதுகாப்பிற்கும் நம்பிக்கைக்குமான உத்திரவாதச் சின்னம்

ளிடம் ஒரு மோட்டார் ஸ்கூட்டர், கார் ரக்டர் அல்லது டிரக்கிருந்தாலும் சரி, அல்லது கள் மேற்பார்வையில் ராட்சஸ மண் அகற்றும் ந்திரங்களிருந்தாலும் சரி, உங்களுடைய வைகளுக்குத் தகுந்த ஒரு பயர்ஸ்டோன் டயர் க்கிறது. ஒவ்வொரு டயரிலும், நெடுங்கால ஸ்தாபிக்கப்பட்டதும் கூடுதலான பாதுகாப் கும் நம்பிக்கைக்கும் சின்னமான பயர்ஸ்டோ 'தரத்தின் சின்னம்' பொரிக்கப்பட்டுள்ளது.

**ஸ்டோனைத் தேர்ந்தெடுப்பதால் உங்களுக்குக் கிடைப்பவை**

ாதுகாப்பு — பயர்ஸ்டோனுக்கேப் பிரத்தி யேகமான டிரெட் டிசைன் மற்றும் டயர் அமைப்பு உங்களுக்குக் கூடுதலான நிறுத்தும் சக்தியையும் ரஸ்தா அபாயங்களிலிருந்து பாது காப்பையும் அளிக்கின்றன.

சிக்கனம் — பயர்ஸ்டோனின் நீடித்து உழைக் கும் டிரெட் இந்தியாவில் நிலவும் உழைப்புச் சூழ்நிலைகளுக்கெனப் பிரத்தியேகமாகக் கலவை செய்யப்பட்டது. ஒரிஜினல் டிரெட் மூலம் நீங்கள் நிச்சயமாக ஒவ்வொரு ரூபாய்க்கும் கூடுதலான கிலோ மீட்டர்கள் ஓட்ட முடிகிறது.

- ரீடிரெட் செய்ய முடியும் — உங்கள் பயர்ஸ் டோன் டயர்களைப் பேணுங்கள். அவற்றின் மீது தாங்க முடியாத பாரத்தை ஏற்றித் தாறுமாறாக உபயோகிக்காதீர்கள். அவை மறுபடியும் மறுபடியும் ரீடிரெட் செய்வதற்கு லாயக்காக இருக்கும்.



**பயர்ஸ்டோன்** - இன்று சிறந்தவை—நாளை மேலும் சிறந்தவை

சின்னஞ் சிறுகதை

# புலவரின் பெண்

வெகு காலத்துக்கு முன்னே வித்யாரண்யர் என்று ஒரு புலவர் வாழ்ந்து வந்தார். அவர் மிகவும் ஏழை. புலவர்களே ஏழைகள்தானே? வித்யாரண்யர் ஏழை மட்டுமல்ல; அடக்கமே உருவானவரும்கூட. படித்திருக்கிறோம் என்ற கர்வம் அவருக்குக் கொஞ்சமும் கிடையாது. தனக்குச் சொந்தமான ஒரு காணி நிலத்தில் உழுது உழைத்து அதில் கிடைக்கும் வருமானத்தைக் கொண்டு வாழ்ந்து வந்தார் புலவர். அவருடைய அறிவாற்றலுக்கு அரச போகமும் அரண்மனை வாசமும் காத்துக் கிடந்தன. ஆனால் அவர் அதை எல்லாம் வெறுத்தார். பணமும் பதவியும் வந்தால் மனிதனின் பண்பு போய்விடும் என்று சொல்லுவார் வித்யாரண்யர். உழைத்துச் சாப்பிடுவதற்கு இணையான ஆனந்தம் வேறு எதிலும் இல்லை என்பது அவர் முடிவு.



கணவனின் கருத்துக்கு ஒத்தபடி வாழ்ந்து வந்தாள் அவர் மனைவி. இவர்களுக்கு மல்லிகா என்று ஒரு மகள். தகப்பனாரைப் போலவே கல்வி கேள்விகளில் வல்லவளாக விளங்கினாள் மல்லிகா.

புலவர் எங்கும் போகவில்லையே தவிர அவர் புகழ் பாரெங்கும் பரவி இருந்தது. அரச சபைகளில் எல்லாம் இவரது அறிவையும் அடக்கத்தையும் பற்றியே பேசிக் கொண்டார்கள். இதனால் மற்றப் புலவர்களுக்கு அவரிடம் கொஞ்சம் பொறாமைகூட ஏற்பட்டது.

சண்டிகன் என்று ஒரு புலவன். பல மொழிகளிலும் பாண்டித்யம் பெற்றவன். சிறந்த அறிவாளிதான். ஆனால், தான் என்னும் அகம்பாவம் கொண்டவன். வித்யாரண்யரின் புகழ் மேலும் மேலும் பெருகுவதைக் கண்ட இவனுக்கு ஆத்திரம் பொங்கிக் கொண்டு வந்தது. "அப்படி என்ன அவர் மகா மேதாவியோ? அதையும்தான் பார்த்து விடுவோமே. தூரத்துப் பச்சை இந்த அரசர்களுக்கு எப்போதுமே கண்ணுக்குக் குளிர்ச்சி" என்று நினைத்தவனாக ஒரு நாள் வித்யாரண்யரைச் சந்தித்து வாதாடி வெற்றி பெற்றுத் திரும்புவது என்ற வைராக்கியத்துடன் கிளம்பி விட்டான்.

வித்யாரண்யரின் கிராமத்துக்கு வந்த அவனுக்கு அவர் வீட்டைக் கண்டு பிடிப்பது ஒன்றும் கஷ்டமாக இல்லை. ஊருக்கு வெளியே அமைதியும் அழகும் நிறைந்த ஆற்றோரத்தில் அவர் குடிசை இருந்தது. சண்டிகன் போனபோது வித்யாரண்யர் வீட்டில் இல்லை. அவர் மகள் மல்லிகாதான் இருந்தாள்.

வாதுக்கு வந்த சண்டிகன் அகம்பாவத்துடன் அவர் இருப்பிடத்தைப் பார்த்துவிட்டு மல்லிகாவுடன் பேச்சுக் கொடுத்தான். தான் ஒரு பெரிய புலவன் என்பதை வெளிப்படுத்தும் தோரணையில் இருந்தது அவன் பேச்சு.

ஏளனப் புன்னகையுடன் அலட்சியமாக, "வெயில் ஒழுகும் மழை ஒழுகா வீட்டில் இருக்கும் பெண்ணே, உன் தகப்பனார் எங்கே போயிருக்கிறார்?" என்று கேட்டான்.

வித்யாரண்யரின் மகள் மல்லிகா, வந்தவனின் கேள்வியைக் கேட்டுப் புன்னகை பூத்தாள். புலவரின் மகளல்லவா? சண்டிகன் கேட்ட பாணியில்தானே பதில் சொல்ல வேண்டும். "அப்பாவா? நேற்று இறந்த உடலுக்கு இன்று உயிர் கொடுக்கப் போயிருக்கிறார்" என்றாள்.

சண்டிகனுக்கு அவளது சாதுரியமான பதில் திகைப்பை அளித்தது. ஆகவே அடுத்த கேள்வியை அடைமொழி யில்லாமலே சாதாரணமாகக் கேட்டான்: "உன் தாயார் எங்கேயம்மா?" என்று.



"அம்மாவா? சாண் பிள்ளையை முழப் பிள்ளையாகச் செய்யப் போயிருக்கிறாள்" என்ற பதிலைக் கேட்டு வந்தவனுக்குத் தலை சுற்றியது. புலவரின் மகளே இவ்வளவு அறிவுடையவளாக இருந்தால் புலவர் வித்யாரண்யர் எப்படிப்பட்டவரோ என்று எண்ணியபடி "அது சரியம்மா, நீ மட்டும் தனியாக என்ன செய்து கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டான்.

"நானா?" என்று நகைத்தாள் மல்லிகா. வந்தவனின் தவிப்பைக் காண அவளுக்குச் சிரிப்புத்தான் வந்தது. "நான் தலையை வைத்து உடலை எரிய விட்டுக் கொண்டிருக்கிறேன்" என்று பதில் சொன்னாள்.

வாதுக்கு வந்த புலவன் சண்டிகனின் கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் பெருகியது. புலவரது குடிசையை மூன்றுமுறை வலம் வந்துவிட்டுத் தானும் அவர் புகழ் பாடியபடியே திரும்பிச் சென்றான்.

வாதுக்கு வந்த புலவன் கேட்ட கேள்வியும் அதற்கு மல்லிகா சொன்ன பதில்களும் என்ன என்று உங்களுக்குப் புரியவில்லை அல்லவா?

"வெயில் ஒழுகும் மழை ஒழுகா வீட்டில்" என்றால் குடிசைக்குள் சூரிய வெளிச்சம் ஒழுகி உள்ளே பிரகாசத்தைக் கொடுக்கும். ஆனால் மழைக்கு ஒழுகாமல் உறுதியாகக் கட்டப்பட்ட குடிசை என்பது பொருள்.

நிலத்திலே முதல்நாள் பிடுங்கிய நாற்றுக்களை இன்று நடுவதற்காகத் தகப்பனார் போயிருக்கிறார் என்பதை மறைபொருளாக மல்லிகா சொன்னாள். பிடுங்கினால் செடி இறந்தது போலத்தானே? மறுபடி அதை (நாற்றுக்களை) நட்டால் பிழைத்துக் கொள்ளுமல்லவா?

தாயார் அடுத்த தெருவிலுள்ள ஒரு பெண்ணுக்குப் பிரசவம் பார்க்கச் சென்றிருப்பதைச் சூசகமாகத் தெரிவித்ததைக் கண்டு சண்டைக்கு வந்த சண்டிகன் மிரண்டே போனான்.

நெற்கதிரின் தலை எது? நெல் மணிகள் இல்லையா? உடல்? வைக்கோல். தலையைப் (நெல் மணிகளை) பானையில் கொட்டி; உடலால் (வைக்கோலால்) அடுப்பை எரிய விட்டு நெல்லைப் புழுக்கிக் கொண்டிருந்தாள் மல்லிகா. தான் செய்யும் காரியத்தைத்தான் அவள் எவ்வளவு அழகாக அற்புதமாகச் சொல்லி விட்டாள் என்பதை எண்ணியபோது புலவன் சண்டிகன் வித்யாரண்யரின் முன் வாதம் புரிவது வீண் என்று ஓடிப் போனான்.

## சிந்தியுங்கள்

ஒரு நாளைக்கு நான் சைக்கிளில் போய்க்கொண்டிருந்தேன். மேலே ரயில்வே பாலம். அதன் கீழே ரோடுபோயிற்று. எனக்குமுன் ஒரு லாரி போய்க் கொண்டிருந்தது. அதன் உயரம் பாலத்தின் விதானத்துக்குச் சற்று அதிகமாக இருந்தது. டிரைவர் அதைக் கவனிக்கவில்லை. அந்தப் பக்கத்துக்குப் புதிது போலிருக்கிறது. வேகமாகப் போனதும் லாரியின் 'டாப்' பாலத்தின் மேல் பக்கத்தில் போய் நன்ருகக் கவ்விக் கொண்டு விட்டது. லாரியினுல் முன்னும் போக முடியவில்லை. பின்னுலும் வர முடியவில்லை. லாரியின் முன்னும் பின்னும் இரு மருங்கிலும் போக்குவரத்து ஸ்தம்பித்து விட்டது. சிலர் பாலத்தைப் பெயர்த்துத்தான் லாரியை அப்புறப்படுத்த வேண்டும் என்ருர்கள். அதற்கு ரயில்வே அதிகாரிகள் சம்மதிப்பார்களா? லாரிக்காரனே தன் வண்டியில் ஒரு சிறல் கூட விழக் கூடாது என்று வாதாடினுன். வழியை அடைத்துக் கொண்டதால் போவோர் வருவோர் கோபத்துடன் கூச்சலிட்டனர்.

நானும் அங்கே சைக்கிளை விட்டிறங்கி நின்று கொண்டிருந்தேன். யாருக்கும் ஒன்றும் தோன்ருதபோது நான் கூட்டத்தை விலக்கிக் கொண்டு முன்னே சென்று லாரி டிரைவரிடம் ஒரு உபாயம் சொன்னேன். அடுத்த சில நிமிஷங்களில் லாரி தன் வழியே நகர்ந்து போக ஆரம்பித்தது. போக்குவரத்தும் நேராயிற்று. நான் சொன்ன உபாயம் என்ன, சொல்லுங்கள் பார்க்கலாம்?

விடை :

லாரிச் சக்கரங்களின் காற்றைப் பாதி திறந்து விடச் சொன்னேன். அதனுல் வண்டியின் உயரம் சற்றுத் தணிந்தது. பாலத்தினுள் சுலபமாக நுழைந்து செல்ல இப்போது அதனுல் முடிந்தது.

---

உலக அதிசயங்கள் — 1

## சூரியதேவன் சிலை

உங்களுக் கெல்லாம் தெரியும், உலக அதிசயங்கள் மொத்தம் ஏழு என்று. இப்போது நாம் பார்க்கும் படியாக இருப்பது எகிப்து தேசத்திலுள்ள பிரமிட் ஒன்று தான். மற்ற ஆறு அதிசயங்களும் அழிந்து போய்விட்டன.

அதியன் கடலில் உள்ள ஒரு தீவில் ரோட்ஸ் துறைமுகத்தின் முகத்துவாரத்தில் ஒரு மனிதன் கால்களை அகல வைத்தபடி தலைக்கு மேல் உயர்த்திய ஒரு கையில் தீவட்டி பிடித்தநிலையில் பிரம்மாண்டமான ஒரு வெண்கலச் சிலை நிறுத்தப் பட்டிருந்தது. இதன் விரிந்த கால்களுக்கு இடையிலே தான் கப்பல்கள் நுழைந்து சென்றன. இந்தச் சிலை சூரியக் கடவுளான ஹீலியஸைக் கௌரவிப்பதற்காக எழுப்பப்பட்டதாம். இதன் உயரம் 120 அடிகள். இந்தச் சிலையின் உடலுக்குள்ளே மாடிப்படிகள் வைத்துக் கட்டி யிருந்தார்களாம். இதன் வழியே மக்கள் சிலையின் ff உச்சிக்குப் போகலாமாம். கலங்கரை விளக்கம் போன்று கட்டப்பட்டிருந்த இந்தச் சிலையை உருவாக்கிய சிற்பியின் பெயர் சார்ஸ். இதை முடித்து நிறுத்த, அவனுக்குப் பன்னிரண்டு வருடங்களாயினவாம். கி. மு. 280-ல் முடிவடைந்த இந்தச் சிலை கி. மு. 224-ல் ஏற்பட்ட பூகம்பத்திஞல் அழியா திருந்திருக்குமாளுல் பண்டைய மனிதர்களின் திறமைக்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்கிக் கொண்டிருக்கும்.

பூகம்பத்திஞல் இந்தச் சிலையின் முழங்காலில் பிளவு ஏற்பட்டு 'மடார்' என்று தரையில் சரிந்தது. உடைந்து உருக்குலைந்த இந்த வெண்கலச் சிலையின் பாகங்கள் பல நூறு வருடங்கள் வரை அப்படியே கிடந்தன. காரணம் இதை யாராவது தொட்டால் கடவுளின் கோபத்துக்கு ஆளாக நேரிடும் என்ற மூட நம்பிக்கைதான். கி. பி. 656-ல் ரோட்ஸ் நகரை சாரஸென்கள் கைப்பற்றிஞர்கள். பிறகு ஒரு யூத வியாபாரி, இந்த உடைந்த சிலையின் வெண்கலத் துண்டுகளுக்கு ஐம்பதினுயிரம் பவுன்கள் விலை கொடுத்து வாங்கிஞன். அந்த உலோகத் துண்டுகளை அவன் 900 ஒட்டகங்களில் ஏற்றிச் சென்றிருக்கிருன் என்ருல் அதன் அளவு எவ்வளவு இருந்திருக்குமென்பதைக் கணக்குப் போட்டுப் பாருங்கள்.

# ஜம்மியின் லிவர்க்யூர்



குழந்தைகளின் ஈரல், குலைக்கட்டி கோளாறுகளுக்கு

## வழக்கமான மாதாந்திர விஜயம்

எமது வாடிக்கையாளர்களின் நலனையும் சௌகரியத்தையும் முன்னிட்டு எமது டாக்டர்கள் கீழ்க்கண்ட இடங்களில் ஒவ்வொரு மாதமும் குறிப்பிட்ட தேதிகளில் விஜயம் செய்கிறார்கள். அப்பொழுது அவர்களைக் கலந்து ஆலோசிக்கலாம்.

| இடம் | தேதி | நேரம் | விலாசம் |
|---|---|---|---|
| ஈரோடு | 1 | 9 to 11 காலை | நவபவன் லாட்ஜிங் |
| சேலம் | 2 | 9 to 11 காலை & 3 to 5 மாலை | கோயமுத்தூர் லாட்ஜ் பிராஞ்ச் |
| திருப்பூர் | 3 | 9 to 11 காலை | ஆர். எஸ். வாசன் & Co, கெமிஸ்ட்ஸ் |
| கோயமுத்தூர் | 4 | 9 to 11 காலை & 3 to 5 மாலை | ஈஸ்வர் & கம்பெனி, கெமிஸ்ட்ஸ் |
| திண்டுக்கல் | 5 | 9 to 11 காலை | சி. ஆறுமுகம் பிள்ளை & சன்ஸ் ஜெனரல் மெர்ச்சண்ட்ஸ் |
| மதுரை | 6 & 7 | 9 to 11 காலை & 3 to 5 மாலை | உடுப்பி போர்டிங் லாட்ஜ், மேல மாசி வீதி |
| விருதுநகர் | 8 | 9 to 11 காலை | சரவணமுத்து பிள்ளை சத்திரம் |
| தூத்துக்குடி | 9 | 9 to 11 காலை | M/s. வி. எஸ். சங்கரலிங்கம் பிள்ளை, மெடிகல் ஸ்டோர்ஸ் |
| திருநெல்வேலி-ஜங்ஷன் | 10 | 9 to 11 காலை & 3 to 5 மாலை | சந்திர விலாஸ் ஹோட்டல் |
| அம்பாசமுத்திரம் | 11 | 9 to 11 காலை | கோமதி மெடிகல் ஸ்டோர்ஸ் |
| தென்காசி | 12 | 9 to 11 காலை | எஸ். கிருஷ்ணா & கம்பெனி, மெடிகல் ஸ்டோர்ஸ் |
| ராஜபாளையம் | 13 | 8 to 10 காலை | அசோகா போர்டிங் & லாட்ஜிங் |
| ராமநாதபுரம் | 14 | 9 to 11 காலை | ராஜன் மெடிகல் ஹால் |
| காரைக்குடி | 15 | 9 to 11 காலை 3 to 5 மாலை | ஏ. வி. & ஸன்ஸ், டிராவலர்ஸ் ரெஸ்ட் ஹவுஸ் |
| புதுக்கோட்டை | 16 | 9 to 11 காலை | வஸந்தா லாட்ஜ் |

குறிப்பு: வழக்கம்போல் எல்லா நாட்களிலும் எமது க்ளினிக்குகளில் ஆலோசனைகள் கூறப்படும்

**ஜம்மி வெங்கடரமணய்யா & சன்ஸ்**

திருச்சிராப்பள்ளி — கிளை: கும்பகோணம்









## தலைமை மாறுகிறது!

1. புதிய ஜனாதிபதியும் உப ஜனாதிபதியும். 2. ஜனாதிபதிக்குப் பதவிப் பிரமாணம் நடக்கிறது. 3. புதிய ஜனாதிபதி ராதா கிருஷ்ணன் ராணுவ மரியாதை செலுத்துகிறார். 4. ராஜன்பாபுவுக்குப் பாரத ரத்ன பட்டத்தை வழங்குகிறார் திரு ராதா கிருஷ்ணன். 5. ஜனாதிபதி ஊர்வலத்துக்குப் புறப்பட்டு விட்டார். 6. பிரதமர் பண்டித நேருவுடனும், ராஜன்பாபுவுடனும், இந்திரா காந்தியுடனும் புதிய ஜனாதிபதி.





# நந்தவனம்



## 21. வாக்குறுதி

சிங்கம்புத்தூர் ஜமீந்தார் அனவரத புவனபதி நந்தவனத்துக்குள்ளே நுழையும்போது, செண்பகசுந்தரியின் கூந்தலிலே முல்லை மலரைச் சூடிக் கொண்டிருந்தான் வில்வநாதன்! இதைப் பார்த்ததும் ஒரு விநாடி அப்படியே அசைவற்று நின்றார் ஜமீந்தார். அவருடைய உடம்புக்குள்ளே மின்னல் பாய்ந்தது! அந்த மின்னலின் வேகத்தைத் தாங்க முடியாமல் மறுபடியும் புதர் மறைவுக்குள்ளே முகத்தைத் திருப்பிக் கொண்டு சத்திரத்தை நோக்கித் திரும்பி நடந்தார் அனவரதபுவனபதி!

''யாரோ வந்தது போல் இருந்தது. அதனால்தான் பின் பக்கம் திரும்பிப் பார்த்தேன்!'' என்றாள் செண்பக சுந்தரி!

''யாருமில்லை. பெண்களுக்கே கற்பனை அதிகம்!'' என்றான் வில்வநாதன்.

''கற்பனை இல்லை! யாரோ வருவது போல் இருந்தது. அப்படியே இதயம் படபடத்தது!'' என்றாள் சுந்தரி.

இருவரும் சிரித்துக் கொண்டே மேலே நடந்தார்கள்.

செண்பக சுந்தரியை வீட்டுக்கு அனுப்பி விட்டு வில்வநாதன் சத்திரத்துக்குத் திரும்பிய போது அவனுக்காக ஒரு பேராச்சரியம் காத்திருந்தது. ஜமீந்தாரின் உருவத்தில்!

வழக்கமாக வில்வநாதனைக் கண்டதும் எத்தனை குதூகலத்தோடு வரவேற்பார் ஜமீந்தார்! அவருடைய முகத்தில் எத்தனை களிப்புப் பொங்கும்! அதொன்றும் இப்பொழுது காணோம்! முகத்தில் ஏதோ ஒரு

விபரீதமான கருப்புப் படர்ந்திருப்பதை வில்வநாதன் கவனித்தான்.

''மன்னிக்க வேண்டும்! நீங்கள் இங்கே வந்தது எனக்குத் தெரியாது!'' இவ்வாறு பேச்சைத் தொடங்கினான் வில்வநாதன்.

''அதனால் என்ன? பாதகம் இல்லை! நான் இங்கு வந்து நீண்ட நேரம் ஆகிறது!'' என்றார் ஜமீந்தார். முகத்தில் எவ்விதமான உணர்ச்சிக் கோடுகளும் நெளியவில்லை. கண்களில் மட்டும் ஏதோ ஆழம் தெரிந்தது. ஒரு விபரீதமான ஆழமாக இருந்தது அது என்பது ஓவிய இளைஞனுக்கு நன்றாகப் புலனாயிற்று.

''நீங்கள் இங்கு வந்து நீண்ட நேரம் ஆகிவிட்டதா! மன்னிக்க வேண்டும்!'' என்றான் வில்வநாதன்.

''நேரே சத்திரத்துக்கு வரவில்லை. ஓவியச் சுவர்களைத்தான் போய்ப் பார்த்தேன். அப்படியே மனம் இடிந்து போய் விட்டது. அதற்கு மேல் வேறு எதைப் பார்த்தும் இடிந்து போவதற்கு இடம் இல்லாதபடி, அவ்வளவு தூரம் இடிந்து போய் விட்டது!''

இப்படிச் சொன்னார் அனவரத புவனபதி. வில்வநாதனுக்குச் 'சுருக்' என்றது! ''வேறு எதையும்பார்த்து'' என்று மெதுவாக வார்த்தைகளைச் செருகினாரே, அதைக் கேட்டதும் வில்வநாதனுக்கு நன்றாகப் புரிந்து விட்டது! செண்பக சுந்தரி சொன்னாளே, யாரோ வருவது போல் இருந்தது என்று! அவள் சொன்னது சரிதான்! ஜமீந்தார்தான் நந்தவனத்துக்குள் வந்திருக்க வேண்டும்! செண்பக சுந்தரியும்

## சோமு

தானும் ஒன்றாக இருந்ததையும் அவர் கவனித்திருக்க வேண்டும்! இவ்வாறு எண்ணியதும் வில்வநாதனுக்கு உடம்பு படபடத்தது! ஒன்றுமே பேச முடியாமல் மௌனமாக இருந்தான்.

ஜமீந்தாரும் மௌனமாக இருந்தார். இந்த மௌனம் வில்வநாதனுக்கு மேலும் வேதனை தந்தது. அவராக ஏதாவது கேட்க ஆரம்பிக்க மாட்டாரா என்று ஓர் ஏக்கம் — ஒரு விசித்திரமான ஏக்கம் — வில்வநாதனின் இதய அந்தரங்கத்திலே குமிழியிட்டது!

''ஓவியரே!'' என்று அழைத்தார் மிகுந்த மரியாதையோடு ஜமீந்தார்! இந்த அழைப்பிலே இருந்த 'மரியாதைப் பண்மை'யை வில்வநாதனால் தாங்க முடியவில்லை.

''ஓவியர் அவர்களே!'' என்றார் அதற்கு மேலே! வில்வநாதனால் காலை ஊன்றி அங்கே நிற்க முடியவில்லை. கையும் காலும் என்னவோ செய்தன.

''ஓவியர் அவர்களே! நான் உங்களை அழைத்து வந்த நோக்கம் உங்களுக்குத் தெரியும். செண்பக நாயகி

திருவிழாவுக்கு இன்னும் பத்து வாரங்களே இருக்கின்றன.''

ஜமீந்தார் இப்படிச் சொன்னதும் வில்வநாதனுடைய உள்ளத்தில் அவனேயும் மீறிய ஓர் உறுதி பிறந்தது.

''ஆமாம். இரண்டு மாதங்களுக்கு மேல் இருக்கின்றன. என்னுடைய பணி இன்னும் ஒரு மாதத்துக்குள் பூர்த்தியாகி விடும்!''

இவ்வாறு சொன்னான் வில்வநாதன்.

''எந்தப் பணியைக் குறிப்பிடுகிறீர்கள் ஓவியரே!'' என்று மிகுந்த நிதானமான குரலிலே கேட்டார் ஜமீந்தார்.

''சுவர்களைப் புதுப்பிக்கும் பணியைத்தான் சொல்லுகிறேன். ஒரு மாதம் கூட ஆகாது. இன்னும் பதினைந்தே நாட்களில் முடிந்து விடும்!''

வில்வநாதன் இப்படிச் சொன்னபோது அவனுடைய குரலில் அசாதாரணமான உறுதி ஒலித்தது!

''பதினைந்து நாட்களுக்குள்ளாகவா? அதற்குள் இந்தச் சுவர் ஓவியங்கள் பூர்த்தியாகி விடும் என்று சொல்லுகிறீர்கள்?''

''ஆமாம். பதினைந்து நாட்கள். பதினைந்து இரவு; பதினைந்து பகல்! இரவு பகலாக உழைப்பேன்! இது உறுதி...!''

ஜமீந்தாருடைய கண்கள் சிவந்தன! உள்ளத்தில் எழுந்து பொங்கிய சீற்றத்தை அடக்கிக் கொள்ள முயன்ருர் என்பது அந்தக் கண்களிலே தெரிந்தது.

''ஓவியரே! நன்ருக யோசித்துப் பேசுகிற பேச்சுத்தானு இது!'' என்று கேட்டார் அனவரதர்.

''ஆமாம். நன்ருக யோசனை செய்தே சொல்லுகிறேன். இரண்டு வாரம் கழித்து நீங்கள் இங்கே வரலாம். சுவர் ஓவியங்கள் அனைத்தும் பூர்த்தியாகி நின்று உங்களை வரவேற்கும்! இது என்னுடைய வாக்குறுதி!''

அனவரதர் ஒன்றும் பேசவில்லை. மௌனமாக எழுந்தார். உள்ளத்துக்குள் ஏதேதோ உணர்ச்சிகளை விமரிசனம் செய்து கொண்டே சத்திரத்துக்கு வெளியே வந்தார்.

''ஓவியரே! நான் வருகிறேன்! இரண்டு வாரம் கழித்து வருகிறேன்.''

இவ்வாறு சொல்லி விட்டு அங்கிருந்து நடந்தார் ஜமீந்தார். இதை யெல்லாம் எட்டி நின்று பார்த்துக் கொண்டேயிருந்த சுப்பையா, மருள மருள விழித்துக் கொண்டே ஜமீந்தாரின் முன்னேடு அவனும் நடந்து சென்ருன்.

வில்வநாதன் மறுபடியும் சத்திரத்துக்குள்ளே வந்து உட்கார்ந்தான். ஜமீந்தார் வந்தது, பேசியது, சென்றது எல்லாம் ஒரு சில விநாடிகளுக்குள் வேகமாகச் சுழன்ருேடிய நிகழ்ச்சிச் சக்கரமாக அவனுடைய கண் முன்னே சுழன்றன! அந்தச் சுழற்சியிலே தாமரைச் செல்வியின் அன்பு முகமும் சேர்ந்து சுழன்றது! 'செல்விக்கு இதெல்லாம் தெரிந்தால் என்ன ஆகும்?' என்று நினைத்துப் பார்த்தான் வில்வநாதன்! அப்படியே தலை வேகமாகச் சுற்றியது வில்வநாதனுக்கு!

தாமரைச்செல்வி! அவளுக்கு இதெல்லாம் தெரியாதா? தெரியாது என்று நினைத்தான் வில்வநாதன். ஆனால் சிங்கம்புத்தூரில் நடந்த நிகழ்ச்சிகள் என்ன?

யாரோ ஜன்னல் வழியாகப் போட்டிருந்த ஒரு கடிதத்தை எடுத்துப் படித்துப் பார்த்ததும் சுப்பையாவைக் கூப்பிட்டாள் அல்லவா தாமரைச் செல்வி! இப்பொழுது சற்றும் எதிர்பாராதவிதமாக ஜமீந்தார் நந்தவனத்துக்கு வந்ததற்குக் காரணமே அந்தக் கடிதந்தான்.

தன்னுடைய மாடி அறைக்குச் சுப்பையா வந்ததும் அவனை உள்ளே அழைத்துச் சென்று இரகசியமாகச் சில வார்த்தைகள் பேசத் தொடங்கினள் தாமரைச்செல்வி!

''சுப்பையா! இந்தப் பெரிய அரண்மனையில் நீ ஒருவன்தான் என்னுடைய நம்பிக்கைக்கு அருகதை உள்ளவன் என்று நினைக்கிறேன். அது சரிதானு?'' என்று பேச்சை ஆரம்பித்தாள் செல்வி.

''அம்மா! இப்படியெல்லாம் பேசணுமா என்னிடத்திலே! அப்பன், பாட்டன், முப்பாட்டன் காலத்திலேயிருந்து இந்த அரமனைக்கு அடிமைகநாங்க! சாப்பிட்ட இடத்துக்குத் துரோகம் நினைச்சா கடவுள் கேப்பாரு அம்மா!''

இப்படிச் சொல்லும் போது சுப்பையாவின் குரல் தளர்ந்தது. கண் கலங்கிற்று.

''சுப்பையா! எவ்வளவோ கெட்டிக்காரியாக இருக்கத்தான் முயற்சி செய்தேன். ஆனாலும் மனசிலே ஏதேதோ நினைப்புக்களுக்கு இடம் கொடுத்து, என்னையே நான் ஏமாற்றிக் கொண்டு விட்டேன். அதை யெல்லாம் உன்னேடு பேசுகிறதே தப்பு. நீ ஒரே ஒரு உதவி மட்டும் செய்தால் போதும்!''

தாமரைச் செல்வியின் வார்த்தைகளில் ஒரு குழந்தையின் தாபம் இருந்தது. சுப்பையா சொன்னான்:

''அம்மா! நான் உங்களை யெல்லாம் போல நாலு எழுத்துப் படிச்சவன் இல்லே. ஆனாலும் இங்கே வந்து போகிற ஆளுகளை யெல்லாம் படிச்சுப் படிச்சு மனப்பாடம் பண்ணியிருக்கேன் அம்மா!

# குடிகூரா போட்டிக்கு

## உங்கள் கூப்பனை இன்றே அனுப்புங்கள்

# ரூ. 6,000

**ரொக்கப்பரிசுகளாக அளிக்கப்படும்**

மேலும் விவரங்களுக்கு, உங்கள் அருகாமையிலுள்ள குடிகூரா வியாபாரியை நாடுங்கள்.




# குடிகூரா

டால்கம் பவுடர்

NATIONAL C 188

---



## பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு

### பிரைவேட் லிமிடெட்

'பாலுஸேரி பில்டிங்ஸ்'

3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி

தபால் பெட்டி நெ. 414. மதருஸ்-5

தந்தி : 'EVERMANS' போன் : 85834

சேரக் கடைசி தேதி 6-6-1962 ... முதல் ஏலத் தேதி 8-6-1962

| 25 மாதங்கள் | மாதாந்திர சீட்டுகள் (2-வது வெள்ளிக்கிழமை ஏலங்கள்) | 25 அங்கத்தினர்கள் |
|---|---|---|

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | E | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | F | ரூ. 15/- | ரூ. 375/- |
| D | ரூ. 25/- | ரூ. 625/- | G | ரூ. 10/- | ரூ. 250/- |

விலாசம் தெளிவாக எழுதிக் கேட்பவர்களுக்கு எங்கள் விதிகள் இலவசமாக அனுப்பப்படும். சீட்டில் அங்கத்தினர்களைச் சேர்த்துக் கொள்ளும் உரிமை பண்டைச் சேர்ந்தது.

(போர்டார் உத்திரவுப்படி) எம் வி சுப்ரமணியம், மானேஜிங் டைரக்டர்

டெல்லி கிளை ஆபீஸ்கள் : கான்னாட் ஸர்கஸ், 1/24, ஆஸப் அலி ரோடு புது டில்லி-1 * பாலுஸேரி பில்டிங் 14-A/4 W.E.A. கரோல்பாக், புது டில்லி-5 * 198, முதல் மாடி, ஜோர்பாக் நர்ஸரி புது டில்லி-3 * பெங்களூர் கிளை ஆபீஸ்: 185, முதல் மாடி, ஆறுவது க்ராஸ் காந்தி நகர், பெங்களூர்-9 * பம்பாய் கிளை ஆபீஸ் 'விஜய விஹார்' 17-A, லையன் மாதுங்கா, வெஸ்ட் (கிங்ஸ் ஸர்க்கிள் ரயில்வே ஸ்டேஷனுக்கு எதிரில்) பம்பாய்-22 கல்கத்தா கிளை ஆபீஸ் 48, லேக் ப்ளேஸ், கல்கத்தா-29

## எங்கள் சேவை உங்களுக்குத் தேவை

5—27-5





மே 26ல

முதல



பத்மினி

பிக்சர்ஸ்

# பலே பாண்டியா!

பாடல்கள்
கவிஞர் கண்ணதாசன் • வசனம் மா.ரா • இசை விஸ்வநாதன்-ராமமூர்த்தி

தயாரிப்பு & டைரக்ஷன் • B.R. பந்துலு

சென்னை சாந்தி (ஏர் கண்டிஷண்ட்)

மற்றும் தென்னாடெங்கும்



ELEGANT

எனக்கு அதிகமாக ஒண்ணும் சொல்ல வேண்டாம். எழுத்துக புரியாவிட்டாலும், மனசுகளைப் புரிஞ்சுக்கிட முடியும் அம்மா!'' என்று சுப்பையா சொன்னபோது அவனுடைய கண்களிலிருந்து கண்ணீர் வந்தது. செல்வி சொன்னாள்:

''சுப்பையா! அப்பாவுடைய குணம் உனக்குத் தெரியும்! இந்த நிலைமையில் ஓவியம் வரையப் போன வில்வநாதன் அந்த வேலையைக் கவனிக்காமல் ஏதோ அசட்டையாக இருக்கிறாராம்! திருவிழாவுக்கு ஒரு வாரம் இருக்கும்போது திடீரென்று அப்பா போய் இதைப் பார்த்தால் என்ன ஆகும்? நீயே சொல். அதனால் இன்று அல்லது நாளைக்கு அப்பாவைச் செண்பகக் காட்டுக்குப் போகும்படி சொல்லலாம் என்று நினைக்கிறேன். நீ அப்போது எனக்காக ஒரு உதவி செய்ய வேண்டும்!''

இவ்வாறு மறுபடியும் உதவி என்ற வார்த்தையைப் பேசினாள் செல்வி!

''உதவியா! என்னம்மா சொல்லுறீக நீங்க! என்ன செய்யணுமோ அதைச் சொல்லுங்கம்மா! செய்யக் காத்திருக்கேன்...!''

சுப்பையா இப்படிச் சொன்னதும் செல்வி சற்று நேரம் மௌனமாக இருந்தாள். நன்றாக யோசனை செய்துவிட்டுப் பிறகு சொன்னாள்:

''சுப்பையா! வில்வநாதன் இந்தச் சிங்கம்புத்தூர் மாளிகைக்குள்ளே வந்து சேர்ந்த முதலாவது நாள் அப்பா உன்னிடம் என்ன சொன்னார்கள் என்பது நினைவிருக்கிறதா? அவரைக் கவனித்துக் கொள்ள வேண்டியது உன்னுடைய பொறுப்பு என்று சொன்னார்கள். அதையேதான் நான் இப்பொழுது சொல்லுகிறேன்!''

செல்வி இப்படிச் சொன்னதும் சுப்பையா குழப்பத்தோடு அவளையே பார்த்தான். அவள் தொடர்ந்து சொன்னாள் :

''அப்பாவுடைய மனசே மாறினாலும்கூட நீ அந்தப் பொறுப்பை மறந்துவிடக் கூடாது. எந்தச் சந்தர்ப்பத்திலும் வில்வநாதனைக் கவனித்துக்கொள்ள வேண்டியவன் சுப்பையாதான்!''

இந்த வார்த்தைகள் செல்வியின் நாவிலிருந்து உதிரும் போதே, அவளுடைய கண்களிலிருந்து நீர்த் துளிகள் உதிர்ந்தன.

''அம்மா!'' என்றான் சுப்பையா.

அதற்கு மேல் அவனால் தாங்க முடியவில்லை.

''அம்மா! நான் இந்த அரமனைக்கு வேலைக்காரன். ஆனாலும் நானும் நாலு பிள்ளைகளுக்குத் தகப்பனம்மா! ஒரு பெண் குழந்தையோட மனசு எனக்குப்



''டேய்! எங்க தாத்தா பெரிய எழுத்தாளர் தெரியுமாடா? அவர் எதை எழுதினாலும் ஜனங்கள் அப்படியே அதை விழுங்கி விடுவார்கள்.''

''இதென்னடா பிரமாதம்! எங்க பாட்டிகூடத்தான் பெரிய எழுத்தாளர். அவங்க என்ன எழுதினாலும் அப்படியே நாங்க விழுங்கி விடுவோம்!''

''பாட்டி என்னடா எழுதறா?''

'' 'தவி வடாம்' ரொம்ப நன்னா எழுதுவா.''

புரியும். இத்தனை பிரியத்துக்கும், இத்தனை அன்புக்கும் அந்தச் சித்திரக்காரர் தகுந்தவரா இருக்கணுமேன்னுதான்—''

''சுப்பையா! பிரியம் என்பது மற்றவர்களுக்காக ஏற்படுகிற ஒரு உணர்ச்சி இல்லை. ஒருவர் நம்மிடம் அன்பாக இருக்கிறார் என்பதற்காக நாம் அவரிடம் அன்பாக இருப்பது ஒரு வகையான வியாபாரம்! அன்பை வாங்கிக்கொண்டு அன்பைக் கொடுப்பது பண்ட மாற்று செய்கிறது போல! ஒரு விற்பனை! ஆனால் உண்மையான அன்பு என்பது அப்படியில்லை. நமக்காகவே நாம் ஒருவரிடம் பிரியமாக இருக்கிறோம். அவருக்காக இல்லை! அவர் நம்மிடம் பிரியமாக இருக்கிறார் என்பதற்காக அல்ல. நமக்காகவே, நம்முடைய திருப்திக்காகவே நாம் அவரிடம் பிரியம் செலுத்துகிறோம். இதுதான் உண்மையான அன்பு. இந்த அன்பிலேதான் ஆனந்தம் இருக்கிறது!''

சுப்பையாவுக்கு மறுமொழி சொல்ல முடியவில்லை. செல்வியின் வார்த்தைகள் அவனுக்குக் குழப்பத்தைத் தந்தன. ''அம்மா நீங்க பேசறது எனக்கு ஒத்துக்க முடியலே. ஆனாலும் எதுக்காக இப்படியெல்லாம் சொல்லணும் நீங்க? அது புரியுது. அந்தச் சித்திரக்காரருக்கு எந்த விதமான கெடுதலும் வராமல் பார்த்துக்க வேண்டியது என்

பொறுப்பு. அவ்வளவுதானே? நீங்க கவலைப்படாதீங்க! அது என் பொறுப்பு!''

இப்படி ஒரு வாக்குறுதி கொடுத்தான் சுப்பையா!

அங்கிருந்து சுப்பையாவை அனுப்பிய பிறகு செல்வியின் உள்ளத்தில் மறுபடியும் போராட்டம் தொடங்கியது.

'நமக்காகவே நாம் அவரிடம் பிரியம் செலுத்துவதா? இது என்ன வேடிக்கையான பேச்சு! அப்படியானால் இந்தக் கடிதத்திலே சொல்லியுள்ள செய்தி உண்மையாக இருந்தாலும்கூட, வில்வநாதனிடம் என்னுடைய அன்பு குறையாதா! இது என்ன பைத்தியக்காரத்தனம்! பிரியத்தில் இப்படி ஒரு பிரியமா!'

இப்படி எண்ணியதும் செல்விக்குத் தன்னிடமே ஒரு வெறுப்பு வந்தது.

'இராது! இந்தக் கடிதத்தில் உள்ளது வெறும் புரட்டாக இருக்கும்! வில்வநாதன் மாசற்ற உத்தமன்! அந்த உத்தமமான குணந்தானே என்னை இப்படியெல்லாம் அவரிடம் பித்துக் கொள்ளும்படி செய்தது!' என்று எண்ணத் தொடங்கினாள் செல்வி.

மறுபடியும் உள்ளம் குழம்பியது.

'நான்தானே அவரிடம் ஏதேதோ வகையில் எல்லாம் பிரியத்தைக் காட்டினேன்! அவர் என்ன செய்தார்? அவரிடம் என்ன தவறு சொல்ல முடியும்? இப்பொழுது அவர் வேறு யாரிடமாவது பிரியம் செலுத்தினார் என்றால், அதைத் தவறு என்று எப்படிச் சொல்ல முடியும்? என்னை வஞ்சித்தாரா அவர்? என்னிடம் ஏதாவது வீண் ஆசைகளை வளர்த்தாரா? இல்லையே! நானாகச் செய்து கொண்ட கற்பனைகளுக்கு அவர் என்ன செய்வார்? அவர் எப்படிப் பொறுப்பாளி ஆவார்?'

மனம் இப்படி ஒரு விவாதத்தைக் கிளப்பியது. இந்தத் தர்க்க நியாயத்துக்குப் பிறகு, தாமரைச் செல்விக்குத் தனியாக இருந்து யோசனை செய்வது கூடப் பிடிக்கவில்லை! முடிவில்லாது மேலே மேலே பறந்து கொண்டிருந்த சிந்தனைகளைப் பின்தொடர முடியாதவள்போல, அறையிலிருந்து எழுந்தாள். நேரே தகப்பனாரிடம் வந்தாள்.

''அப்பா! நீங்கள் செண்பக வனத்துக்குப் போக வேண்டும் என்று ஒரு வாரமாகச் சொல்லிக் கொண்டிருக்கிறீர்களே! எப்பொழுது போகிறீர்கள் அப்பா?''

இவ்வாறு கேட்டாள் செல்வி.

''நீ வருவதானால் இப்பொழுதே புறப்படுகிறேன்!'' என்றார் அனவரதர்.

''நீங்கள் இன்றைக்குப் போய்விட்டு வாருங்கள். நான் அடுத்த வாரம் வருகிறேன். வில்வநாதனிடம் காட்டுவதற்காகச் சில சித்திரங்கள் வரைந்துகொண்டிருக்கிறேன். இன்னும் முடியவில்லை. அவற்றை முடித்து எடுத்துக் கொண்டு வரலாம் என்று இருக்கிறேன்!''

மகள் இப்படிச் சொன்னதும் தந்தைக்கு மிகுந்த திருப்தி உண்டாகி விட்டது.

''பேஷ்! இன்று உனது ஆசிரியரிடம் சொல்லுகிறேன். இவ்வளவு நல்ல மாணவி அவருக்குக் கிடைத்தது எவ்வளவு பெரிய அதிர்ஷ்டம் என்பதை உன்னுடைய குருநாதனிடம் சொல்லுகிறேன்...!''

இப்படி ஒரே குதூகலத்தோடு சொல்லி விட்டு, ஜமீந்தார் செண்பக வனத்துக்குப் புறப்பட்டுச் சென்றதென்ன? அங்கே அவர் கண்ட காட்சி என்ன?

கோபத்தை யெல்லாம் மனத்துக்குள் அடக்கிக் கொண்டு செண்பக வனத்திலிருந்து சிங்கம்புத்தூருக்குப் புறப்பட்டார் ஜமீந்தார்! 'கோச்' வண்டியில் ஒரே மௌனமாக ஏறும் போது, அவருடைய முகத்தைச் சுப்பையா கூர்ந்து பார்த்தான்! தீபாவளியின் போது ஜமீன் குழந்தைகளுக்காகச் சுப்பையா 'பட்டாஸ்' விடுவதுண்டு! அதிர்வெடிகளிலே சில வெடிகள் வெடிக்காமல் மௌனமாக இருக்கும். மௌனமாக இருக்கின்றனவே என்று பக்கத்திலே போய் விட முடியாது! திடீரென்று வெடிக்கும் அவை! சுப்பையாவுக்கு ஜமீந்தாருடைய நிலை அது போலவே தோன்றியது! அவனும் ஏதும் பேசாமல் மௌனமாகவே வண்டியை ஓட்டினான்!

ஆனால் அந்த விபரீத மௌனம் அதிக நேரம் நீடியாதபடி ஜமீந்தாரே பேச்சைத் தொடங்கினார்.

''சுப்பையா! குமுதவல்லிக்கு எத்தனை பெண்கள் என்று உனக்குத் தெரியுமா?'' என்று கேட்டார் அனவரதர்.

''தெரியும் எசமான்!'' என்றான் சுப்பையா. அதற்கு மேல் பேசவில்லை அவன்.

''எத்தனை?'' என்று கேட்டார் ஜமீந்தார்.

''ஒரு பெண்ணுதான் எசமான்!'' என்றான் சுப்பையா. ஜமீந்தார் அதற்கு மேல் குமுதவல்லியைப் பற்றி எதுவும் பேசாமல் மௌனமாக இருந்தார். 'கோச்' வண்டி வேகமாக ஓடிக் கொண்டிருந்தது.

''சுப்பையா!'' என்றார் சற்று நேரம் கழித்து, ஜமீந்தார்!

''எசமான்!'' என்றான் சுப்பையா.

''வேணுலிங்கம் என்ற கொள்ளைக்காரனை உனக்குத் தெரியுமா?''

''தெரியாது, எசமான்!''

''பார்த்திருக்கிறாயா அவனை?''

''இல்லே எசமான். சுடலையாண்டியைத்தான் பார்த்திருக்கிறேன்!''

''சுடலையாண்டி யார் என்று தெரியுமா உனக்கு?''

''தெரியும் எசமான்!''

''யார்?''

''நம்ப புலிக்கோட்டை எசமானுக்குத் தா பிள்ளைக!''

''எப்படித் தாபிள்ளை (உறவு) என்று தெரியுமா?''

''தெரியாது எசமான்!''

''வேணுலிங்கம் எந்த ஊர்க்காரன் தெரியுமா?''

''தெரியாது எசமான்!'' என்றான் சுப்பையா. ஜமீந்தார் மறுபடியும் மௌனத்தில் ஆழ்ந்தார். வண்டி வேகமாக ஓடியது. சற்று நேரத்தில் மீண்டும் ஜமீந்தார் ''சுப்பையா!'' என்றார்.

''எசமான்!''

''நம்முடைய சித்திரக்காரர் வில்வநாதனுடைய தகப்பனாரை உனக்குத் தெரியுமா?''

''தெரியும் எசமான்!''

''எப்படித் தெரியும்?''

''பார்த்திருக்கேன் எசமான்!''

''எங்கே, எப்போ?''

''ரொம்ப நாளைக்கு முந்திப் பட்டணத்துலே நம்ப பங்களாவிலே வச்சுப் பார்த்திருக்கேன் எசமான்!''

''அவருக்குச் சொந்த ஊர் எது, தெரியுமா...?''

''தெரியாது எசமான்!''

மறுபடியும் பேச்சு நின்றது. வண்டி மட்டும் நிற்காமல் ஓடிக் கொண்டிருந்தது. சுப்பையாவுக்கு நன்றாகத் தெரிந்தது: ஜமீந்தாருடைய மனம் புகைந்து கொண்டிருக்கிறது என்பது அவனுக்குப் புரிந்தது. அது புரியப் புரிய அச்சமும் கவலையும் அதிகரித்தன. செல்வி தன்னிடம் ஒப்படைத்திருந்த பொறுப்பு என்ன என்பதை நினைக்க நினைக்கச் சுப்பையாவுக்கு இதயமே துடித்தது.

'இந்தச் சித்திரக்காரப் பையன் எதற்காக இங்கே வந்தான்? இத்தனை நாளும் கவனிப்பாரில்லாமல் கிடந்த அந்தக் கோவிலின் சுவர்கள் இன்னும் அப்படியே இருந்திருக்கக் கூடாதா?' என்றெல்லாம் மனத்துக்குள் எண்ணிக் கொண்டே சாட்டையைச் சொடுக்கிக் கொண்டிருந்தான் சுப்பையா!

கோச் வண்டி மாளிகையின் வாசலை நெருங்கும்போதே, சுப்பையா மனத்துக்குள்ளே தியானித்துக் கொண்டான்.




**தாயார்:** அவனை ஏண்டா அடிச்சு விட்டு வரே?

**மகன்:** பாரும்மா! அலங்கம்மா தான் இந்த ஊரிலேயே பெரிய வம்புக்காரி என்று பெருமை அடிச்சான். அப்படிச் சொல்லி உன்னை மட்டம் செய்தது எனக்குப் பிடிக்கவில்லே. விட்டேன் ஒரு குத்து!

---

வல்லாளவேலர் இந்தச் சந்தர்ப்பத்தில் அங்கே இருந்தால் புகைகிற நெருப்பு நன்றாகப் பற்றிக்கொண்டு விடுமே என்று அவனுக்குக் கவலை! ஆனால் அந்தக் கவலைக்கு அவசியம் இருக்க வில்லை என்பது சற்று நேரத்திலேயே தெரிய வந்தது. வல்லாள வேலர் அங்கே இராததோடு மட்டுமில்லை. சிங்கம்பூத்தூர் ஜமீனின் அலுவலறையே பூட்டிக் கிடந்தது. சிப்பந்திகள் யாரையும் காணோம். ஒரு வேளை அத்தனை விரைவில் ஜமீந்தார் செண்பக வனத்திலிருந்து திரும்பி விடுவார் என்று யாரும் எதிர்பார்க்கவில்லை போலும் என்று நினைத்தான் சுப்பையா!

குதிரையைக் கொண்டு லாயத்திலே கட்டி விட்டு, மாளிகையின் முற்றத்துக்கு வந்ததும், சுப்பையா திடுக்கிட்டான். சிப்பந்திகள் எல்லாரும் மாளிகையின் உள் அறையில் இருந்து 'கசமுச' என்று பேசிக் கொண்டிருப்பது தெரிந்தது. சுப்பையா அந்த அறைக்குள்ளே நுழைந்த போது வல்லாள வேலரை அங்கு எங்குமே காணோம். வேலைக்காரர்களின் முகத்தைப் பார்த்தான். யாருமே இவனிடம் வந்து பேசாமல் ஒரே கலவரத்தோடு நின்று கொண்டிருந்தார்கள். சுப்பையா மாளிகைக்குள்ளே நடந்தான். விறு விறு என்று ஜமீந்தாரிணியின் அறைக்கு வந்தான். கட்டிலில் ஜமீந்தாரிணிக்கு அருகே அனவரதபுவனபதி ஒரே கவலையோடு உட்கார்ந்திருந்தார். தாமரைச் செல்வி அருகில் நின்று தேனிலே ஏதோ செந்தூரத்தைக் குழைத்துக் கொண்டிருந்தாள்.

(தொடரும்)





# தாடி புராணம்

குட்டி கிருஷ்ணன்



க்ஷவரம் செய்து கொள்ள நாம் பயன்படுத்தும் பிளேடின் நுனி எவ்வளவு மெல்லியதாய் இருக்க வேண்டும் தெரியுமா? சிகரெட் புகையின் ஒரு சின்னஞ் சிறிய துகளை எடுத்துக் கொண்டு அதையும் கூறு போட்டால் பிறகு அதன் கனபரிமாணம் எத்தகையதாக இருக்கும், எண்ணிப் பாருங்கள்! பிளேடின் கூரிய நுனியும் அந்த அளவினதாய்த்தான் இருக்க வேண்டும், நியாயமாக. இந்தியாவில் தற்போது தயாராகும் பிளேடுகள் இவ்வளவு கூர்மையாக இருப்பதில்லை என்பதில் சந்தேகத்துக்கே இடமில்லை. இல்லாவிட்டால் முதல் க்ஷவரத்தின் போதே 'வரக் வரக்'கென்று இழுக்க, கன்னங்கள் இரண்டும் எரிச்சல் கண்டுவிடக்க, நாம் பொறுமை இழந்து பெண்டாட்டியிடம் கோபத்தைக் காட்ட, அவள் நாள் முழுதும் முகத்தைத் தூக்கி வைத்துக் கொள்ள, கடைசியில் அவளைச் சமாதானப் படுத்த வேண்டுமென்று சினிமாவுக்கு அழைத்துப் போக, திரும்பிவந்ததும் லாப நஷ்டக் கணக்குப் பார்க்க, பிறகு ஒன்றுக்குப் பத்தாய் விலை கொடுத்து அயல்நாட்டுப் பிளேடையே கறுப்பு மார்க்கெட்டில் வாங்கியிருந்தால்கூட நாலுரூபாய் மிச்சமாகியிருக்குமே என்று தலையில் அடித்துக் கொள்ள...

எதற்கு இந்தச் சங்கடமெல்லாம் என்று தீர்க்கமாகச் சிந்தித்துத்தான் இன்றுஇங்கிலாந்தில் வெகு சீக்கிரமாகப் பரவி வரும் தாடி மோகம் என்னையும் பற்றிக் கொள்ள அனுமதித்து விடுவது என்ற முடிவுக்கு வந்துள்ளேன்.

எலிஸபெத் மகாராணிகளுக்கும் தாடிகளுக்கும் ரொம்பவும் நெருங்கிய தொடர்பு உண்டு. எலிஸபெத் என்ற பெயர் கொண்ட ஓர் அரசி அரியாசனத்தில் வீற்றிருந்தால் போதும்; உடனே குடிபடைகளில் உள்ள ஆடவர்களெல்லாம் தாடி வளர்க்க ஆரம்பித்து விடுவார்கள். முதலாம் எலிஸபெத் காலத்தில் ரொம்பவும் பிரபலமாக இருந்த தாடி இப்போது இங்கிலாந்தை ஆளும் இரண்டாவது எலிஸபெத் காலத்தில் புனர் ஜென்மம் எடுத்திருக்கிறதாம்!

நிஜத்தைச் சொல்ல வேணுமானால் எனக்குத் தாடி வைத்துக் கொள்ள வேண்டும் என்ற ஆசை இன்று நேற்று ஏற்பட்டதில்லை. அரும்பு மீசை முளைக்கத் தொடங்கிய நாட்களிலிருந்தே ஆரம்பமாகி விட்டது. மிகுந்த பிரயாசைப்பட்டு அதைக் கொஞ்சம் கொஞ்சமாக நெய்யூட்டிச் சீராட்டி வளர்த்தேன்.

இன்றைக்கு அரை மில்லி மீட்டர் வளர்ந்திருக்கிறது. மொத்த நீளம் முக்கால் அங்குலம் என்றெல்லாம் 'டைரி'யில் கணக்காகக் குறித்து வைத்துக் கொள்ளவும் செய்வேன். கல்லூரியில் புதிதாகச் சேர்ந்திருந்த நாட்கள் அவை. கேட்க வேண்டுமா என் பெருமிதத்துக்கு? எதிரே சக மாணவியர்களான சில மெல்லியலார்கள் ஒடிந்து விழுவது போல ஒய்யாரமாகவும் ஒருவரோடொருவர் இழைந்தும் நடந்தவாறே குசுகுசுவென்று ரகசியமாகப் பேசிக் கொண்டு வருவார்கள். அப்போது நான் மெல்ல என் அருமைத் தாடியை ஒரு தடவை தட்டிக் கொடுத்துத் தடவி விட்டுக் கொள்வேன். அரும்புத் தாடியின் அழகைக் கண்டு அந்த அணங்குகளின் கண்கள் அகல விரியும்! ஆகா! நான் அப்போது இந்த உலகத்திலா இருந்தேன்!

இப்படி நான் சந்தோஷமாகக் காலத்தை ஓட்டுவது என் புரொபஸருக்குப் பிடிக்கவில்லை. பாருங்கள், ஒரு நாள் அவர் என்னை ஒரு கேள்வி கேட்டார். ஆமாம், என்னைத்தான்! அதுவும் 'ஆர்கானிக் கெமிஸ்டிரி'யில் ஒரு கேள்வி. இப்படிப்பட்ட ஓர் அசட்டுக் காரியத்தைப் புரொபஸர் – ஒரு பேராசிரியர் - பண்ணலாமா? நீங்களே சொல்லுங்கள்! சிறு வயதில் 'ரிப் வான் விங்கிள்' என்று ஒரு கதை படித்திருப்பீர்களே? அதில் வருகிற கிழவனுடைய தாடியைப் போல ஒரு மைல் நீளத்துக்கு எழுதிக் கொண்டே போகக் கூடிய ஒரு ரசாயன 'பார்முலா'வைப் பற்றிப் புரொபஸர் என்னைக் கேட்டால் நான் என்ன செய்வேன்? என்ன செய்ய முடியும், முக்கால் அங்குலத் தாடியைத் தடவியபடி பேந்தப் பேந்த விழிப்பதைத் தவிர?

''அறிவினாலோ அல்லது தான் பெற்றுள்ள வேறு பல திறமைகளினாலோ பிரசித்தி பெறச் சிலரால் முடிவதில்லை. அதனால் வேறு பல சில்லறை விஷயங்களின் மூலமாய், சிரமப் படாமல், குறுக்கு வழியில் ஒரு தனித்தன்மையைப் பெற முயல்வார்கள். தாடி வளர்ப்பது அத்தகைய யுக்திகளுள் ஒன்று.'' கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லத் தெரியாமல் நான் உச்சி முகட்டைப் பார்த்துக் கொண்டிருக்கிற நேரத்தில் அந்தப் பேராசிரியர் இப்படிச் சொன்னால் வகுப்பில் எல்லாரும் 'கொல்'லென்று சிரிப்பார்களா, மாட்டார்களா?



அணங்குகள் முன் அருமைத்தாடியை...

அடுத்த நாளே, நான் தாடியை இரண்டு சொட்டுக் கண்ணீர் சிந்தியபடியே ரேஸரினால் வழித்து எறிந்து விட்டேன்! இதன் பிறகு என் தாடித் தாபத்தைத் தணித்துக் கொள்ளக் கல்லூரிக் காம்பவுண்டைத் தாண்டி அப்பால் போனதும் ஒரு பொய்த் தாடியை ஒட்ட வைத்துக் கொண்டால் என்ன என்ற அபாரமான யோசனை என் மூளையில் உதயமாயிற்று. அன்று மாலை ஒரு நாடகத்தைப் பார்க்கப் போய், மாறு வேஷத்தில் உலவும் கதாநாயகன் பேசும் போதெல்லாம் தாடியும் மீசையும் பறந்து சென்று மானத்தை வாங்கி விடுவதாய்ப் பயமுறுத்துவதையும், வினாடிக் கொருமுறை அந்த 'ஹீரோ' முகவாயில் ஒரு விரலும் மேல் உதட்டில் ஒரு விரலுமாய் வைத்து அழுத்தி அவற்றை ஒட்ட வைத்தபடியே பேச முற்பட்டு அவஸ்தைப் படுவதையும் கண்டபிறகு இந்த மகத்தான யோசனை என்னிடமிருந்து விடை பெற்றுக் கொண்டு தலை தெறிக்க ஓடி விட்டது!

இது ஒருபுறமிருக்க, தாடி வளர்த்துக் கொள்ள வேண்டும் என்ற அடக்க முடியாத ஆசை என் உள்ளத்தில் விதை யூன்றியது எப்போது என்பதை நீங்கள் அறிந்து கொள்ள வேண்டாமா?



சாம்பிராணிப் புகையேத்தி...

சிறுவயதில் எனக்குத் தெனாலி ராமன் கதை கேட்பதில் ரொம்பப் பிரியம். அதிலும் குதிரையைப் பட்டினி போட்டு விட்டு ராஜாவை லாயத்துக்குள் ஜன்னல் வழியாக எட்டிப் பார்க்கச் சொன்னானே தெனாலி ராமன், அந்தக் கட்டத்தைக் கேட்கக் கேட்க எனக்குத் தெவிட்டாது. என் தாத்தா அதை ரொம்பவும் சுவாரஸ்யமாகச் சொல்லுவார். புல் என்று நினைத்துக்கொண்டு பசியில் வாடும் குதிரை ராஜாவின் தாடியைப் புசிக்க எண்ணிப் பற்றி இழுக்க, ராஜா, 'தாடி! ஐயோ தாடி!'' என்று 'லபோ லபோ' வென்று அடித்துக் கொண்டு அலற, பக்கத்தில் பாடம் கற்பித்து விட்டோம் என்கிற ஆனந்தத்தில் தெனாலிராமன் வயிற்றை இறுகக் கட்டிக் கொண்டு விழுந்து விழுந்து சிரிக்க, இந்தக் கதையைக் கேட்டு விட்டு நான், ''நீதான் ராஜாவாம் நான்தான் குதிரையாம்'' என்று கூறித் தாத்தாவின் குடுமியைப் பிடித்து உலுக்கி எடுத்து விடுவேன். ''இது பின் குடுமி, அது முன் குடுமி'' என்பார் தாத்தா என் சேஷ்டையைத் தாங்க முடியாமல் தாங்கிக் கொண்டு. ''மறுபடியும் சொல்லு தாத்தா, அந்தத் தாடிக் கதையை'' என்று அலுக்காமல் கேட்பேன் நான். அவரும் சலிக்காமல் சொல்லுவார்.

இந்தத் தாடிப் பிரேமை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்து வந்தது. அதற்கு உரமிட்டு மேலும் செழிக்கச் செய்தார், என் தகப்பனார் எனக்காக ஏற்பாடு பண்ணியிருந்த ஒரு டியூஷன் உபாத்தியாயர். அவருக்குத் தேங்காய் நார் 'பிரஷ்' போல எப்போதும் இரண்டு நாள் தாடி இருந்து கொண்டே இருக்கும். இதன் தாத்பர்யத்தை நானும் உணராமலே காலத்தை ஓட்டிக் கொண்டு வந்தேன். ஒரு நாளைக்கு ராத்திரி ரொம்ப நாழியாகி விட்டதனாலே, சாப்பிட்டு விட்டுப் போகலாம் என்று என் அப்பா அழைக்க, 'டியூஷன்' வாத்தியாரும் அதற்குச் சம்மதித்தார். என் அம்மா விழுது நெய்யாகப் பரிமாற, ஆறிப்போன ரசம் சாதத்தில் அதைச் சேர்த்துப் பிசைந்து சாப்பிட்டார் வாத்தியார். கை அலம்பும் போது விரல்களில் ஒட்டிக் கொண்டிருந்த நெய்யை நன்றாய்த் தேய்த்துக் கழுவி நீக்க 'பஸ்ட் கிளாஸ் பிரஷ்' ஆகப் பயன்பட்டது அவர் தாடி. அன்றைய தினத்திலிருந்து 'தாடியினால் ஆய பயன் என் கொல்?' என்பதாக யாராவது என்னைக்கேட்டால் பளிச்சென்று இந்தச் சம்பவத்தை எடுத்து விளம்புவேன்!

இதைத் தவிர தாடியினால் இன்னுமொரு பயனும் உண்டு என்பதாக ஒரு பழமொழி கட்டிக் காட்டுகிறது. தாடி பற்றி எரியும்போது பீடி கொளுத்த நெருப்புக் கேட்டானாம் என்பார்கள். ஆனால் நன்றாக முகக்ஷவரம் செய்து கொண்டபிறகும் பீடி கொளுத்துவதற்காகவே 'தாடி' என்று கேட்ட ஒருவனையும் எனக்குத் தெரியும். அவன் 'தாடி' என்று கேட்டது நெருப்புப் பெட்டியை. தன் மனைவியை நோக்கித்தான் கேட்டான். அவளுக்கோ அவன் பீடி பிடிப்பது பிடிக்கவேயில்லை. தன் பிறந்த வீட்டின் அந்தஸ்துக்கு ஏற்பத் தன் கணவன் குறைந்த பட்சம் ஒரு ஸ்டேட் எக்ஸ்பிரஸாவது புகைக்க வில்லையானால் தன் அப்பாவுக்குத்தான் அவமானம்

என்று கருதினானோ என்னவோ ? எனவே, அவன் மோடிசெய்து மாடி ஏற, இங்கே வாடி என்று அவன் அதிகாரம்பண்ண, அந்த 'வேடி' தான் உங்கள் செடி இல்லை என்று கோடி காட்ட....ஏதோ பழைய குப்பைப் பாட்டை ஞாபகப் படுத்துவதால் இத்துடன் நிறுத்தி விடுகிறேன்.



கம்பீரமாய் இருக்க ஒரு பைப்...

அது எப்படிப் போனாலும் பிடி கொளுத்தத் தாடி உபயோகப்படும் என்பது தெளிவு. ஆனால் எல்லாத் தாடிகளும் இதற்குச் சரிப்பட்டு வரும் என்றும் கருதுவதற்கில்லை. குறைந்த பட்சம் ஒரு தாகூர் தாடியாவது இதற்கு அவசியத் தேவை. ஏனென்றால் பிடி கொளுத்துவது என்பது ஏதோ ஒரு தீபத்தை ஏற்றுவது போன்ற இலகுவான காரியமல்ல. அதில் இரண்டு அம்சங்கள் உண்டு. ஒன்று நெருப்பைப் பிடியின் நுனியில் எடுத்துப் போக வேண்டும்; இரண்டாவது வாயினால் புகையை உறிஞ்ச வேண்டும். இரண்டு காரியங்களும் ஒரே சமயத்தில் நடக்க வேண்டும். நீளமான தாடியாக இருந்து நுனியில் தீப் பிடித்துக்கொண்டால், அடிப் பாகத்தில் அதைப் பற்றி மேலே வளைத்து எடுத்துப் போய் வாயில் உள்ள பிடியைப் பற்ற வைப்பது எளிதாய் இருக்கும். ஆனால் நவநாகரிகமான மோஸ்தரில் சின்னதாக, முகவாயோடு ஒட்டியது போலத் தாடி அமைந்திருந்தால் பிடியைப் பற்ற வைப்பது சுலபமானதாய் இராது. வயிறு வேணுமானால் பற்றி எரியலாம், தாடி பற்றி போய் விட்டதே என்ற ஆத்திரத்தில்.



ஆட்டுக்கடா தூதன்....

ஆனால் தாடிக்கும் பிடிக்கும் இந்தக் காலத்தில் அவ்வளவு பொருத்தமில்லைதான். தாடி வைத்துக் கொண்டிருப்பவர்கள் ஒரு பைப்பை வாயில் வைத்துப் பற்களால் கடித்துக் கொண்டிருந்தால்தான் கம்பீரமாய் இருக்கும்.

கம்பீரமாய்த் தோற்றமளிப்பதற்கென்றே பலர் தாடி வைத்துக் கொள்ளுகிறார்கள் என்பதும் உண்மை. உதாரணமாகச் சமீபத்திய தேர்தல் நாடகம் ஒன்றினைக் குறிப்பிடலாம். 'தேர்தல் நாடகம்' என்னும்போது தேர்தல் 'குல்மால்'களைச் சொல்லவில்லை. தேர்தல் பிரசாரத்துக்காகப் போடப்பட்ட நாடகங்களைப் பற்றித்தான் கூறுகிறேன். அவற்றுள் ஒன்றிற்கு விந்தையான பெயர் சூட்டியிருந்தார்கள். 'விருதை வீரரும் வெண் தாடி வேந்தரும்' என்பதுதான் அந்த நாடகத்தின் பெயர். இதிலிருந்து தலைவர்கள் எவ்வளவு அறிவாளிகளானாலும் கெட்டிக்காரர்களானாலும் சரி, மக்களைக் கவருவதென்பது தனி விஷயம், அதற்கு அந்தத் தலைவர்கள் அளிக்கும் வெளித் தோற்றமும் பெரிதும் துணை புரிகிறது என்பதை அறியலாம். இதை இல்லை என்று யாராவது மறுத்தால் அவர்கள் முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைக்கிறார்கள் என்றுதான் அர்த்தம். தாடி இல்லாத ஒரு ஷாவையும், லிங்கனையும், தாகூரையும் நம் நாட்டின் பண்டைக் காலத்திய முனி சிரேஷ்டர்களையும் கற்பனை செய்து பாருங்கள். அவர்களிடம் உங்களுக்குள்ள மதிப்பு பாதிக்கு மேல் குறைந்து போய் விடுவதை நன்கு உணர்வீர்கள்.

பணத்தின் மதிப்பு நாளுக்கு நாள் குறைந்து கொண்டே வரும் இந்நாளில் தாடி வளர்க்கத் தான் பிரியப்படுவதன் நோக்கம் க்ஷவரத்துக்காகும் செலவை மிச்சப்படுத்துவதுதான் என்று யாரேனும் சொன்னால் அதை நம்பவே நம்பாதீர்கள். ஏனென்றால் தாடிவளர்க்க ஆகும் செலவுக்ஷவரச்செலவைக் காட்டிலும் அதிகமாகவே இருக்கும். அது சிக்குப் பிடிக்காமல் தினம் தைலம் தடவி, சீவி விட்டு, வாரத்துக்கு இரண்டு முறையாவது 'ஷாம்பூ' போட்டு, பிறகு சாம்பராணிப் புகை ஏற்றி, அவ்வப்போது கைதேர்ந்த சிகைஅலங்கார...இல்லை, தாடி அலங்கார நிபுணரிடம் போய் அதை அளவாகவும் அழகாகவும் வெட்டி விட்டுக்கொண்டு வராவிட்டால் பேன் சேர்ந்துவிடும்.

தாடியில் பேன் குடி கொள்ளத் தொடங்கினால் ஆதி காலத்தில் ரோமாபுரியில் வாழ்ந்தவர்களின் சூதாட்டத்தைத் தாடியுள்ள தமிழர்களும் விளையாடலாம். இரண்டு தாடி நபர்கள் எட்ட நின்று கொண்டு ஒருவர் மாற்றி ஒருவர் மெல்லத் தங்கள் தாடியைத் தட்ட வேண்டியது. ஒரு தாடியிலிருந்துமற்றொரு தாடிக்குப் பேன் பாயவேண்டும். யார் வளர்க்கும் பேன் அதிக தூரம் பாய்கிறதோ அவரே வெற்றி



**பின்னே** : நான் சொல்லுகிறேன் கேளு. நன்னு இரண்டு பக்கங்களை யும் கேட்டுவிட்டுத் தான் பிறகு முடிவைச் சொல்ல வேண்டும்.

**மாமியார்** : ஏண்டாப்பா! ஏதே னும், சண்டையை விலைக்கு வாங்கி இருக்காளா ?

**பின்னே** : இல்லே, இல்லே ஒரு கிராமபோன் ரிகார்டை விலைக்கு வாங்க வேண்டியிருக்கு அதைப் பற்றிச் சொல்லிண்டிருக்கேன்!



"சார், நான் சொல்றேன்னு கோவிச்சுக்கப்படாது. குழந்தைகள் ஜாஸ்தி பெற்றுக் கொள்ளக் கூடாது. கணவன் மனைவி, ஒரு குழந்தை இருந்தால் சுச்திதமா இருக்கும்."

"எதற்கு ?"

"பேபி டாக்ஸியில் போவதற்கு!"

பெற்றவர். அவரவர்கள் தங்கள் சக்திக்குத் தக்கபடி ஐந்து, பத்து, நூறு, ஆயிரம் என்று பந்தயம் கட்டலாம். ஒன்றுமில்லா விட்டால் ஒரு தாடிப் பசந்து மாம்பழத்தை யாவது பணயம் வைக்கலாம்.

அதற்குத் தாடிப்பசந்து என்று பெயர் எப்படி வந்தது? தாடிக்காரர்களுக்கு ரொம் பப் 'பசந்த்' (ஹிந்தியில் பசந்த் என்றால் பிடித்தமானது என்று பொருள்) என்பதால் தாடிப் பசந்து ஆயிற்று? அப்படியானால் க்ஷவரம் செய்து கொண்டு அதைச் சாப்பிட் டால் ருசிக்காதா என்ன? மாம்பழத்துக்குப் பெயர் வைப்பதிலும் எவ்வளவு பட்சபாதம் பாருங்கள்!

இத்தகைய பட்சபாதத்தை மீசை அல்லது தாடி முளைக்காதவர்களிடம் சிலர் காட்டுவ துண்டு. இதைப் பற்றி ஒரு ரசமான கதை யைச் சமீபத்தில் படித்தேன்.

ஒரு நாட்டு அரசன் எதிரிமன்னனிடம் ஓர் இளைஞனைத் தூது அனுப்பினானும். காளைப் பருவத்தை எட்டிப் பார்த்துக் கொண்டிருந்த அந்த வாலிபனிடம் அரசன் ரொம்பவும் மதிப்பு வைத்திருந்தான். தாடி முளைக்காத யுவனாகியபோதிலும் அவனுடைய திறமையில் அபார நம்பிக்கை இருந்தது அவ்வரசனுக்கு. அதோடு, எதிரியிடம் என்ன பேச வேண்டும் எப்படிப் பேச வேண்டும் என்றெல்லாம் படித் துப் படித்துச் சொல்லியிருந்தான். ரொம்பக் கெட்டிக்காரனான தூதனை எதிரியிடம் ஏவி விட்டிருப்பதால் நம் காரியம் ஜெயம்தான் என்று மனப்பால் குடித்தான் அரசன். ஆனால் எதிரியோ தூதனை லட்சியம் செய்யவேயில்லை. "தாடி முளைக்காத பையனைத் தவிர வேறு யாருமே அகப்படவில்லையா உன் அரச னுக்கு?" என்று கேட்டான் ஏளனமாக.

வாலிபன் வெகுண்டு எழுந்தான். "தாடிக்கு அவ்வளவு முக்கியத்துவம் நீங்கள் கொடுப்பீர்கள் என்பது தெரிந்திருந்தால் எங்கள் அரசர் ஓர் ஆட்டுக்கடாவையே தூத னாக அனுப்பி வைத்திருப்பார் உங்களிடம்!" என்றான்.

உடனே எதிரி மன்னனுடைய தாடி துடித் ததாம். சீறினானும், பொங்கினானும், படை படுத்தானும், படை புறப்பட்டதாம். இரு தரப்பிலும் பலத்த உயிர்ச் சேதமாம்.

ஆகக் கூடி தாடியினால் (அல்லது தாடி யின்மையினால் என்றும் சொல்லலாம்) இரு தேசங்களுக்கிடையில் மகத்தான யுத்தமே நடந்திருக்கிறது.

இப்படிப்பட்ட மகிமை வாய்ந்த தாடியைப் பெண்டாட்டி முழுகாமல் இருக்கும் போது கூட இந்தக் காலத்தில் போற்றி வளர்க்க முடிவதில்லை. ஒரே ஒரு நாளைக்கு க்ஷவரம் பண்ணிக் கொள்ளாமல் ஆபீஸுக்குப்போனால் போதும், "ஏனய்யா? உடம்பு சரியில்லைன்னு லீவு போட்டுத் தொலையறதுதானே? இழ வெடுக்க வந்தவன் போல் நிற்கிறீரே" என்று இரைகிறார் மானேஜர்.

"ஐயய்யோ! ஆபீஸுக்கு லேட் ஆயிடுத்தே! அடியே! உன்னே என்ன குப்பை கொட்டிண் டிருக்கே! சீக்கிரமா வெந்நீர் கொண்டு வாயேன், க்ஷவரம் பண்ணிக்க!"

# பிரெஞ்சு காபியில் தலை சிறந்தது



Brooke Bond
Café BRAND
French coffee
NETT WEIGHT WHEN PACKED 100 gms.
BROOKE BOND INDIA PRIVATE LIMITED
COIMBATORE CODE NO. C.L.

ருசிக்கச் சிறந்த வகையில் கலவை செய்த ப்ருக் பாண்ட் கபே பிராண்டு பிரெஞ்சு காபி இப்பொழுது எங்கும் கிடைக்கும். நறுமணத்தையும் சுவையையும் காக்க இவை ஸெலபோன் பைகளில் விற்பனை செய்யப்படுகின்றன. பிரெஞ்சு காபியில் நல்ல மணம், சுவை இவற்றைப் பெற ப்ருக் பாண்ட் காபியையே விரும்பிக் கேளுங்கள். இதுவே நீங்கள் கொடுக்கும் பணத்திற்குச் சிறந்தது.

## ப்ருக் பாண்ட்

# கபே பிராண்டு பிரெஞ்சு காபி

JWTBB 404

## இளைஞர்களின் கேள்வி-பதில்

1. கறுப்புக் கண்டம் என்று எதற்குப்பெயர்?
2. காகிதம் சுற்றப்பட்ட எந்த மிட்டாய்களுக்கு ருசி அதிகம்?

விடைகள்:

1. ஆப்பிரிக்கா
2. நீபா லாக்டோ பான் பான் • நீபா கிரீம் மில்க் டாப்பி
   நீபா சூப்பர் பட்டர் ஸ்காட்ச் • நீபா லெமன் பார்லி கோகனட்ஸ்

நிஜாம் ஷுகர் பாக்டரி லிமிடெட், ஹைதராபாத் (ஆந்திர பிரதேசம்).

NSZ-1311 ATH

---

# 'அனஸின்'

நான்கு மருந்துகள் அடங்கியுள்ளதால்

## வலி நிவாரணத்திற்கு மிகச் சிறந்தது

1. 'அனஸின்', அதிவிரைவில் வலிகளுக்கு சமனமூட்டுகிறது. ஒரு டாக்டர் குறித்துக் கொடுக்கும் பாதுகாப்பான மருந்துக்கு ஒப்பாக இதில் விஞ்ஞான முறையில் நான்கு மருந்துகள் ஒன்று கலந்துள்ளதால் 'அனஸின்' — தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி, தசைவலி ஆகியவற்றிலிருந்து அதி விரைவில் பூரண நிவாரணம் அளிக்கிறது.

2. 'அனஸின்' பதட்டத்தைப் போக்கி சமனமளிக்கிறது. அமைதியிழந்து பதட்டப்படும் வேதனையை அடியோடு அகற்றி இதமுடன் இளைப்பாறிய பலனை உங்களுக்கு அளிப்பது 'அனஸின்'.

3. 'அனஸின்' சோர்வை விரட்டுகிறது. வலிகளுடன் அடிக்கடி தோன்றும் சோர்வை வென்றுவிடுவது 'அனஸின்'

4. 'அனஸின்' ஜுரத்தைத் தணிக்கிறது. 'அனஸினில்' கொயினா கலந்திருப்பதால், ஜுர வேகத்தைக் கட்டுப்படுத்த மிகவும் சிறந்ததாக இருக்கிறது






★ செல்லோபோன் தாள்களுள் சுகாதார முறையில் பாக் செய்யப்பட்டு கிடைக்கிறது இரு வில்லைகள் 13 காசுதான்

Registered User: GEOFFREY MANNERS & CO. LIMITED

TAM. 2-44 (A)

---

# பர்கோ-லாக்ஸ்



## இனிப்பான மலமிளக்கி வில்லைகள்

மலச்சிக்கல் பித்தம் வாயு நிவாரணி



DAWN & COMPANY (P) LTD, BOMBAY-2



# காணாமற் போன கடிதங்கள்

கொக்கி

சென்னை முதலமைச்சர் திரு காமராசருக்கு, ஒரு கத்தரிக்காய் எழுதிக்கொண்டது:—
கனம் அமைச்சருக்கு, கத்தரிக்காய் வணக்கம்!

'ஊட்டிக்கு 'காம்ப்' போன இடத்திலே நீங்கள் மந்திரி கக்கனுர் சகிதம் திடீரென்று காய்கறி மார்க்கெட்டுக்குள் புகுந்து, காய்கறிகளைப் பார்வை யிட்டதாகக் கேள்விப்பட்டேன். சென்னையில் சில தினங்களுக்கு முன், கொத்தவால் சாவடி மார்க்கெட்டுக்கு மந்திரி மஜீது திடீர்த் தோற்றம் அளித்து இங்குள்ள காய்கறிகளின் நிலைமையைப் பார்வையிட்ட சங்கதி உங்களுக்கும் தெரிந்திருக்குமென்று நம்புகிறேன். அமைச்சர்கள் காய்கறிகளாகிய எங்கள் பால் சிரத்தை கொண்டு, எங்களை வந்து பார்த்ததற்காக என் சார்பாகவும், மற்றும் வெண்டைக்காய் கண்டைக்காய் ஆகிய மற்றக் காய்கறிகளின் சார்பாகவும் நன்றி தெரிவித்துக் கொள்ளுகிறேன். எங்கள் நன்றியை நீங்களும், கக்கன், மஜீது ஆகிய சகாக்களும் சமமாகக் கிலோகிராம் கணக்கில் பகிர்ந்து கொள்ள வேண்டுமென்பது கத்தரிக்காயாகிய என் அவா.



''இந்த நன்றியெல்லாம் எங்களுக்கு எதற்கு?'' என்று நீங்கள் வியக்கிறீர்களல்லவா? இதோ, காரணத்தைச் சொல்லி விடுகிறேன். நீங்களாவது, மார்க்கெட்டுக்குள் வந்து காய்கறிகளாகிய எங்களைக் கண்ணுல் பார்த்ததற்காகத்தான்.

சமீப காலமாக, அவசியப் பண்டங்களின் விலைவாசிகள் ஏகமாக உயர்ந்து விட்டன. தங்களுக்குத் தெரிந்திருக்கக் கூடுமென்று நம்புகிறேன். இதன் விளைவாக, காய்கறிகளின் விலைகளைக் கேட்டு அவற்றைப் பொது மக்கள் கண்ணுல் கூடப் பார்க்க மறுத்து வருகிறார்கள். ஏன் — காய்கறிகளைப் பற்றி நினைப்பதைக் கூட அறவே மறந்து விட்டார்களோ என்று நினைக்கிறேன்.

உண்மையில், விலைவாசி ஏற்றம் காரணமாகப் பொது ஜனங்கள் எங்களைக் கண்ணுல் கூடப் பார்க்கவே மறுக்கிறார்கள் என்பதை நான் நிரூபிக்கவும் தயார். மார்க்கெட்டுக்கு வெளியே ஜனங்கள் என்ன பேசிக்கொள்கிறார்கள் என்று போய்ப் பார்த்தால் நான் சொல்வது விளங்கும். ''நான் முட்டைகோசைப் பார்த்துப் பல வருடங்களாகின்றன'' என்றும், ''நான் தக்காளிப் பழத்தைப் பார்த்துப் பல மாதங்களாகின்றன'' என்றும் பேசிக் கொள்வதைக் கேட்கலாம்.

எனவே, பொது ஜனங்கள் எங்களைக் கண் கொண்டு பார்க்க மறுத்து வரும் சமயத்தில் மந்திரிகளாகிய நீங்களாவது எங்களிடம் அநுதாபம் கொண்டு, வந்து பார்வையிட்டதற்காக மிக மிக நன்றி. என் அருகிலுள்ள பொல்லாச் கண்டைக்காய், காதோடு ''காய்கறி விலை ஏற்ற நிலைமையில் மார்க்கெட்டுகளுக்கு மந்திரிகளும் காங்கிரஸ்காரர்களும் தான் வர முடியும்; சாதாரண ஜனங்கள் வர முடியாது'' என்று கூறுகிறது.

இந்தக் கண்டைக்காயின் கூற்றுக்களை நீங்கள் லட்சியம் செய்ய மாட்டீர்களென்று நம்புகிறேன்.

கத்தரிக்காய்

லோக சபையில் தீப்பெட்டியைக் காட்டிய நிதி மந்திரி மொரார்ஜி தேசாய்க்கு, ஒரு குடித்தனக்காரர் எழுதியது:—

பாமர மக்களைப் பாதிக்கும் வகையில், அரசாங்க வரிக் கொள்கையின் விளைவாகத் தீப்பெட்டிகளின் விலை உயர்ந்து விட்டதை ஓர் அங்கத்தினர் சுட்டிக் காட்டியதும், நீங்கள் அதற்குப் பதிலளித்த விதம் மிக ரசமானதாயிருந்தது! சட்டென்று சட்டைப் பையில் கையைவிட்டு, ஒரு தீப்பெட்டியைச் சபையினருக்குக் காட்டி, ''சற்று முன், என் சேவகனைக் கடைக்கு அனுப்பி ஒரு தீப்பெட்டி வாங்கி வரச் சொன்னேன். கனம் அங்கத்தினர் கூறியது போல் இதன் விலை உயரவில்லை. ஆறு ந. பைசாவுக்கு அவன் இதை வாங்கி வந்தான்'' என்று கூறியதையே இங்கு குறிப்பிடுகிறேன்.

தீப்பெட்டி விலை உயர்வைப் பற்றிப் புகார் எழுந்ததால், கலபமாக நீங்கள் ஒரு தீப்பெட்டியைக் கொண்டு வரச் செய்து அதைச் சபை முன் காட்டி விட்டீர்கள். ஆனல், இந்த வழக்கத்தைப் பின் பற்றி விட்டு வாடகை உயர்வு பற்றி விவாதம் நடக்கும் போது, ஒரு வீட்டைத் தூக்கிக் கொண்டு வந்து சபையில் காட்டினுல்தான் அரசாங்கத்தின் சொல்லில் நம்பிக்கை பிறக்கும். சீக்கிரமே சபையில் கொண்டு வந்து காட்ட இன்னும் பல பலசரக்குக் கடைச் சாமான்களையும் வாங்கித் தயாராக வைத்துக் கொள்ளுங்கள்.



குடித்தனக்காரர்

படித்துப்  பாருங்கள்

## கடோபநிஷத்து

**ம**ரணத்துக்குப் பின் ஆத்மா என்னவாகிறது என்று மரணதேவனையே கேட்டான் அந்தணச் சிறுவன் நசிகேதன். அப்போது தர்மராஜன் அவனுக்கு அளித்த உபதேசமே கட உபநிஷதம். 'ஆத்மா பிறப்பதென்பதே இல்லை; எனவே அது இறப்பதும் கிடையாது. உடல் அழியும்போதும் அது அழியாமல் நிற்கிறது. உடலை உயிர்ப்பிக்கும் இந்த ஆத்மா பரம்பொருளே ஆகும். ஒரே நெருப்பானது, தான் பற்றிக் கொண்டுள்ள பொருட்களின் வடிவத்துக்கேற்பப் பல உருவில் தோன்றுவது போல் ஒன்றேயான பரம்பொருளே வெவ்வேறு ஜீவராசிகளாகத் தோன்றுகிறது. எங்கும் உள்ள வெய்யில் போன்ற பரம்பொருளின் ஒளியைத் தடை செய்து மாயை பரப்பும் நிழல்களே ஜீவர்கள். மாயை என்னும் தடையை ஞானத்தினால் நீக்கினால், வெய்யிலும் நிழலும் ஒன்றுவது போல—நீரில் ஊற்றிய நீர் அதனுடன் இரண்டறக் கலப்பதுபோல்—ஜீவாத்மா பரமாத்மாவில் ஒன்றி விடும். இந்த ஐக்கிய உணர்வு பெறாதவர்களே மரணத்துக்குப் பின் தங்கள் செயல்களைப் பொறுத்து மீண்டும் மானுடராகவோ தாவரமாகவோ பிறக்கின்றனர். இந்தப் பிறப்புச் சுழலிலிருந்து விடுபட்டு அழிவிலாச் சாந்தி பெற வேண்டுமானால், துர்நடத்தையிலிருந்து விலகி, ஆசைகள் யாவற்றையும் துறந்து, புலன்களை அடக்கி வெளி வியாபாரங்களிலிருந்து மீட்டு, மனத்தை ஒருமுகப்படுத்த வேண்டும்.' இதுவே யமதர்மராஜனின் உபதேசம்.

இந்தப் பரம நிலையை அடைவதற்கான உபாயம் மிகவும் கடினமானது. கத்தி முனை மேல் நடப்பதற்கொப்பானது என்று இயமன் வாயிலாகத் தெரிவிக்கும் இந்த உபநிஷதம் மனிதனின் மாண்பில் பெரு நம்பிக்கை வைத்து அதனையும் அவன் சாதிக்க முடியும் என்று தெம்பூட்டுகிறது; 'விழித்தெழுங்கள்; மேலோரை அடைந்து இந்தச் சாதனையைத் தொடங்குங்கள்' என்று நம்மைத் தட்டி எழுப்புகிறது.

ஓர் எளிய அழகிய கதையைப் பின்னணியாகக் கொண்ட இந்த உபநிஷதத்தில் தெள்ளிய பல உவமைகள் சத்தியத் தத்துவத்தை விண்டு கூறுகின்றன. இந்நூலின் கருத்துக்கள் மட்டுமின்றிச் சொற்றொடர்களும் கூட கீதாசாரியனால் திருநாவால் திரும்ப உரைக்கப்பட்டிருப்பதே இதன் பெருமையைச் சொல்லப் போதுமானது. எனினும் இந்த அற்புதமான நூலில் நெருடலான பல இடங்கள் உண்டு. மந்திரத்துக்கு மந்திரம் உள்ள கருத்துத் தொடர்பு புரிபடாத இடங்களுமுண்டு. இலக்கணம் வரையறை பெறுமுன்பே தோன்றிய இலக்கியமாதலால் மொழியிலும் சிக்கல்கள் உண்டு. கல்லைக் கனிவித்துச் சாறு பிழித்து தருவது போல், இச்சிறு புத்தகத்தில் ராஜாஜி அவர்கள் கடஉபநிஷதத்தைத் தமக்கே உரிய எளிய தமிழ் நடையில் நமக்கு வழங்குகிறார்கள். பிராசீனமான உரைகளையே பெரும்பாலும் பின்பற்றினாலும் ஆங்காங்கு புதுப் புதுக் கோணங்களில் இந்த இரத்தினத்தைக் கண்டு அவர் கூறும் விளக்கங்களும் மூல நூலின் மகிமைக்குப் பொருந்தியனவாகவே உள்ளன. உள்ளத்தைச் சம நிலையில் வைத்துப் பழகிய ஒரு ராஜரிஷி கூறும் பொருள் விளக்கமாகவே துலங்குகிறது நூல்.

ஆன்மீக வளர்ச்சிக்கு அரும் தொண்டாற்றி வரும் பவன்ஸ் ரத்ந பீடத்தினர் தங்கள் தமிழ்ப் பகுதியைத் தொடங்குவதற்காகத் தேர்ந்தெடுத்துள்ள இந்நூல் அவர்களது நோக்கம் நிறைவேறுவதற்கு ஒரு சுபசூசகமாகும்.

வெளியீடு: பாரதிய வித்யா பவன் (சென்னைக் கிளை), 83, கோபதி நாராயண சுவாமி சாலை, சென்னை-17; விலை: ரூ. 1.25.

## Buyers' Guide (1962-63)

**நா**ளுக்கு நாள் பல தொழில்கள் நாட்டில் தோன்றிக் கொண்டு வருகின்றன. பழைய தொழில்கள் விஸ்தரிக்கப்படுகின்றன. புதுத் தொழில்கள் ஆரம்பிக்கப்படுகின்றன. கூட்டுறவு முறையில் பல துறைகளில் தொழிற்சாலைகள் நிறுவப்பட்டு வருகின்றன. முக்கியமாக, சர்க்கரை ஆலைகளும், நூற்பு ஆலைகளும், கிராமக் கைத்தொழிற்சாலைகளும் கூட்டுறவு முறையில் விருத்தியடைந்து வருகின்றன. இந்தத் தொழில்களுக்கு, ஆரம்ப நிலையிலும், பின்னரும், பல உப பொருள்களும் அவசியப் பொருள்களும் அடிக்கடி தேவைப்படுகின்றன. இந்தப்பொருள்கள் நாட்டில் எங்கே கிடைக்கின்றன, யார் உற்பத்தி செய்கின்றனர், யார் விநியோகிக்கின்றனர் என்ற விவரங்கள் மிகவும் அவசியமானவை. இவை தெரிந்தால்தான் குறித்த பொருளைக் குறித்த காலத்தில் தருவித்துக் கொள்ள ஏற்பாடுகள் செய்து கொண்டு தொழிலைத் திறம்பட நடத்த முடியும். இந்த வகையில் அனுகூலமாக இருக்க இந்தப் புத்தகம் பெரிதும் உதவக் கூடும். இந்நூலைத் தொகுத்து வெளியிட்ட திரு வைபத் கே. ஷிண்டே மகாராஷ்டிர ராஜ்யத்தைச் சேர்ந்த ஸாங்க்லியில் சர்க்கரை ஆலைத் தொழிலில் அனுபவமுள்ளவர். இவ்வனுபவத்தை முன்விட்டு முக்கியமாகச் சர்க்கரை ஆலைகளுக்குத் தேவைப்படும் பொருள்கள் எங்கு கிடைக்கும் என்ற விவரங்களை இப் புத்தகத்தில் தொகுத்திருந்தாலும் இதர தொழில்களில் பொருள்களை வாங்குபவர்களுக்கும் இது உபயோகமாக இருக்கும். சாதாரணமாக ஒரு நவீனத் தொழிற்சாலையில் தேவைப்படும் பல பொருள்களைச் சுமார் அறுபது இனங்களாகப் பாகுபாடு செய்து, ஒவ்வோர் இனமும் நாட்டில்

எந்த வியாபாரி, அல்லது உற்பத்தியாளரிடம் கிடைக்கும் என்று விலாசத்துடன் கொடுக்கப் பட்டிருக்கிறது. இவ் விவரங்கள் முற்றிலும் விரிவானவை என்று சொல்ல முடியாது.

நாட்டிலுள்ள சர்க்கரை ஆலைகளின் ராஜ்ய வாரி ஞாபிதாவினுல் புத்தகத்தின் சிறப்பு அதிகரிக்கவில்லையென்றாலும் கடைசிப் பகுதியில் சேர்க்கப்பட்டுள்ள மெட்ரிக் முறை வாய்பாடுகள் இனசரி அலுவல்களைக் கவனிக்க வேண்டிய தொழிற்சாலை நிர்வாகஸ்தர்களுக்கு மிகவும் உபயோகமாக இருக்கும்.

Publishers: Sampath K. Shinde Shet Kari Sahakari Sakhar Karkhana Ltd. Sangli, Maharastra State. Price Rs. 15.

## செல்வம் கொழிக்கும் சீமை

அயல் நாடுகளைப் பற்றிய பல விவரங்களைக் கணப்பொழுது கூடத் தாமதித்து யோசியாமல் கணக்காய்ச் சொல்லக் கூடியவர்கள் பலர் உண்டு. லண்டனிலுள்ள ப்ளீட் ஸ்டிரீட்டில் மொத்தம் எத்தனை பத்திரிகைக் காரியாலயங்கள் உள்ளன; அவற்றின் அரசியல் நோக்கங்கள் யாவை; ஆப்பிரிக்கக் காடுகளில் வேட்டையாடுவதிலே உள்ள ஆபத்துக்கள்; ஆஸ்திரேலியப் பழங்குடி மக்களின் வாழ்க்கை முறைகள் எல்லாவற்றையும் பற்றிக் கதை கதையாகச் சொல்லுவார்கள். உட்கார்ந்த இடத்திலேயே உலகைச் சுற்றி வரும் ஓய்வு பெற்ற உத்தியோகஸ்தர்கள் இவர்கள் என்பதும் அவ்வளவும் பிரயாண நூல்களைப் படித்துப் பெற்ற அறிவு என்பதும் நெருங்கிப் பழகியவர்களுக்கு மட்டுமே தெரியும்!

நாளுக்கு நாள் தமிழிலும் பிரயாணக் கட்டுரைகளுக்கு 'மவுசு' அதிகமாகிக் கொண்டிருக்கும் சமயத்தில், கலை அன்பனின் 'செல்வம் கொழிக்கும் சீமை' என்ற நூலை வெளியிட்டுள்ளார்கள். ஆசிரியர் க. ப. இராமன் (கலை அன்பன்) அமெரிக்க சர்க்காரின் அழைப்பை ஏற்று அங்கே சில மாதங்கள் வசித்திருக்கிறார். திரும்பிய பிறகு எழுதிய நூல் இது. யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்ற ஆசையில் புத்தகத்தை எழுதியதாக ஆரம்பத்தில் குறிப்பிடுகிறார் ஆசிரியர். 'ஐயா! அமெரிக்காவில் தாங்கள் பெற்ற இன்பம் இவ்வளவு தானு?'' என்று படித்து முடித்ததும் கேட்கத் தோன்றினல் அதற்குக் காரணம் இல்லாமற் போகவில்லை. செல்வம் கொழிக்கும் சீமையில் பல மாதங்கள் தங்கியிருந்து தாம் பரவலாகவும் மேலெழுந்தவாரியாகவும் கண்டு கேட்டு அனுபவித்த அனைத்தையும் நூற்று அறுபது பக்கங்களுக்குள் திணிக்கப் பார்த்ததில் ஓரளவுக்குப் புள்ளி விவரங்களுடன் கூடிய பட்டியல் தயாரித்தது போலாகி விட்டது. அந்தேசத்தின் ஒரு சில அம்சங்களை மட்டிலும் நுணுகி ஆராய்ந்து விரிவாக எழுதியிருக்கலாமே என்று எண்ணுமிருக்க முடியவில்லை. இருந்தபோதிலும் நமக்குப் பழக்கமில்லாத புது இடங்களைப் பற்றி எழுதிக் கொண்டு போவதால் வாசிப்பவர்களுக்கு அலுப்புத் தட்டாது என்பதுடன் மேலே மேலே பல தகவல்களைத் தெரிந்து



''என் செருப்பு அடிக்கடி வழுக்கி விட்டுக் கொண்டே இருக்கிறது சார். எந்தத் தோலில் செய்திருக்கிறுனே தெரியவில்லை''

''வாழைப்பழத்தோலாயிருக்குமோ?''

கொள்ள வேண்டும் என்ற ஆவலுடன் பக்கங்களைப் புரட்டுவார்கள். நாலு பக்கமும் புகைப்படங்கள், முன்னுரை, முகவுரை, அணிந்துரை, கருத்துரை, பதிப்புரை ஆகிய எல்லாவற்றையும் சேர்த்து இப்புத்தகத்தின் விலை இரண்டு ரூபாய் எழுபத்தி ஐந்து பைசா.

பிரகரம்: மீனுட்சி புத்தக நிலையம், மதுரை.

## காயிலே புளிப்பதென்னே!

நடராஜன் என்னும் வாலிபனைத் தன் பணிவிடைகளால் ஆட்கொள்ளும் சுசிலா உண்மையிலேயே சுசீலாதான் ஆனல் விநோதா—சங்கரன் ஜோடி சுசிலா-நடராஜனின் வாழ்க்கையிலே புளிப்பை உண்டு பண்ணுகிருர்கள். மிஸ்டர் நாகரிகம் அந்தப் புளிப்பை வளர்க்கிருர். கடைசியிலே காய் பழுக்கிறது. புளிப்பு மாறி இனிக்கிறது. இது இயற்கையின் நியதி. இக்கதையை எழுதிய ஆசிரியராலேயே இந்த நியதியை மாற்ற முடியவில்லை. அதாவது சுசிலா-நடராஜன் ஐயம் தீர்ந்து இனிய காதற்கனியின் நற்சுவையைச் சுவைக்கிருர்கள்.

இந்தக் கதையிலே இடையிடையே சுசீலாவின் தந்தை கமலநாதன் வருகிறுர்; காப்பி வருகிறது. அந்தக் காப்பி இந்தக் கதையைப் படிப்பவர்களுக்கும் இடையிடையே கிடைத்தால், அந்த உற்சாகத்திலாவது படிக்கலாம்; படித்து முடிக்கலாம்.

முன்னுரையில் கதையின் ஆசிரியர், 'நடராஜன் புளிப்பில் இனிப்பைக் கண்டான். சங்கரன் இனிப்பில் புளிப்பைக் கண்டான். நீங்கள் என்ன காண்கிறீர்கள்?' என்று கேட்கிருர்.

நாம் அளவுக்கு அதிகமாக வேற்று வாடையைக் காண்கிறேம் என்று வேண்டுமானல் பதில் சொல்லி வைக்கலாமா?

ஆசிரியர்: ஏ. எஸ். ராகவன். பிரசுரம்: ஜுபிலண் பதிப்பகம் தியாகராய நகர், சென்னை-17; விலை: ரூ. 1.50.




அத்தியாயம் நாற்பத்தேழு

## முன்னேற்ற யோசனைகள்

அறைக்குள் சித்திரா நுழைந்தவுடன் மாணிக்கம் அவளை வழக்கத்துக்கு அதிகமான பரிவுடன் வரவேற்று முருகையனுக்கு அருகில் உட்காரச் செய்தார். முருகையனுக்கோ அந்தச் சமயத்தில் சித்திரா அங்கு வந்து சேர்ந்தது தர்மசங்கடமாக இருந்தது. அவளையும் அருகில் வைத்துக் கொண்டு தொழில் முறையில் நடந்த சீர்கேடுகளைப் பற்றிப் பேசுவதற்கு அவன் சிறிது தயங்கினான். அவன் அப்படித் தயங்க வேண்டுமென்றுதான் மாணிக்கமும் எதிர்பார்த்தார்.

''சித்திரா! நம்முடைய மாப்பிள்ளை இப்போது ஒரு தேவையில்லாத விஷயத்தை இழுத்துப் போட்டுக் கொண்டிருக்கிறார்'' என்று ஆரம்பித்தார் மாணிக்கம். ''இதில் நமக்கு ஒரு சம்பந்தமும் இல்லை. இதை அப்படியே இவர் கைகழுவி விட்டால் எல்லாம் சரியாய்ப் போய் விடும். இல்லாவிட்டால் நமக்கு எல்லாத் தொல்லைகளும் வந்து சேரும். முதலில் நாம் குமரவேலைப் பகைத்துக் கொள்ள வேண்டும். அவரைப் பகைத்துக் கொண்டால் நம்முடைய உறவுக்கும் தொழிலுக்குமே பாதகம் ஏற்படும். இதையெல்லாம் நான் சொல்லிப் பார்த்து விட்டேன்; மாப்பிள்ளைக்குப் புரியவில்லை.''

சித்திரா முருகையன் பக்கம் திரும்பித் தன் முத்துப் பல் வரிசை தெரியச் சிரித்தாள். அந்தச் சிரிப்பு ஒன்றுக்காகவே ஒருவன் எந்தப் பிடிவாதத்தையும் உடனடியாகக் கைவிட்டு விடலாம். அத்தகைய மனமோகனச் சிரிப்பு அது. முருகையன் ஒரு நிமிடம் ஏதும் பேசத் தோன்றாமல் தடுமாறினான்.

''என்ன அத்தான்! பேச மாட்டேன் என்கிறீர்களே? என்னிடம் உங்களுக்குக் கோபமா?'' கொஞ்சும் மொழியில் தேன் குழையக் கேட்டாள் சித்திரா.

முருகையன் அவளுடைய மயக்கும் அழகைக் காணத் துணிவில்லாதவனாய்த் தன் தலையைக் கீழே குனிந்து கொண்டான். விசாலமான அவளது விழிகளும் அவளுடைய மழலையொத்த மொழிகளும் அவன் உள்ளத் துணிவை உருக்குலைக்கப் பார்த்தன.

கண்களை மூடிக் கொண்டு அவன் சிந்தனை செய்தபோது, மருத்துவமனைக் கட்டிலில் கிடந்து அவனிடம் கடைசி வேண்டுகோள் விடுத்த வேலம்மாள் அவனது நினைவில் தோன்றினாள். அவளைச் சுற்றிக் கதறியழுத குழந்தைகளின் அழுகையொலி இப்போது மீண்டும் கேட்டது. அடுத்தாற்போல் வேலம்மாளைச் சுட்டு நீராக்கி விட்டு, வந்தவுடன், பெட்டிக் கடை நடேசன் தன்னிடம் வந்து குமுறிக் குமைந்ததையும் நினைத்துக் கொண்டான். இவ்வளவுக்கும் அடித்தளமாகக் குமரவேலின்

டெங்கில் அவன் கண்ட காட்சிகளும் முன்னே வந்தன.

சட்டென்று நினைவிலிருந்து விடுபட்டு முருகையன் தன் தலையைத் தூக்கிச் சித்திராவை நேருக்கு நேர் உற்றுப் பார்த்தான். மளமளவென்று நடந்தவையனைத்தையும் கூறிவிட்டு, ''குற்றமற்ற ஓர் ஏழை, அவன் ஏழை என்ற ஒரே காரணத்தால் தண்டிக்கப்பட வேண்டுமா?'' என்று கேட்டான்.

சித்திராவுக்கு எதுவுமே பதில் பேசத் தோன்றவில்லை. முருகையன் கூறியதெல்லாம் நியாயம் என்பதை அவள் உணர்ந்து கொண்டாள். ஆனால் அந்த நியாயத்தை நிலைநாட்டுவதிலிருந்த சிக்கல்கள் அவளுக்குத் திகைப்பைத் தந்தன.

''நான் எப்படியும் இந்த விஷயத்தில் நிரபராதியான நடேசனைக் காப்பாற்றுவதாக உறுதி கூறி விட்டேன்'' என்று முடிவாகக் கூறினான் முருகையன்.

முருகையனுடைய சொல்லிலிருந்த உறுதி மாணிக்கத்துக்கு அதிர்ச்சி தந்தது. முடிந்தவரையில் தம்முடைய கோபத்தை அடக்கிக் கொண்டு அவனிடம் நிதானமாகப் பேசிப் பார்த்தார். சித்திராவிடமும் அதனால் ஏற்படும் பின் விளைவுகளை எடுத்துக் கூறினார்.

''பெட்டிக் கடைக்காரனுக்கு நாம் வேறு எந்த வகையில் வேண்டுமானாலும் உதவி செய்யலாம். அவன் ஒருவேளை ஜெயிலுக்குப் போனால் அவன் குடும்பத்துக்கு ஏதாவது பணம் கொடுப்போம். திரும்பி வந்தால் அவன் கடை வைத்து நடத்துவதற்கு வசதி செய்து கொடுப்போம். ஆனால், குற்றம் என்று வந்தால் அதை அவன்தான் ஒப்புக் கொள்ள வேண்டும்.''

''உண்மைக் குற்றவாளி என் பெரியப்பாதானே?''

''எது உண்மை, எது பொய் என்ற ஆராய்ச்சி நமக்கு இப்போது வேண்டாம். குமரவேலிடம் நமக்கு விரோதம் கூடவே கூடாது. அவர் மீது எந்தப் பழி வந்தாலும் அதைக் கூசாமல் நம் மீதே திருப்பி விடுவார். பிறகு நாம் தான் அகப்பட்டுக் கொண்டு விழிக்க வேண்டும். ஏற்கனவே நம் எல்லாரிடமும் அவருக்குப் பகை இருக்கிறது.''

''நம்மிடம் என்ன அண்ணா அவருக்கு விரோதம்?'' என்று கேட்டாள் சித்திரா.

''எல்லாம் உன் விஷயமாகத்தான்.''

''என்ன!''

சித்திரா வியப்படைந்தது போலவே முருகையனும் வியப்புற்றான். இருவரும் ஒன்றாக மாணிக்கத்தைப் பார்த்தார்கள். மாணிக்கமோ முருகையனின்



முகத்திலிருந்த ஆர்வத்தை நன்றாக அளவெடுத்துக் கொண்டார்.

''குமரவேல் தம்முடைய மகன் செல்வரத்தினத்துக்கு உன்னைப் பெண் கேட்டார். பையனும் நல்ல பையன் தான். நம்முடைய பிள்ளையைவிட அதிகம் படித்திருக்கிறான். உத்தியோகமும் உயர்ந்த உத்தியோகம். வசதிக்கும் குறைவில்லை. உன் அண்ணிக்குக் கூட அவனுக்குக் கொடுக்க வேண்டுமென்றுதான் எண்ணம். ஆனால் நான்தான் வந்து...''

சித்திராவிடம் திரும்பிப் பேசுவது போலவே பாவனை செய்து கொண்டு முருகையனுடைய முக பாவ மாற்றங்களை உற்றுக் கவனித்தார் மாணிக்கம். முருகையனுக்கு அச்சமூட்டி அவனை அவன் போக்கிலிருந்து தடுத்து விடுவதற்கு இச் செய்தியை ஓர் ஆதாரமாகப் பயன்படுத்த முயன்றார் அவர்.

செய்தியைக் கேட்ட முருகையனுக்கு உச்சி முதல் உள்ளங்கால் வரையில் மின்சாரம் பாய்ந்தது போல் இருந்தது. அது வரையில் சித்திராவைத் தனக்குச் சொந்தமாகி விட்டவள் என்றே அவன் நினைத்துக் கொண்டிருந்தான். இப்படியொரு பேச்சு வார்த்தை இடையில் நடைபெற்றிருக்கக் கூடும் என்று அவன் எதிர்பார்க்க வில்லை. சித்திராவும் தன் அண்ணன் கூறியதைக் கேட்டுத் திடுக்கிட்டாள்.

''என்னிடம் கூட நீங்கள் இதைச் சொல்லவில்லையே, அண்ணா!'' என்றாள் சித்திரா.

''சொல்லவேண்டிய அவசியம் வராது என்று நினைத்தேன். இப்போது வந்திருக்கிறது. எதற்காக இதைச் சொல்ல வந்தேனென்றால், பல விதத்திலும் உயர்ந்த ஒரு மாப்பிள்ளை செல்வரத்தினம் இருக்கும்போது, எதற்காக



எனக்கு இவரைப் பிடித்திருக்கிறது என்பதையும் இவர் நினைத்துப் பார்க்க வேண்டும்.''

செல்வரத்தினத்தை உயர்த்திப் பிடித்துத் தன்னை அவர் தாழ்த்திப் பேசியது முருகையனுக்குச் கருக்கென்று தைத்தது. திரும்பத் திரும்ப அவனுடைய படிப்பு, உத்தியோகம், பணம் இவற்றை முருகையனுக்குச் சுட்டிக் காட்டினார். இந்தச் சமயத்தில் சித்திரா தனக்குப் பரிந்து கொண்டு பேசுவாள் என்று எதிர்பார்த்தான் முருகையன். ஆனால் அவளோ முகத்தைச் சுளித்துக் கொண்டாளே தவிர, மாணிக்கத்திடம் எதையும் குறுக்கிட்டுப் பேசவில்லை.

சிறிது நேரம் மௌனமாக இருந்துவிட்டு, ''எதனால் என்னை உங்களுக்குச் செல்வரத்தினத்தைவிட அதிகம் பிடித்திருக்கிறது?'' என்று கேட்டான் முருகையன்.

''இதோ பாருங்கள்! இதையெல்லாம் எப்படி விளக்கமாகச் சொல்வது? வாழ்க்கையில் முன்னேற வேண்டுமானால் உங்களுக்குப் பலவித நெளிவு சுளிவுகள் தெரிந்திருக்க வேண்டும். எதற்கும் வளைந்து கொடுத்துப் பழக வேண்டும். எல்லா விஷயங்களிலும் ஈடுபட்டு மனத்தைத் தொல்லைப் படுத்திக்கொள்ளாமல், நமக்குச் சம்பந்தமில்லாத காரியங்களிலிருந்து விலகிக்கொள்ள வேண்டும். இவ்வளவு தூரம் எதற்கு? முக்கியமாக நீங்கள் என் பேச்சைக் கேட்டு, நான் சொல்கிறபடி நடப்பீர்கள் என்று நம்பியதால்தான் எனக்கு உங்களை அதிகம் பிடித்திருக்கிறது.''

நிதானமாக அவர் கூறிய சொற்களை அசை போட்டுப் பார்த்தான் முருகையன். மாணிக்

கத்தின் அடிப்படைக் கருத்தைப் புரிந்து கொள்ள அவனுக்கு அதிக நேரம் ஆகவில்லை. அவனுக்கென்று சொந்தக் கருத்தோ, வழியோ வைத்துக்கொள்ளா மல் எல்லாவற்றிலும் அவர் போக்குப்படி நடந்துகொண்டால்தான் வாழ்க்கையில் 'முன்னேற' முடியும்.

அப்படியெல்லாம் நடந்து கொண்டு முன்னேற வேண்டியது அவசியம்தானா? அதற்குப் பெயர்தான் முன்னேற்றமா? அப்படியே நடந்து கொண்டால்கூட, அவர் சொல்கிற முன்னேற்றம் ஏற்படும் என்பது என்ன உறுதி? தன் பெயரில் நடந்த தொழிலில் உண்டான அநீதி அவனுக்கு நினைவில் வந்தது.

''சரி, இதை யெல்லாம் மறந்து விட்டு நடக்கப் போகிற கல்யாணத் தைப் பற்றி நினைத்துக் கொள்ளுங்கள்!'' என்று சொல்லி விட்டுச் சிரித்துக் கொண்டே எழுந்தார் மாணிக்கம்.

''சித்திராவும் நீங்களும் சேர்ந்து சிரிக்க வேண்டிய நேரத்தில் எவனோ ஒரு பெட்டிக் கடைக்காரனைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டிருக்கலாமா?''

அதன் பிறகு சற்று நேரத்துக் கெல் லாம் மாணிக்கம் சித்திராவைத் தனியே அழைத்து அவளிடம் நெடு நேரம் பேசிக் கொண்டிருந்தார்.

முருகையனும் தனிமையில் சிந்திக்கத் தொடங்கினான்.

### அத்தியாயம் நாற்பத்தெட்டு

## என்றோ தொடங்கிய போராட்டம்

சிந்தனை செய்வதும் ஒரு வகையில் தவம் செய்வதைப் போன்றதுதான். முருகையன் நேரம் போவது தெரியா மல் தனக்கு விவரம் தெரிந்த நாள் முதல் நடந்த காரியங்களையும், அப் போதைக்கு நடந்து கொண்டிருந்த நிகழ்ச்சிகளையும், அடுத்திருந்த எதிர் காலத்தையும் சிந்தனை செய்தான்.

'நான் யார்? ஏன் பிறந்தேன்? எனக்கு இங்கு என்ன வேலை?' என்பன போன்ற வினாக்கள் தவயோகிகளுக்கு மட்டும் ஏற்படுவதில்லை. சிந்திக்கத் தெரிந்த மனிதர்களுக்கெல்லாம் எப் போதாவது சில முக்கியமான சமயங் களில் ஏற்படுவது உண்டு. முருகையன் இப்போது அப்படியொரு நிலையில்தான் இருந்தான்.

அவனுடைய அறையில் இருந்த நிலைக் கண்ணாடியில் அவன் ஒரே ஒரு முருகையனைப் பிரதிபலித்தாலும், அவ னைச் சுற்றிப் பல முருகையன்கள் சுழன் றார்கள். செல்லப்பிள்ளையாக வளர்ந்த சிறுவன்; மாணவர்களின் அன்பைப் பெற்ற இளைஞர்களின் தலைவன்; சிறைச் சாலையில் 'பயங்கரக் கைதி'; விடுதலை பெற்றவுடன் ஏழையாக மாறிவிட்ட பணக்காரப் பிள்ளை; கடற்கரையிலே கடலை விற்றுத் திரிந்தவன்; சென்னை நகரத் தெருக்களில் ரிக்ஷா இழுத்த மனி தன்; பிறகு முதலாளி; சுகபோக வாழ்க் கையில் மிதந்து கொண்டிருப்பவன்.... இனி.....இனி.... சித்திராவின் கண வன்; அவளையும் அவளால் கிடைக்கும் சொத்து சுகங்களையும் தனதாக்கிக் கொள்ளப் போகிறவன்!

சுவரில் தொங்கியதோர் அழகான படத்தில் அவன் பார்வை பதிந்தது. இமயமலைச் சாரலில் சிவபெருமான் தவக் கோலம் பூண்டிருந்த படம் அது. உலகத்தையே ஆக்கி, வளர்த்து, அழிக் கும் சக்தி படைத்தவனாகிய அவனுடைய கோலத்தில் எந்த விதமான ஆடம்பர மும் இல்லை.

எளியவனிலும் எளியவனாகத் தோற் றம் அளித்த அவன் உணர்ச்சிகளாய்ப் படமெடுத்தாடும் நச்சரவங்களை அடக்கி மேலே இழைய விட்டிருந்தான். உலகத் துக்கு நேரவிருந்த தீமையைத் தானே திரட்டித் தின்று தன்னை நஞ்சுகண்ட கண்டனாக்கிக் கொண்டிருந்தான். எல் லோருக்கும் எல்லாவற்றையும் வழங்கும் ஆற்றல் பெற்ற அவனருகில் ஒரு திரு வோடு பிச்சைப் பாத்திரம்!

ஏனோ அந்தப் படத்தைப் பார்த்த வுடன் முருகையனுக்குப் புத்தர், இயேசு நாதர், சாக்ரடீஸ், ஆப்ரஹாம் லிங்கன், டால்ஸ்டாய், காந்தியடிகள் முதலிய பலருடைய நினைவு வந்தது. எல்லாரும் எளியவர்கள், வலியவர்கள், உலகத்தின் தீமையைக் களையத் தங்கள் வாழ்வைப் பலி கொடுத்துக் கொண்டவர்கள். அவர் களுடைய அளவுக்கு உயர முடியா விட்டாலும் அவர்களது பாத தூளியின் அளவுக்காவது மனிதன் உயர முயற்சி செய்ய வேண்டாமா? அதுவன்றோ மெய் யான முன்னேற்றம்?

சட்டென்று சிவபெருமானுக்கு எதி ரில் நின்ற பார்வதி தேவியின் படத்தை உற்றுப் பார்த்தான் முருகையன். இயற்கை அழகும் செயற்கை அழகும் ஒன்றி மிளிர்ந்த தோற்றத்துடன் வரை யப் பெற்றிருந்த உயிர்ச் சித்திரம் அது. ஆடை அணிகள் பல வகை நிறங்களில் அணி செய்ய, ஊடலின் தாகத்தோடு,



# மனக்கொதிப்பும் கவலையும் ஜீரணத்தை பாதிக்கின்றன

நம் வயிறும், மூளையும் நரம்புகளின் மூலம் ஒன்றோடொன்று இணைக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு முறையும் நாம் மனக் கொதிப்பினாலோ அல்லது கவலையினாலோ பாதிக்கப்படும்பொழுது இந்த நரம்புகள் ஜீரணம் செய்வதை தற்காலிகமாக தடுப்பதுடன் ஆட்ரீனலின் என்ற சக்திவாய்ந்த அமிலத்தை வெளிப்படுத்தி ரத்தத்துடன் கலக்கிறது. இந்த அமிலம் ஓடியாடி வேலை செய்வோருக்கு மனக்கொதிப்பை எதிர்த்துப் போராட உதவுகிறது. ஆனால் மற்றவர்கள் விஷயத்தில் இது தீமையைப் பயக்குவதுடன் அவர்கள் ஜீரண சக்தியையும் குறைக்கிறது. அதனால்தான் வியாபாரத் துறையிலுள்ளவர்களில் 10 பேர்களில் 6 பேர் அஜீரணத்திற்குள்ளாகி, அதன் விளைவாக சாப்பிட்டபின் வயிற்று வலியினால் கஷ்டப்படுகிறார்கள்.






ஹ்யூலட்ஸ் மிக்சர் வயிற்றுவலியை விரைவாகவும் அடியோடும் நிவர்த்திக்கிறது. எரிச்சலை உண்டாக்கும் அமிலத்திலிருந்து இரைப்பையின் சுவற்றைக் காப்பாற்றுவதோடு உணவை நன்றாக கரைத்து ஜீரண சக்தி ஏற்படுவதற்கும் உதவுகிறது. 80 வருஷங்களுக்கு மேலாக உலகத்திலுள்ள எல்லா டாக்டர்களும் சிபாரிசு செய்யும் மருந்து இதுவே. குழந்தைகளின் வயிற்று உபாதைகளையும் தீர்க்கவல்லது ஹ்யூலட்ஸ் மிக்சர்.

வயிற்றுக் கடுப்புக்கு அபினி கலந்த ஹ்யூலட்ஸ் மிக்சரை உபயோகியுங்கள்.

## "ஹ்யூலட்ஸ் மிக்சரை

உபயோகிக்க ஆரம்பித்ததிலிருந்து நான் நன்றாக சாப்பிட முடிகிறது."



ஸி.ஜே. ஹ்யூலட் & ஸன் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்,
86/A, லைனியப்ப நாயக்கன் தெரு, மதராஸ்-3

உணர்ச்சிப் பிழம்பாக அங்கு நின்று கொண்டிருந்தாள் தேவி.

ஆணிடம் எளிமை; பெண்ணிடம் மனம் கவரும் புற அழகுச் சாதனங்கள். ஆணுக்கு வலிமை; பெண்ணுக்கு மென்மை. ஆணுக்குச் சிந்தனை; பெண்ணுக்குச் சாகசம். ஆணிடம் அறிவுச் சுடர்; பெண்ணிடம் அன்புச் சுடர்.

ஆதி மனிதர்களாகிய ஆணும் பெண்ணும் உலகில் தோன்றியபோதே அவர்களுக்குள் இப்படியொரு போராட்டம் தொடங்கி யிருக்க வேண்டும். அந்தத் தத்துவத்தால் எழுந்த சித்திரம்தானா இது? காலம் காலமாக இனி நடைபெறப் போகும் போராட்டங்களையும் இது சுட்டிக் காட்டுகிறதா? உலகத்தையே ஆக்கி, வளர்த்து அழிக்கத் துடிக்கும் ஆண் மகனையும் அவனையே ஆளாக்கி வளர்த்து, அழிக்கத் துடிக்கும் பெண் மகளையுந்தான் இப்படிக் கவிஞர்களும் ஓவியர்களும் கற்பனை செய்திருப்பார்கள் போலும்!

முருகையனின் நாசியில் சம்பங்கிப் பூவின் நறுமணம் புகுந்தது. காதுகள் புதுப் புடவையின் சரசரப்பு ஓசையைக் கேட்டு விட்டன. திறந்த கதவின் வழியே அழகுக் குவியலின் முழு உருவமாகச் சித்திரா மெல்ல நுழைந்தாள். கதவை ஓசையின்றித் தாழிட்டு விட்டு, அதன்மீதே ஒயிலாகச் சாய்ந்த வண்ணம் முருகையனை ஏக்கத்தோடு நோக்கினாள். அவளுடைய கண்களுக்கு மையிட்டிருந்ததால் அவை வழக்கத்தைவிடக் கூர்மையின் வலிமை பெற்றிருந்தன. ஐம்புலன்களையும் அதிர்ச்சியுறச் செய்யும் தனது ஆயுதங்கள் அனைத்தையும் ஏந்திக் கொண்டு பெண் தனது அன்புப் போராட்டத்துக்கு இப்பொழுது ஆயத்தமாகி விட்டாளா?

முருகையன் தன்னையும் படத்திலிருந்த ஆண்டியான பரமசிவனையும் ஒரு முறை பார்த்துக் கொண்டான். சித்திராவையும் படத்திலிருந்த இமய வேந்தன் மகளான இளவரசி பார்வதியையும் பார்த்துக் கொண்டான். பாவம்! அனுதாபத்துக்குரிய நான்கு பேர்!

கதவைத் தாழிட்டு நின்றவள் இறங்கிக் கீழே விழுந்து விடுபவள்போல், துவளும் பூங்கொடி போல் தன் சுமையையே தான் தாங்க முடியாதவள் போல் நின்றாள். பரிதாபத்துடன் அவளை விழித்து நோக்கினான் முருகையன். கொழுந்து விட்டெரியும் இத்தனை அழகுச் சுடர்களோடு அவன் அவளை அதற்கு முன்பு கண்டதில்லை.

மெல்ல அடிஎடுத்து வைத்து முன்னே வந்தவள் அவன் அருகில் வந்து, அவன் முழங்காலில் கழுத்தைப் புதைத்துக் கொண்டு தரையில் அமர்ந்தாள். அவள் கேசத்தை மறைத்திருந்த சம்பங்கிப் பூச்சரம் அவன் சிந்தனையைக் கலக்கப் பார்த்தது. தலையைத் தூக்கி அவன் முகத்தைப் பார்க்காமல் அவள் கண்ணீர் வடிக்கத் தொடங்கி விட்டாள்.

சித்திராவின் கண்ணீர் அவன் மயிர்க்கால் வழி பாய்ந்து, இரத்தத்தில் கலந்து இதயத்தின் அடித்தளத்துக்கே சென்று நில்லிட்டது. முருகையனின் கண்களும் கலங்கின. சொட்டுச் சொட்டாய்க் கண்ணீர் சம்பங்கி மலர்கள் மீது சிதறி விழுந்தது.

ஏன் இந்தக் கண்ணீர்? அவனுக்கும் புரியவில்லை; அவளுக்கும் புரியவில்லை. அவர்கள் இருவராலுமே தங்கள் கண்ணீருக்கு அணை போட முடியவில்லை. ஏன் இந்தக் கண்ணீர்?

சுய நினைவு வந்தவுடன், ''கதவு தாழிட்டிருக்கிறது சித்திரா. அதைத் திறந்து விட்டு வா!'' என்றான் முருகையன்.

முகத்தைத் தூக்கி முருகையனைப் பார்த்தாள் அவள். இரண்டு கண்களிலும் கண்ணீர் வழிந்தன. 'உங்களிடம் சிறிது நேரம் அழுது விட்டுப் போகலாம் என்று வந்தேன். இது கூட உங்களுக்குப் பிடிக்காது என்றால் போய் விடுகிறேன்.''

''தாராளமாக இரண்டு பேரும் சேர்ந்து அழுவோம்'' என்று கூறித் தன் கண்களைத் துடைத்துக் கொண்டான் அவன்.

''நீங்கள் பேசியதையும் கேட்டேன்; அண்ணா சொல்லியதையும் கேட்டேன். கல்யாண நாள் நெருங்கி வரும் இந்தச் சமயத்தில் உங்களுக்குள் ஏற்பட்டிருக்கிற மன வேற்றுமையைக் கண்டு நான் பயப்படுகிறேன்.''

''பயந்தால் வாழவே முடியாது, சித்திரா!''

''சொல்லாதீர்கள்! வாழ முடியாதென்று சொல்லாதீர்கள்!'' என்று அவன் வாயைப் பொத்தினாள் சித்திரா

சிறிது நேரம் மௌனத்தில் கழிந்தது

''நான் ஒரு கேள்வி கேட்பேன். அதற்கு உங்கள் மனத்திலிருப்பதை ஒளிக்காமல் பதில் சொல்வீர்களா?''

''தாராளமாகக் கேள்.''

''நீங்கள்... நீங்கள்.... வந்து.... என்னை உண்மையிலேயே காதலிக்கிறீர்களா?'' என்று கேட்டாள் சித்திரா.

'காதலிக்கிறேன், சித்திரா!' என்று அவன் உடனடியாகப் பதில் சொல்லப் போகிறான் என்று அவள் எதிர்பார்த்தாள். அவன் அப்படிச் சொல்ல வேண்டும் என்று துடித்தாள். அவனோ அவ

னுடைய கேள்வியைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்கி விட்டான்.

பதிலே சொல்லவில்லை முருகையன்.

''அத்தான்! நான் கேட்டது உங்களுக்குப் புரிந்ததா?''

''அதைப் பற்றித்தான் இவ்வளவு நேரம் யோசனை செய்து கொண்டிருந்தேன். இன்னமும் யோசிக்கிறேன்.''

சித்திராவின் கண்களில் ஆத்திரம் திரண்டது.

''கோபம் வேண்டாம், சித்திரா! என்னிடம் உண்மையைக் கேட்டாயல்லவா? அப்படிக் கேட்க வேண்டிய அவசியம் வந்து விட்டதல்லவா? இது வரையில் நான் உன்னைக் காதலிப்பதாகத்தான் நினைத்துக் கொண்டிருந்தேன். அந்த நினைவு உண்மைதானா என்று இப்போது என்னையே கேட்டுக் கொள்கிறேன்.''

''வாருங்கள்! எங்காவது வெளியில் போய் மறைந்திருந்து பேசவோம்.... எழுந்திருங்கள்!''

முருகையனுக்கு உடைகளை எடுத்து வைத்தாள். தலை வாரிக் கொள்ள அவனிடம் சீப்பை எடுத்துக் கொடுத்தாள். அவனைத் தயார் செய்து வெளியில் அழைத்து வந்தாள். இருவரும் காரில் ஏறி எங்கோ கிளம்பினார்கள். (தொடரும்)

# ஏகலைவம்

என். மகாலிங்கம்

''அந்தக் கிழம் மனசு வைத்தால் எல்லாம் தானாக நடக்கும்'' என்றாள் ராஜம். அவன் கூடத்துத் தூணில் சாய்ந்தபடி உட்கார்ந்திருந்தான். மெள்ள ஆடிக் கொண்டிருந்த ஊஞ்சலில் உட்கார்ந்து அன்றைய செய்தித் தாளில் வெளியாகி யிருந்த பரீட்சை முடிவில் இருந்த தன்னுடைய எண்ணையே திரும்பத் திரும்பப் பார்த்து மகிழ்ந்து கொண்டிருந்தான் பானு. இந்தப் பேச்சுஆரம்பித்ததே அவனை முன்னிட்டுதான்.

''வாயாலே சொல்லி விட்டால் சரியாய்ப் போய் விடுமா? மனசு வைக்கணுமே!'' என்றார் கல்யாணமய்யர். அவர் பானுவுக்குப் பக்கத்தில் உட்கார்ந்தபடி வெற்றிலை போட்டுக் கொண்டிருந்தார்.

''என்ன, நீங்களே இப்படிச் சந்தேகப்பட்டுப் போகிறீர்களே! நம்மை விட்டால் 'அது'க்கு நாதி வேறே வைத்து வாழுறதாக்கும்?'' என்றாள் ராஜம்.

''நீ அப்படி நினைத்துக் கொண்டிருக்கிறாய்? அது வாஸ்தவம்தான். ஆனால் கிழம் இலேசுப்பட்ட ஆளில்லே தெரியுமா? கண்டச் கண்ட வெத்தக் குழம்பு வைத்துக் கொண்டு போய்க் கொடுத்தா நாக்கிலே விட்டு ருசி பார்க்கும். ருசி நிக்கிற வரைக்கும், 'ஆகா எங்க ராஜத்தைப் போல உண்டா?' என்பார். உனக்கு அப்படியே உச்சி குளிர்ந்து போய் விடும். பாத்திரத்தைக் கொண்டு வந்த அடியோட, 'ஊம் என்னத்தைப் பிரமாதமா செய்து விட்டார்?' என்கிறாரோ என்னமோ?''

''உங்களுக்குக் கற்பனை ரொம்ப அதிகமாகத்தான் போகிறது!'' என்று முகத்தை வலித்துக் கொண்டாள் ராஜம்.

''உன்னை மாத்திரம் சொல்லுவதாக நினைத்துக் கோபித்துக் கொள்ளாதே! என் கதி மாத்திரம் என்னவாம்? தினம் மாடு கறந்து கொடுத்து, குளிக்கிறதற்கு ஜலம் இழுத்துக் கொடுத்து, வயல் வெளிக்குப் போய் விட்டு வந்து, படுக்கையை ஒரு நாளைப் போலவே வெயிலில் உதறிப் போட்டு எடுத்து வைத்து, ராம ஜபம் பண்ணுவது போல் அது மூச்சுக்கு முந்நூறு தடவை, 'கல்யாணம், கல்யாணம், என்று கூப்பிடற குரலுக்கெல்லாம், 'ஏன்னு கேட்டிண்டிருந்தா அதுங்கிட்டே சுலபமாகக் காலந் தள்ளலாம். அன்றைக்கு ஒன்னுமில்லே, காலம்பற போயி மாட்டைக் கறந்து கொடுத்து விட்டு வர போது இது வழக்கம் போல, 'பத்து மணிக்கெல்லாம் வந்து கன்னுக்குட்டியைக் கட்டிடு. இல்லேன்னு மாட்டோட மேயப் போயிடும்னுது. தலையைஆட்டி விட்டு வந்தேன். அன்னிக்குன்னு பார்த்து முருகையப் படையாச்சியும் வந்து, 'சவுக்கு போடணும். சித்த வந்து படுகையிலே ஒரு குழி அளந்து கொடுத்துட்டுப் போங்க'ன்னான். சரி போயிட்டு வந்துடுவமேன்னு போன இடத்திலே கொஞ்சம் நாழியாயிடுத்து. அளக்கற போதெல்லாம் கன்றுக் குட்டி கட்டவில்லையே என்கிற ஞாபகம்தான். 'சரி மாடு மேய்க்கறவன் வரபோது அவனையே விட்டுக் கட்டச் சொல்லி விருப்பார்'ன்னு வேலையை முடிச்சிட்டு வந்தேன். அன்னிப் பகல் முழுக்கக் கிழவரைப் பாக்க ஒழியலே. சாயந்தரமாப் போறேன், 'யாரு கல்யாணமய்யரா? வாங்கோ' என்றார். எனக்குத் தூக்கி வாரிப் போட்டது.

''அது என்னவோ, இவ்வளவு தூரம் இழுத்துப் போட்டுக் கொண்டு செய்துவிட்டுக் கடைசியிலே இரண்டு பேருமா காரியத்தைக் கோட்டை விட்டுடுவோமான்னு எனக்குப் பயமாயிருக்கிறது. பானுவைக் காலேஜிலே சேர்க்க வேண்டும். இந்த வருஷம் இல்லாவிட்டாலும் அடுத்த வருஷம் சங்கரிக்கு வரன் தேடியாகவேணும். அப்புறம் கீழ்க் கிளைகள் வேறே இரண்டு இருக்கவே இருக்கிறது.''

''எல்லாவற்றையும் மனசிலே வைத்துக் கொண்டு எப்படி நடந்து கொள்ள வேண்டுமோ அப்படி நடந்து கொள்ளுங்கள்'' என்ற ராஜத்தின் குரல் மங்கியிருந்தது.

''இவ்வளவு தூரம் பேசுவதைக் கேட்டுப் பயந்து விட்டாயா? எச்சரிக்கையாக இருப்பதற்குத்தான் இவ்வளவும் யோசிக்கிறேனே ஒழிய இப்பொழுது காரியம் ஒன்றும் மிஞ்சிப் போய் விடவில்லே. காலம் வரும்போது நம் மனசு போலவே கிரமப்படி எல்லாம் நடக்கும் பார்'' என்றார் கல்யாணமய்யர். அவருக்குத் தாம் எதிர்பார்க்கும் காரியத்தைச் சாதித்துக் கொள்ளுவதில் ஏற்படக்கூடிய இடையூறுகளைப் பற்றி யோசிக்கும் நேரங்களில் மட்டும் சிறிது கலக்கமாக இருந்ததே ஒழிய மற்றப்படி இதர சமயங்களிலெல்லாம் காரிய சாதனை மிகச் சுலபமே என்று தோன்றியது. கிழவரின் சொத்து முழுவதும் தன்னிடம் வந்து சேருவது காலக்கிரமத்தில் நடக்க வேண்டிய சாதாரணமான மாற்றம் என்பதில் கல்யாணமய்யருக்குச் சந்தேகமே இருக்கவில்லை.

கல்யாணமய்யருக்கு அனுசரணையாக இருந்த விஷயங்கள் ஏராளம். கிழவருக்குப் பந்து நான் தாயாதி என்று சொல்லிக் கொள்வதற்குக் கல்யாணமய்யரையும் ராஜத்தையும் விட்டால் வேறு மனிதர்கள் கிடையாது. மனைவி என்ற பெயரில் அறுபது வருஷங்கள் அவரோடு இழைந்து வந்த பந்தம் ஒன்று கடைசி வரைக்கும் பயிர் விளைவிக்காத தரிசாகவே நின்று ஐந்து வருஷங்களுக்கு முன்னால் ஒரு நாள் அறுந்து போய் விட்டது. நாளைக்குத் திடீரென்று அவர் மண்டையைப் போட்டு விட்டாரானால் கல்யாணமய்யர்தான் நெருப்புச் சட்டியைத் தூக்கிக் கொண்டு முன்னால் நடந்தாக வேண்டும்.

தமக்கிருக்கும் இந்தச் சலுகைகளை வைத்துக் கொண்டு தன் குழந்தைச் செல்வங்களின் எதிர்காலச் சுபிட்சத்துக்காகக் கிழவரின் செல்வத்தை உரிமையோடு எதிர்பார்த்தார் கல்யாணமய்யர். இந்த உரிமையும் நெருக்கமும் கிழவி இருக்கும் வரையில் அவ்வளவாகக் கிடையாது. கிழவி போனதும் , கிழவருக்கு ஏற்பட்ட தன்னாமைதான் கல்யாணமய்யருக்குப் பல விஷயங்களில் அனுகூலமாக முடிந்தது. இந்த வருஷங்களில் கிழவரின் சொத்து விவரங்கள் முழுவதும் கல்யாணமய்யருக்கு

அத்துபடியாகி விட்டன. கிழவர், கல்யாணமய்யர் இரண்டு பேருமே அநாதி காலமாகப் பிரிந்து பிரிந்து வரும் பரத்துவாஜர் என்ற மகா விருக்ஷத்தின் இரு சிறு கிளைகள் என்றும், தலைமுறை தலைமுறையாக வரும் பக்கத்து வீட்டுக்காரர்கள் என்றும் கல்யாணமய்யருடைய தலையெழுத்து அவருக்குப் பிதுரார்ஜிதமாகக் கிடைத்ததெல்லாம் அவர் இப்போது வகிக்கும் கிராம கர்ணம் உத்தியோகம் தான். போதாததற்கு நான்கு குழந்தைகள் வேறு. கிழவர் கெட்டிக்காரர். பிள்ளைகுட்டி இல்லாததால் வாழைக் கொல்லை குத்தகைக்கு எடுத்து. தேங்காய் வியாபாரம் செய்து கிடைத்த சொத்தை விருத்தி செய்வதில் காலத்தைச் செலவு செய்தார். இப்போது அவருக்கு இருக்கும் சொத்தில் முக்கால் பங்கு சுயார்ஜிதம். அயனை நிலம் நாலு வேலி. கால் வகாரத்துக்கு ரொக்கம். வாழ்க்கையினுடையது மாதிரி சேமிப்பு நிலையங்களின் நிலையாமையை உணர்ந்து நான்கைந்து பாங்குகளில் பணத்தைப் போட்டிருந்தார் கிழவர்.

எத்தனை சொத்து இருந்தால் தான் என்ன? தனிக் கட்டை தானே! இந்த உண்மைதான் கல்யாணமய்யருக்கும் ராஜத்துக்கும் ஆறுதலாக இருந்தது. இந்த ஐந்து வருஷங்களாகக் கிழவருக்கு உதவி செய்யக் கிடைக்கும் ஒரு சிறு சந்தர்ப்பத்தைக் கூடத் தம்பதிகள் இருவரும் நழுவ விட்டதில்லை.

''பையனைக் காலேஜிலே சேர்க்கிறதுக்கு என்ன ஏற்பாடு பண்ணியிருக்கிறீர்கள்?''— என்று கேட்டாள் ராஜம்.

''நீ என்ன ஏற்பாடு பண்ணலாம் என்கிறாய்?'' என்று பதிலுக்குக் கேட்டார் கல்யாணமய்யர்.

''எடுத்த எடுப்பிலேயே ஐந்நூறு ரூபாயாவது வேண்டாமா? சம்பளம், ஸ்பெஷல் பீஸ், புஸ்தகம். முதல் முதல்லே காலேஜிலேபோகிற பையனை வேஷ்டியோட அனுப்ப முடியாது. 'பாண்ட்' தைக்கக் கொடுக்கணும். தினம் கும்பகோணம் போய் விட்டு வருவதற்குப் பஸ் சார்ஜ் கொடுக்க வேண்டும். ஹைஸ்கூல் பையன் மாதிரி சோற்று மூட்டை தூக்கச் சொன்னால் இனிமேல் கௌரவமாக இருக்காது. டிபனுக்கும் சில்லறை கொடுத்தனுப்பணும். எத்தனை இருக்கிறது? எல்லாவற்றுக்கும் போய்க் கிழவரைப் பார்த்து விட்டு வாருங்கள். இது வரைக்கும் எவ்வளவோ செய்திருக்கிறோம். ஆனால் அவரைக் காலணா கேட்டதில்லை'' என்றாள் ராஜம்.

''அசடு மாதிரி பேசாதே. கிழவருக்கு வர வரத் தள்ளாமை அதிகமாகி வரது. ஒரு வருஷக் கெடுதான் வச்சிருக்கேன். அதுக்குள்ளேயும் அவரே நம்ப தேவை தெரிஞ்சு கொடுப்பார் பார்'' என்றார் கல்யாணமய்யர்.

''கிழவர் தானே? நன்னாக் கொடுப்பார்.— நாக்கை நீட்டிண்டு இருங்கோ. அதான் அஞ்சு வருஷமாப் பார்த்துக் கொண்டிருக்கோமே. 'மகராஜியா இரு. மகராஜியா இரு'ங்கறதைத் தவிர, காலணாவுக்கு உருப்படியா பிரயோஜனம் கிடையாது'' என்றாள் ராஜம்.

''அப்படின்னா நேரேயே போய்க் கேக்கறது'' என்றார் கல்யாணமய்யர் ஒருமுடிவுக்கு வந்தவராக.

''என்னன்னு? 'பாலுவைக் காலேஜிலே சேர்க்கணும். பணம் கொடுங்கோன்னு?' கேட்கமாட்டேன் கௌரவம்போயிடும்னேனே சித்த முன்னாடி!''

''இப்ப மாத்திரம் என்ன? நானா போய்க் கேட்கப் போறேன்?'' என்ற கல்யாணமய்யர் பாலுவிடம் திரும்பி, ''டேய், இதோ பாரு. தாத்தாகிட்டே போயி இந்தப் பேப்பரைக் காட்டிட்டு சாஷ்டாங்கமா விழுந்து நமஸ்காரம் பண்ணு. 'என்னடா விசேஷம்? என்பார். 'எஸ். எஸ். எல். சி. பாஸ் பண்ணிட்டேன். காலேஜிலே சேரப் போறேன்னு சொல்லு. அதுக்கு என்ன பதில் சொல்றார்னு எங்கிட்டே வந்து சொல்லு'' என்றார்.

''அதிகப் பிரசிங்கித்தனமா அங்கே போய்ப் பணத்தைப் பத்தி ஏதாவது வாயைத் திறந்து வைக்காதே!'' என்று பிள்ளையை எச்சரித்தாள் ராஜம். பாலு போய் விட்டான்.

''இவ்வளவு வயசாச்சே, கொஞ்சமாவது இங்கிதம் தெரியறதான்னு பார்க்கறதுக்குத் தானே இந்த 'டெஸ்ட்'! 'ஏதுடா இவ்வளவு செஞ்சிருக்காளே, நம்மாலே இவர்களுக்கு என்ன பிரயோஜனம்னு? ஒரு நிமிஷம் யோசிக்கப் பார்த்தார்னா போதும். நமக்குக் காரியம் முடிஞ்ச மாதிரிதான். யோசிப்பார்ங்கிற நம்பிக்கை இருக்கு. நிச்சயமாக வெற்றியோடுதான் வருவான் பாரு'' என்று படிப்படியாக நம்பிக்கை கொடுத்த தைரியத்தில் பேசிக் கொண்டே போனார் கல்யாணமய்யர்.



பெற்றோர்கள் பேசிக் கொண்டிருக்கும் போதே ஐந்து நிமிஷங்களில் திரும்பி வந்த பாலுவிடம், ''என்ன ஆச்சு?'' என்று ஆவலோடு விசாரித்தாள் ராஜம்.

''பணம் ஒன்றும் கொடுக்கலே'' என்றான் பாலு. அவன் பதில் அசட்டுத்தனமாகப்பட்டது கல்யாணமய்யருக்கு.

"நமஸ்காரம் பண்ணினத்துக்கு என்னடா சொன்னார்?" என்று கேட்டாள் ராஜம்.

"'ஒங்க அப்பன் உன்னை ரொம்பச் சிரமப்பட்டுண்டு படிக்க வைக்கிறான். கண்டபடி ஊரைச் சுத்தாம சமர்த்தாகப் படிச்சு நல்லவன், கெட்டிக்காரன்னு பேர் வாங்கணும்னார்" என்றான் பாலு.

"வேறே ஒண்ணும் சொல்லலியா?" என்று கேட்டார் கல்யாணமய்யர்.

"ஊஹூம்" என்று பாலு தலையை ஆட்டினான்.

"இந்த ஆசீர்வாதம் இல்லேன்னுதான் இங்கே எல்லாரும் அழுதிண்டிருக்கறதாச் சொல்லிட்டு வரதுதானே?" என்றாள் ராஜம். அவளுக்கு எரிச்சலாக வந்தது.

கல்யாணமய்யருக்கு ஒரு நிமிஷம் மனம் தளர்ந்து போய் விட்டது. "நாம செய்ததெல்லாம் ஏன்தான் அவருக்குப் படலியோ? கொடுத்தனுப்புவார்னு தான் நெனைச்சேன்" என்றார் இறங்கிய குரலில். மறு நிமிஷமே தெம்பு வந்த முக மலர்ச்சியுடன் துண்டை எடுத்துத் தோளில் போட்டுக் கொண்டு, "ஊரிலேயே கிழவர் ஒருத்தர் கிட்டேதானா பணம் இருக்கு? இதோ அரை மணியிலே வந்து விடுகிறேன்" என்று கூறிவிட்டு எழுந்து வெளியே சென்றார்.

கல்யாணமய்யருக்கு ஐந்நூறு ரூபாய் பணம் புரட்டுவது அவர் நினைத்த அளவுக்குச் சிரமமானதாக இருக்கவில்லை. சொன்னபடி அரை மணியில் பணத்துடன் திரும்பிய கணவரைப் பார்த்து "ஏது பணம்?" என்று ஆச்சரியத்துடன் கேட்டாள் ராஜம்.

"வியாபாரி சாமிநாத முதலி கொடுத்தான். ஊரிலே பணம் வச்சிண்டிருக்கிற ஒவ்வொருத்தனும் நான் வந்து எப்ப கேட்பேன்னு காத்திண்டிருக்கானுக போலிருக்கு. கோவிந்தசாமி கேட்டே விட்டான். 'ஐயாவுக்கு எல்லாத்துக்குமே சாமிநாதன் தான். நான் ஒருத்தன் இருக்கிறேங்கிறதே அவருக்கு நெனைப்பு வர்றதில்லே'ன்னு. அவனுக்கு ரொம்பக் குறை. அதற்காக எத்தனை பேர் கிட்டே வாங்கறது? இப்ப சத்தியா நமக்கு வேண்டியது ஐந்நூறு தானே!" என்றார் கல்யாணமய்யர்.

"நல்லமுகராசிதான்" என்றாள் ராஜம் சிரித்துக் கொண்டே.

"முக ராசியாவது மண்ணாவது. சோழியன் குடுமி ஒண்ணும் சும்மா ஆடாது. புது வருஷத்துக்குக் கிழவரோட தென்னந்தோப்பைக் குத்தகை மாத்தியாக வேண்டாம்? கோவிந்தசாமிக்கு ரொம்ப நாட்களாகவே அதுலே ஒரு கண்ணு" என்று கூறினார் கல்யாணமய்யர். ராஜம் பணத்தை உள்ளே கொண்டு போய் வைத்தாள்.




நினைத்தது போல் பாலுவைக் காலேஜில் சேர்த்தாகி விட்டது. அவன் விருப்பத்துக்கிணங்க பஸ்ஸில் போக வேண்டாமென்று காலேஜ் சென்றுவருவதற்கு ஒரு புது சைக்கிள் வாங்கிக் கொடுத்ததுதான் கல்யாணமய்யர் திட்டத்தில் செய்த மாற்றம். இதற்கான இருநூறு ரூபாய் அதிகச் செலவைச் சமாளிப்பது கல்யாணமய்யருக்கு ஒன்றும் பெரிய காரியமாக இல்லை. பாலுவுக்குப் 'பாண்ட்' தைக்கும் போது செலவோடு செலவாக மீனுவுக்கும், சீனுவுக்கும் துணிமணிகள் வாங்கினார். சங்கரியின் விகிதம் தாவணியோடு ஒரு பட்டுப் பாவாடையே கிடைத்தது. ஆற்றில் தண்ணீர் வந்ததும் பள்ளிக்கூடங்களும், கல்லூரியும் திறந்ததும், பயிர்ச் செலவு ஆரம்பித்ததும் காலத்தின் போக்கு பழைய படி ஒழுங்குபட்டு விட்டது.

மூன்று வருஷங்கள்—கால வேகம் அடித்துக் கொண்டு போன சுவடே தெரியவில்லை. போய் விட்டன. இந்த நாட்களில் சங்கரி பெரியவளானது ஒன்றுதான் கல்யாணமய்யரும் ராஜமும் எதிர்பார்த்தவற்றுள் நடந்த ஒரே காரியம். பாலு பி. ஏ. இரண்டாவது வருஷம் படித்துக் கொண்டிருந்தான். கிழவரிடம் வயது எழுபத்தி ஒன்பதிலிருந்து எண்பத்திரண்டான அருவமான மாற்றத்தைத் தவிர வேறெதுவும் கிடையாது. 'இழுத்துப் பறிச்சிண்டு சதாயுக இருக்கும் போலிருக்கே?' என்று அடிக்கடி சலித்துக்கொண்டாள் ராஜம்.

ஒரு வெள்ளிக்கிழமை சாயந்திரம்

கிழவா வீட்டிலிருந்து அவசரம் அவசரமாக வந்த ராஜம், ''கேட்டேளா அதிசயத்தை? இன்றைக்கு நான் நமஸ்காரம் பண்ணின உடனே சங்கரியும் பண்ணிவிட்டு எழுந்திருந்தாள். கிழவருக்கு என்ன தோன்றியதோ என்னமோ, உங்கள் பேரைச் சொல்லி, பொண்ணுக்கு ஏதாவது வரன் கிரன் பார்த்திண்டிருக்காளா என்றார் அவர்'' என்றாள்.

''அவராகவேவா...?''

''ஆமாம்'' என்றாள் ராஜம்.

''நீ அதுக்கு என்ன சொன்னே?''

''பார்த்துக் கொண்டுதான் இருக்கிறார். இருந்து இருந்து வீட்டிலே முதல் சுபகாரியம் நடக்கப் போகிறது. 'கொஞ்சம் காசு பணம் கூடச் செலவழிஞ்சாலும் நல்ல இடமாகப் பாக்கணும்னுதான் அவருக்கு ரொம்ப ஆசை' என்றேன்.''

''அதுக்கு என்ன சொன்னார்?'' என்று கேட்டார் கல்யாணமய்யர்.

''பின்னே? நல்ல இடமாகத்தான் பார்க்கணும். கல்யாணங்கிறது ஆயிரங் காலத்துப் பயிர் இல்லையோன்னார்.''

''வேறே ஒண்ணும் சொல்லலியா?''

''இல்லே!'' என்ற ராஜம் கூடவே, ''நம்ப நோக்கம் என்னங்கறது தெரியட்டும்னுதான் கொஞ்சம் பொடிவச்சே பேசிவிட்டு வந்தேன்'' என்றாள்.

''செய்த வரைக்கும் சரி'' என்று அதை ஆமோதித்தார் கல்யாணமய்யர். கடந்த இரண்டு மாதங்களாகவே சங்கரியின் கல்யாணத்தை முன்னிட்டு நான் தவறாமல் அலைந்து கொண்டிருக்கிறார் அவர். இப்போது கிழவர் அக்கறையோடு விசாரித்தார் என்பது தெரிய வந்த போது அவருக்குக் கொஞ்சம் நிம்மதியாக இருந்தது. இதற்கு உடனடியான பலன் ஏதாவது இருக்கும் என்று எதிர்பார்த்தார்.

கல்யாணமய்யருடைய இந்த நம்பிக்கையின் ஆயுட் காலம் ஒரு வார காலம் தான். தானாக நினைத்துக் கொண்டது நிறைவேறவில்லை என்பதற்காகக் கிழவர் மீது தப்பபிப்பிராயத்தை ஏற்படுத்திக்கொள்ள அவர் விரும்பவில்லை. இந்நம்பிக்கை வேறு விதமாக அவருக்குள் துளிர்த்த அன்றுதான் பிள்ளை வீட்டார் வந்து சங்கரியைப் பெண் பார்த்து விட்டுப் போனார்கள். பையனுக்குப் பெண்ணைப் பிடித்து விட்டதாக உடனேயே தெரிவித்து விட்டதில் கல்யாணமய்யரை விட ராஜத்துக்குத்தான் அதிக சந்தோஷம். கிழவரிடமிருந்து உதவி கிடைப்பதற்குப் பிள்ளை வீட்டார் சம்மதம் சொல்லி விட்டுச் சென்றபடி கடிதம் மூலம் சம்மதம் தெரிய வரும் நாள் வரை கெடு வைத்திருந்தார் கல்யாணமய்யர். கெடு தாண்டிவிட்டது. கடிதம் வந்துவிட்டது. அதன் வாசகத்தைக் கலக்கமில்லாத சந்தோஷத்தோடு அவரால் அனுபவிக்க முடியவில்லை. மேற்கொண்டு என்ன செய்வது என்பதுதான் அவருக்குப் பிரச்னை!

''நாமாக் கொண்டு போய்க் கொடுத்தால் கௌரவக் குறைச்சல். அவளு வந்து கேட்கட்டும். கொடுப்போம்னு இருக்காரோ, என்னமோ?'' என்று ராஜம் யோசித்து விட்டுக் கூறியதுதான் கல்யாணமய்யருக்குப் பொருத்தமாகப் பட்டது.

கிழவர் வீட்டுக்குப் போய்விட்டுத் திரும்பி வந்தவர் ஆவலோடு இருந்த ராஜம் பேச்சை ஆரம்பிப்பதற்கே இடம் வைக்கவில்லை.

''எதுலேயும் பட்டுக்கறுப்பலேயே இல்லே, அவர் பேச்சு'' என்றார் கல்யாணமய்யர் காத்து இறங்கிய குரலில்.

''ஏன், ஏன்? என்ன சொன்னார்?'' என்று கேட்டாள் ராஜம்.

''சொல்றது என்ன? இந்த மாதிரி, சங்கரிக்குக் கல்யாணம் நிச்சயம் பண்ணலாம்னு இருக்கேன் மாமா, என்றேன். 'செய்யி செய்யி. ஊரிலே மேளச் சத்தம் கேட்டே நாலைஞ்சு வருஷமாறது' என்றார்.''

''அவா சீர் செனத்திக்கெல்லாம் லிஸ்டு போட்டு அனுப்பிச்சிருக்காளே, அதைக் காட்டறது தானே!''

''எங்கே காட்டறது? கண்ணும் தெரியாது ஒண்ணும் தெரியாது. படிச்சே சொன்னேன். 'இதுவரைக்கும் ஏழாயிரம் ரூபாய் ஆறது மாமா. இதைத் தவிர கல்யாணச் செலவு வேறே இருக்கவே இருக்கு. எல்லாம் தலைக்கு மேலே போய்விடும் போலே இருக்குங்கிறதையும் சொல்லிவிட்டேன்.''

''அதுக்கு என்ன சொன்னார்?''

''ஜமாய்டா. அஞ்சாறு பொண்ணு வச்சிண்டிருக்கே, ஆண்டி ஆயிடுவோமோன்னு பயப்படறத்துக்கு? இருக்கறதே ரெண்டு. மீனுக்குட்டியைப் பத்தி நினைக்கறத்துக்கு இன்னும் ஏழெட்டு வருஷம் போகலாம்னார்.''

ராஜத்துக்கு ஆழமாகப் பெருமூச்சு வந்தது.

''அப்போ வேறே வழி? நான் சொல்றபடி வேணு செய்க பாருங்களேன். 'நான் ஓட்டாண்டி. எங்க வீட்டுப் பெண்ணை இறுமாக் கல்யாணம் பண்ணிக்கிறேனான்னு பிள்ளையைப் பெத்தவரை ஒரு வரி எழுதிக் கேட்டு விடுங்கோ.'' கவலையெல்லாம் நிஷ்டூரமாகிப் பேசினுள் ராஜம்.

''இதோ பார். இப்பொழுது ஒன்னும் குடி முழுகிப் போய் விடவில்லே. கோவிந்தசாமியை வழியிலே கண்டு சாயந்திரமா வந்து பாக்கறதாச் சொல்லி விட்டு வந்திருக்கிறேன். எல்லாம் நல்லபடியா நடக்கும் பாரு'' என்றார் கல்யாணமய்யர்.

''நீங்க எந்தச் சாமியைப் போய்ப் பார்ப்பேளோ, எனக்குத் தெரியாது. இந்த இடத்தை முடிச்சு இந்த மாசக் கடைசியிலே கல்யாணத்தைப் பண்ணியாகணும்'' என்று தீர்மானமாகச் சொன்னுள் ராஜம்.

கல்யாணமய்யருக்கும் கவலையாகத்தான் இருந்தது. ராஜத்தைச் சமாதானப்படுத்துவதற்காகச் சொன்னரே தவிர, உண்மையில் அவர் கோவிந்தசாமியைப் பார்க்கவில்லே. ஆனால் அவனைத்தான் போய்ப் பார்ப்பதாக இருந்தார். ஆற்றில் தண்ணீர் வந்ததும் தென்னந்தோப்போடு வாழைக் குலைக் குத்தகையும் இந்த வருஷம் மாற்றியாக வேண்டும். 'கோவிந்தசாமிக்குச் சாதகமாகக் காரியத்தை முடித்துக் கொடுத்தால் நமக்கும் காரியம் நடக்கும்' என்று எண்ணிக் கொண்டார் கல்யாணமய்யர். 'இதில் தவருன நோக்கம் எதுவும் இடையாது. கடனுக் கிடைப்பது தான் பிரதி ஆதாயம். இருந்தாலும் நமக்குத் தேவையான தொகை ஏழாயிரம் ரூபாய் என்பது ஞாபகத்துக்கு வந்தபோது கல்யாணமய்யர் கொஞ்சம் கலங்கினுர். 'அவ்வளவு பெரிய தொகையை நம்பிக் கொடுப்பானு?' என்று சந்தேகப்பட்டார். இருந்தாலும் காரியம் நடந்தாக வேண்டுமே. அந்தத் தொகையை வாங்கிக் கொள்வதைத் தவிர வேறு வழியில்லே.

சங்கரிக்கும் பிராப்தம் இருந்தது. 'சங்கரி அதிர்ஷ்டக்காரிதான்' என்று கோவிந்தசாமி பணத்தை எண்ணிக் கொடுக்கும் போது நினைத்துக் கொண்டதைப் பணத்தோடு வரும் வழியிலும் நினைத்துக் கொண்டார் கல்யாணமய்யர். அப்போது, 'வீட்டுக்குப் போனும் இதற்குள் கிழவரிடமிருந்து வந்ததாக ராஜம் ஏதாவது தகவல் சொல்லுவாளோ?' என்று தயங்கியதும் அவர் ஞாபகத்துக்கு வந்தது. 'என்ன யோசிக்கிறீங்க?' என்று கோவிந்தசாமி கேட்டதற்கு, 'நோட்டு எப்ப எழுதிக் கொடுக்கறதுன்னு...' என்று இழுத்தாற் போல் பேசி மழுப்பி விட்டார். 'கல்யாண வேலே ஒங்களுக்குத் தலைக்கு மேலே இருக்க நப்ப நோட்டு எழுதிக் கொடுக்கறத்தைப் பத்தி என்னங்க நெனப்பு? எல்லாத்தையும் நல்லபடியா முடிச்சிட்டுச் சாவகாசமா வாங்க. யாரும் எங்கேயும் ஓடிப் போயிடப் போறதில்லே!' என்று கோவிந்தசாமி தம்மை நம்பிய தெம்பில் வரும்போது கூட, தான் அவசரப்பட்டு விட்டோமோ என்று சந்தேகமாயிருந்தது கல்யாணமய்யருக்கு.

வீட்டுக்கு வந்ததும் கல்யாணமய்யரின் குழப்பங்களெல்லாம் தெளிந்துவிட்டன. கிழவரிடமிருந்து ஒரு தகவலும் இல்லே என்று ராஜம் சொன்னுள். ஒரு வாரத்துக்குப் பிறகும்ஒன்றுமில்லே. மறுநாள் காலே கல்யாணப் பத்திரிகையை எடுத்துக் கொண்டு போய் 'தங்கள் மேலான வரவை அன்புடன் எதிர் பார்ப்பவர்'களுள் கிழவர் பெயர் முதலில் இருப்பதையும் படித்துச் சொல்லி விட்டு வந்தார். அப்போது, ''எனக்கு வரத் தள்ளாதுடாப்பா. மாங்கல்ய தாரணம் ஆனவுடனே குழந்தையையும் மாப்பிள்ளையையும் அழைத்துக் கொண்டு வா'' என்று கிழவர் விரும்பியதை ராஜத்திடம் தெரிவித்துவிட்டு, ''மறந்துடாமல் நீயே அழைத்துக்கொண்டு போய் நமஸ்காரம் பண்ணச் சொல். இல்லேன்னு ஏதாவது வித்தியாசமாக நினைக்கப் போகிறார்'' என்றார் கூடவே.

''நமஸ்காரத்துக்கு என்ன வேணுங்கறது'' என்றுள் ராஜம்.

''அப்போ ஒதியிடறத்துக்குப் பணம் கொடுத்தாலும் கொடுப்பார்னு நினைக்கிறேன். கொடுத்தா எங்கிட்டே ஆசீர்வாதத்தின்போது ஒரு வார்த்தை ஞாபகப்படுத்து. சாஸ்திரிகளைப் பெரிய வாக்கியமாச் சொல்லச் சொல்லணும். பெரிய தொகை இல்லேயா?'' என்றார் கல்யாணமய்யர்.

❦ ❦ ❦

சங்கரியின் கல்யாணம் விமரிசையாக நடந்தது. கல்யாணச் சந்தடியில் கிழவர் விரும்பியபடி தம்பதிகளை அழைத்துக் கொண்டு போவதற்கு மறந்து விடப் போகிறது என்று நான்கு ஐந்து பேர்களிடம் தாலி கட்டியானதும் தமக்கு ஞாபகப்படுத்தும்படி சொல்லியிருந்தார் கல்யாணமய்யர். 'நாம் கொடுப்பது நாலு பேருக்குத் தெரியாணேன்?' என்று நினைத்தே இந்தச் சந்தர்ப்பத்தைக் கிழவர் ஏற்படுத்திக் கொண்டிருப்பார் என்பதில் கல்யாணமய்யருக்குச் சந்தேகமே இடையாது. தம்பதிகளோடு தான் போவதைவிட ராஜம் போவதே நல்லது என்று நினைத்ததால் காலேயிலிருந்து மறந்து விடாமல் இருக்கும்படி ராஜத்தை நான்கைந்து முறைகள் எச்சரித்து விட்டார் அவர். ராஜத்திடம் அவர், ''போய் விட்டு வந்து என்ன சொன்னுரோ அதை எங்கிட்டே வந்து சொல்லு'' என்று பிரத்தியேக





'கோபாலா! நீ என் அத்யந்த சிநேகிதன் இல்லையா? பணத்தை யெல்லாம் பாங்கிலே கட்டிவிட்டேன். ஒரு பத்து ரூபாய் பணம் இருந்தால் கொடேன்!''

''சரி, தரேன். ஆனால் நீ அதையும் பாங்கியில் கட்டிவிட மாட்டாயே!''

---

மாகச் சொன்னதற்கு, ''என்ன கொடுத்தாரோ அதை எங்கிட்டே கொண்டு வந்து கொடு'' என்று தான் அர்த்தம்.

❖ ❖ ❖

மாங்கல்யதாரணம் ஆனவுடன் கிடைத்த சிறிது நேரத்தை வாசல் திண்ணையில் விரிக்கப் பட்டிருந்த ஜமுக்காளத்தில் அமர்ந்து கல்யாணத்துக்கு வந்திருந்தவர்களுடன் பேசுவதில் செலவிட்டுக் கொண்டிருந்த கல்யாணமய்யர் ராஜம் சங்கரியையும் மாப்பிள்ளையையும் அழைத்துக் கொண்டு பக்கத்து வீட்டுக்குப் போனதைக் கவனிக்கவில்லை. திரும்பி வரும் போதுதான் கவனித்தார். இரண்டு பேரையும் முன்னால் விட்டு விட்டுப் பின்னால் வந்து கொண்டிருந்த ராஜம் கல்யாணமய்யருக்கு மட்டும் தெரியும்படி உதட்டைப் பிதுக்கி விட்டு உள்ளே வரும்படி சைகை காட்டி விட்டு உள்ளே சென்றாள்.

ரேழியில் நின்று கொண்டிருந்தவளிடம் சென்று, ''ஏன்? என்ன ஆச்சு?'' என்று விசாரித்தார் கல்யாணமய்யர்.

''எனக்கு மனசு என்னவோ போல் ஆயிடுத்து'' என்ற ராஜத்தின் குரல் கம்மியிருந்தது. புடவைத் தலைப்பால் முகத்தை அழுத்தித் துடைத்துக் கொண்ட போது மூக்கையும் உறிஞ்சிக் கொண்டாள் அவள்.

''என்ன நடந்தது? சொல்லேன்.''

''நாங்க போன உடனே கிழவர், 'கெட்டி மேளச் சத்தம் காதிலே விழுந்தது. கொஞ்ச நேரத்திலே குழந்தைகளை அழைச்சிண்டு வந்து விடுவேன்னு எதிர்பார்த்திண்டிருந்தேன். ஏன் 'அவன் வரல்லியா?'ன்னார்''

''காரியமாக இருக்கறதாச் சொல்றது தானே?'' என்றார் கல்யாணமய்யர்.

''சொன்னேன். படுத்திண்டபடியே தான் பேசினார். எழுந்திருந்து ஒக்காந்துக்கணும்னு ஆசை. முடியலே. சங்கரியும் மாப்பிள்ளையுமாத்தான் கைத் தாங்கலா எழுப்பிச் சுவரிலே சாத்திவைப்பபிலே ஒக்காத்தி வச்சுட்டு நமஸ்காரம் பண்ணிப்பிட்டு ஜோடியா எழுந்திருந்தா. கிழவருக்கு என்ன தோணித்தோ என்னமோ? ரெண்டு பேரையும் அருகில் வரச் சொல்லி ரெண்டு கையாலேயும் அணைச்சிண்டார். சங்கரி தலையைத் தடவிக் கொடுத்துண்டே, 'தீர்க்க சுமங்கலியா இருக்கணும் குழந்தே! ஒங்க அப்பா அம்மா மாதிரி மாப்பிள்ளையோட என் மாதிரி அனாதைகளுக்கெல்லாம் உதவி செஞ்சிண்டு இரு. பகவான் ஒங்களுக்கு ஒரு குறையும் வைக்க மாட்டான்.' மேலே பேச முடியல்லே. குரல் அடைச்சிண்டுடுத்து. கண்ணுலே ஜலம் ஜலமாக் கொட்டிட்டார். உள்ளே நுழைஞ்ச போதே அவர் தனியாத் திண்ணையிலே கிடக்கிறதைப் பார்த்ததும் எனக்கு என்னவோ போல இருந்தது. இப்படி அவர் அழுததும் எனக்கும் மனசு தாங்கலே. அழுது விட்டேன்.'' ராஜம் இப்போதும் அழுதாள்.

கல்யாணமய்யருக்கு மனசுக்குள் என்னவோ புரண்டது.

''அவ முகத்துக்கு நேரே சொல்லக்கூடாது. இருந்தாலும் மனசு தாங்கலே, சொல்றேன். மாப்பிள்ளே! உங்க மாமனாரையும், மாமியாரையும் லேசுப்பட்டவாளா நினைச்சுடாதே! அந்த மாதிரிப் பரோபகாரிகள் இல்லேன்னு அவ போன அடியோட ஆதரவில்லாம நாலும் போய் அந்த இடத்திலே புல்லு கூட முளைச்சிருக்கும்னுட்டு குழந்தை மாதிரிக் கேவிக் கேவி அழுதார்.'' ராஜம் கண்களைத் துடைத்துக் கொண்டாள். கல்யாணமய்யருக்கு நெஞ்சு தழுதழுத்தது. அவருக்குப் பேசவே தோன்றவில்லை.

கல்யாணமய்யர் விரும்பியதெல்லாம் கிழவரிடமிருந்த பணம் என்ற மகாசக்தியின் உதவியைத்தான். அது நேரிடையாகக் கிடைத்தால் தான் உண்டா என்ன? மறைமுகமாகக் கிடைத்து அதனால்தான் காரியங்களெல்லாம் நடந்திருக்கின்றன என்பதில் கல்யாணமய்யருக்கு இப்போது சந்தேகமே கிடையாது. இல்லா விட்டால் அவரை நம்பி யார் பத்தாயிரம் ரூபாய் கடன் கொடுப்பார்கள்?

''நேரமாயிடுத்து. பாயஸம் கேட்டார். கொண்டு போய்க் கொடுத்துவிட்டு வரேன். கல்யாணச் சந்தடியிலே பதினைஞ்சு நாளா அவரைச் சரியாகவே கவனிக்கவில்லே'' என்று ராஜம் உள்ளே சென்ற பிறகு கல்யாணமய்யர் திண்ணைக்கு வந்தார்.

பேச்சு வாக்கில் கிழவருக்கும் அவருக்கும் உள்ள தொடர்பு தெரிந்த ஒருவர், ''கல்யாணத்துக்குக் கிழவரோட 'காண்ட்ரிபூஷன்' எவ்வளவு?'' என்று கேட்டதற்கு, ''கல்யாணமெல்லாம் அவராலே தான் நடக்கிறது!'' என்று பதில் சொன்ன கல்யாணமய்யரின் குரலில் நிதரிசனமான உண்மையைச் சொல்லும் தயக்கமற்ற சாதாரணத் தன்மை தான் நிறைந்திருந்தது.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor. T. Sadasivam

முதுகுவலியால்
அவஸ்தைப்
படும்போது . . .








பிறகு . . .
"என் முதுகுவலி போன இடமே தெரியலை—அடடா! ஸாரிடான் முன்னமேயே சாப்பிடாமல் போனேனே !"

# ஸாரிடான் 'ரோஷ்'

## வலியைப் போக்குகிறது. ஆசுவாசப்படுத்துகிறது, புத்துணர்ச்சியூட்டுகிறது

ஸாரிடான், வலிகளிலிருந்தும், நோவுகளிலிருந்தும், துரிதமாக, நிச்சயமாக கெடுதல் எதுவுமின்றி, நிவாரணம் அளிக்கிறது. உடல்வலி, தலைவலி, பல்வலி, ஜுரம் வரும்போலிருப்பது, சாதாரண உடல்கோளாறுகள் இவற்றிலிருந்து நிவாரணம் பெற ஸாரிடான் சாப்பிடுங்கள்.




ஒரே வில்லை போதும்
ஒரு வில்லை 13 நயா பைசா

பெரியவர்களுக்கு: 1 வில்லை.
குழந்தைகளுக்கு:
¼ லிருந்து ½ வில்லை வரை.

'ரோஷ்' தயாரிப்பு
ஸோல் டிஸ்ட்ரிபியூட்டர்கள்:
வால்டாஸ் லிமிடெட்

JWT/VT-3524

